# அழகுத் தெய்வம்



தமிழில் :
அ. சிங்காரவேலு

கலைஞன் பதிப்பகம்
தியாகராய நகர் : : சென்னை-17

முதற் பதிப்பு :
அக்டோபர் '64

விலை ரூ. 2-50

பாரதம் பிரஸ்,
சென்னை-17.

# அழகுத் தெய்வம்

முதலிய கதைகள் :

மாப்பசான்
மாக்ஸிம் கார்க்கி
பால்ஸாக்
ஆகஸ்ட்ஸ் டின்பர்க்
காதரைன் மான்ஸ்பீல்ட்
பியு. சங். லிங்
பியோடர் சொலோகப்
டிரான்-வான்-டங்



# முன்னுரை

இந்தக் கதைத் தொகுதியில் இடம் பெற்றுள்ள கதைகள் சிந்தனே, சக்தி, வசந்தம், மாதமணி, கங்கை ஆகிய பத்திரிகைகளில் வெளிவந்தவை. அவற்றின் ஆசிரியர்களும், அரிய நேரத்தையும் பொருட்படுத்தாது, அவற்றைத் தேடித்தந்து உதவிய கோவை நண்பர் திரு. டி. சி. ராமசாமி அவர்களுக்கும், நாகை நண்பர் திரு. ஆ. ராமசாமி அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்

பொரவச்சேரி அ. சிங்காரவேலு
*27—10—'64*

# அழகுத் தெய்வம்

மாப்பசான்

சில வருடங்களுக்கு முன்பு பிரானிஸாவில் பிரபலமான யூத மதகுரு ஒருவர் இருந்தார். அவரது கடவுள் பக்தி, கல்வி, ஞானத்தைக் காட்டிலும் அவருக்கு ஓர் அழகிய மனேவி வாய்த்த வகையில் அவருக்கு புகழ் அதிகமாக இருந்தது. பிரானிஸாவின் அழகுத் தெய்வம் என்று அவளேச் சொல்லலானுர்கள். அதற்கேற்ப அவள் அவ்வளவு நிகரற்ற அழகுடன் விளங்கிஞள். பொதுவாக யூத தத்துவ ஞானிகளின் மனேவியர்கள் அநாச்சாரமாக இருப்பார்கள்' அல்லது, ஏதேனும் உடற்கோளாறுள்ளவர் களாகவே இருப்பார்கள்.

யூத வேத நூல் அதைப் பற்றிக் கீழ்க்கண்ட விதம் சொல்கிறது: திருமணங்கள் பரலோகத்திலேயே நிச்சயம் செய்யப்பட்டுவிடுகின்றன. குழந்தை ஜனனமானதும், தெய்வீகக் குரல் அதன் வருங்கால மனேவியின் பெயரைச் சொல்லிக் கூப்பிடுகிறது: ஆனுல் ஒரு நல்ல பிதா நல்ல உடைகள் வீட்டிலிருக்கும் பொழுது குழந்தைகளுக்கு பழைய உடைகளேயே உடுத்திக்கொடுக்கின்றுன். அதுபோல ஆண்டவன், மனிதர்கள் கவனிக்காத யூத ஸ்திரிகளுக்கு அவர் கொடுத்து உதவுகிருர்.

சரிதான். கடவுள் இந்த யூத ஞானிகளுக்கு மட்டும் விதி விலக்கு அளித்துவிட்டு ஓர் அழகுத் தெய்வத்தை அவருக்கு கொடுத்திருக்கின்ருர். அது ஒருக்கால், இந்த விதிவிலக்கின் மூலம் அதைப் பற்றி இலகுவாக தோன்றச் செய்வதற்காக இருந்தாலும் இருக்கலாம்!

அந்த ஞானியின் மனைவி நல்ல உயரம். பிரமனின் அதியற்புதமான ஓர் அழகுச் சிருஷ்டியைப் போன்றிருந்தாள். அவளது பெரிய கருவிழிகள் சோகத்துடன் காணப்பட்டன. அவளது அழகிய கரங்கள் தந்தத்தால் செதுக்கப்பட்டதைப் போன்று, அவ்வளவு அழகுடன் காணப்பட்டன.

அந்த அழகு ராணி, கவிஞனின் பேனாவிற்கும், சிற்பியின் உளிக்கும், ஓவியனின் தூரிகைக்கும் வேலை கொடுத்து, பல அடிமைகளை அவள் காலடியிலே கிடக்கச் செய்து, கம்பீரமாக கொலு வீற்றிருக்க வேண்டியவள். ஆனால், அங்கே ஏதோ பறித்த மலரைப் போன்று இருந்து வரலானாள். நல்ல விலையுயர்ந்த ஆடைகளை உடுத்துக்கொண்டு, நாள் பூராவும் தெருப்புறத்தே பார்த்தபடி சதா உட்கார்ந்து கொண்டே யிருப்பாள்.

அவளுக்கு குழந்தைகள் கிடையாது. அவள் கணவன், அந்தத் தத்துவஞானி காலை முதல் இரவு நடுச் சாமம் வரை சதா படித்துக்கொண்டும், பிரார்த்தனை செய்துகொண்டுமே இருப்பார். அவளுக்கு நல்ல செல்வமிருந்தது. அவள் எஜமானி அவளே. அவள் வீட்டு வேலைகள் எதுவும் கவனிக்க மாட்டாள். எல்லாம் தானாகவே கடிகாரம் போன்று ஓடிக் கொண்டிருக்கும். அவளைப் பார்க்க யாரும் அங்கே வர மாட்டார்கள். அவரும் வீட்டைவிட்டு வெளியே செல்ல மாட்டார். நாள் பூராவும் உட்கார்ந்து கொண்டே கற்பனை உலகில் ஆசைக் கனவுகள் கண்டு கொண்டிருப்பார்கள்.

ஒரு நாள் பயங்கரப் புயலும், இடியும், மின்னலும் அந்த நகரத்தையே கிடுகிடுக்கச் செய்துவிட்டது. எல்லா ஜன்னற் கதவுகளும் தேவ தூதன் உள்ளே வருவானென்று திறந்த படியே வைக்கப்பட்டிருந்தன. அந்த யூத அழகி வழக்கம் போலவே சாய்வு நாற்காலியிலே சாய்ந்துகொண்டு ஏதோ ஆலோசித்தவாறிருந்தாள். சடக்கென்று, வேதம் படித்துக் கொண்டிருந்த அவள் புருஷன் பக்கம் திரும்பி,

“ஆமாம், தாவீதின் குமாரன் கிறிஸ்து எப்பொழுது வருவார்?'' என்று கேட்டாள்.



அந்தத் தத்துவ ஞானி, ''யூதர்கள் எல்லாரும் புண்ணிய வான்களாகவோ, அல்லது பாபிகளாகவோ ஆகும்போது அவர் வருவார் என வேதம் கூறுகிறது'' என்று பதிலளித் தார்.

''யூதர்கள் எப்போதாவது புண்ணியவான்களாவார்கள் என்று நீங்கள் நம்புகிறீர்களா?'' என்றாள் அந்த அழகு ராணி.

“அதை நான் எப்படி நம்ப முடியும்?''

''அப்படியானால் யூதர்களெல்லோரும் பாபிகளாகும் போதுதான் தேவ குமாரான் வரக்கூடும்.''

தத்துவ ஞானி பதில் சொல்லவில்லை. தோளைக் குலுக் கிக்கொண்டு மீண்டும் அந்த வேத நூலில் கவனத்தைச் செலுத்தி, அதிலேயே ஐக்கியப்பட ஆரம்பித்தார். அந்த அழகணங்கு ஜன்னல் வழியாக இருண்ட வானைபார்த்துக் கொண்டிருந்தாள்.

ஒரு நாள், அந்த யூத தத்துவ ஞானி ஆகம விதிகளைப் பற்றிய ஓர் பிரச்னையை தீர்க்கும் பொருட்டு பக்கத்து ஊருக்கு சென்றிருந்தார். அவரது சிறந்த கல்வி ஞானத்தால், அவர் எதிர்பார்த்ததைக் காட்டிலும் வெகு சீக்கிரத்திலேயே அந்த பிரச்சினை தீர்ந்துபோய் விட்டது. எனவே மறுநாள் காலை திரும்பி வருவதாகச் சொல்லிப் போன அவர். அன்று மாலையே அவர் நண்பருடன் திரும்பலானார். அந்த நண்பரின் வண்டியிலேயே வந்து, அந்த நண்பர் வீட்டருகில் வண்டியை விட்டிறங்கி, தன் வீட்டிற்கு கால்நடையாக வரலானார். அங்கே வீட்டில் ஜன்னற் கதவுகள் வழியாக தெரியும் வெளிச்சம் உள்ளே ஜெகச்சோதியாக இருப்பதையும், ஓர் அதிகாரியின் வேலைக்காரன் வீட்டு வாசலில் ஜோராக புகை குடித்துக்கொண்டு நிற்பதையும் கண்டதும், மிக்க ஆச்சரிய முற்றவராய், அவ்வேலைக்காரனைப் பார்த்து அன்புடன் கேட்டார்.

"நீங்கள் இங்கே என்ன செய்து, கொண்டிருக்கின் றீர்கள்?"

அந்த வேலைக்காரன் பதிலுக்கு "இந்த யூத அழகு ராணி யின் புருஷன் எதிர்பாராத விதமாக திடுதிப்பென்று வரு கிறாரா எனக் கவனித்துக் கொண்டிருக்கிறேன்," என்றான்.

"நிஜமாகவா! நல்லது கவனமாய் பார்த்துக் கொண்டிரு" என்றார்.

இதைச் சொல்லிவிட்டு அந்த தத்துவ ஞானி வெளியே செல்பவரைப் போல் பாசாங்கு செய்து பின் தோட்டத்தின் வழியாக உள்ளே வரலானார்.

அவர் முதற் கட்டில் காலெடுத்து வைத்தும், அங்கே இரு வருக்கான ஒரு மேஜை போடப்பட்டிருப்பதைக் கண்டார். அவர் மனைவி. எப்பொழுதும்போல் படுக்கை அறையில் உட் கார்ந்திருந்தாள். அவள் கன்னங்கள் சந்தேகிக்கத் தக்கவாறு சிவந்து போயிருந்தன. அவள் கருவிழிகள் மகிழ்ச்சியுடனும், பிரகாசத்துடனும் காணப்பட்டன. அந்த சமயத்தில் அவர் காலில் ஏதோ தட்டுப்படவும், அது ஓர்வித் சத்த முண்டாக்கி யது. அவர் குனிந்து அதை எடுத்து வெளிச்சத்தில் பார்க்க லானார். ஒரு ஜோடி குதிமுள்.

"இங்கே உன்னுடன் யார் இருந்தது?" என்றார் அந்த யூத ஞானி.

யூத அணங்கு பதிலுக்குத் தோள்களை குலுக்கலானாள். பதில் சொல்லவில்லை.

"நான் சொல்லட்டுமா? ஹீஸார் காட்டன்தான் உன்னுட னிருந்தது."

அவள் மேலங்கியை எடுத்துக்கொண்டே, "அவர் ஏன் இங்கே என்னுடன் இருக்கக் கூடாது?" என்றாள் ஒய்யாரமாக.



இதைக் கேட்டதும் யூத ஞானிக்குத் தூக்கி வாரிப் போட்டது. கொஞ்சம் கடிந்த குரலில். "உனக்கென்ன புத்தி சரியில்லையா?" என்றார்.

"நான் நல்ல புத்தியுடன்தான் இருக்கிறேன். ஆனால் தேவ தூதன் வந்து ஏழை யூதர்களாகிய நம்மை விடுவிக்க நானும் என் கடமையைச் செய்யக் கூடாதா?" என்றாள் பதிலுக்கு. புன்சிரிப்பு அவளது சிவந்த அதரங்களில் ஓடி விளையாடியது.

# 'மேக்கர் சோத்ரா'

மாக்ஸிம் கார்க்கி

கடலிலிருந்து வரும் ஜில்லென்ற குளிர்ந்த காற்று அந்தச் சமவெளியின் மீது வீசிக்கொண்டிருந்தது. அந்தக் கடலோரத்தேயுள்ள புதர்களிலிருந்து 'உஸ்' என்ற காற்றின் இரைச்சலும் கடலின் ஓயாத அலைகளின் பேராரவாரமும் அங்கே கேட்டுக்கொண்டிருந்தன. அடிக்கொருதரம் வீசி அங்குள்ள மஞ்சள் தழைகளைப் பறக்கடித்து, அவற்றை மங்கிக்கொண்டிருந்த அந்த கணப்பில் கொண்டு வந்து தள்ளிக் கொண்டிருந்தது காற்று. இலையுதிர் காலத்தின் அந்த இரவின் மையிருட்டு வலது பக்கத்திலேயுள்ள எல்லையற்ற கடலையும், இடது பக்கத்திலேயுள்ள முடிவு காண முடியாத சமவெளியையும், கொஞ்சநேரம் காண்பித்து எங்களைச் சூழ்ந்து நின்ற நடுக்கத்தையும் பய உணர்ச்சியையும் நீக்கிக்கொண்டிருந்தது.

எனக்கு எதிரே நாடோடிக் கிழவனான மேக்கர் சோத்ராவின் உருவம் இருந்தது. அவன், நாங்கள் உட்கார்ந்திருந்த இடத்திற்கு சுமார் ஐம்பது தப்படி தூரத்திலே அடித்திருந்த நாடோடி முகாமில் இருந்த குதிரைகளைப் பார்த்துக் கொண்டே உட்கார்ந்திருந்தான்.

நீண்ட 'கோட்'டையும் பிளந்துகொண்டு அவன் ரோமம் செறிந்த மார்பில் தாக்கும் அந்த ஊதற் காற்றை லக்ஷியம் செய்யாமல் அவன் வாயில் சுக்காளை வைத்துப் புகைகுடித்துக் கொண்டு, வாயாலும் மூக்காலும் சுருள் சுருளாகப் புகையை விட்டுக்கொண்டே கம்பீரமாய்ச் சாய்ந்த வண்ணம் என்னைப் பார்த்தபடியே என்னுடன் பேசிக்கொண்டிருந்தான்.



"ஆகவே நீ பிரயாணத்தில் இருக்கின்றாயாக்கும்? அதுதான் சரி. நீ ரொம்ப நல்ல காரியம்தான் செய்கின்றாய். அதுதான் நல்லது. நீ எல்லா இடங்களையும் சுற்றி எல்லாவற்றையும் பார். நீ பார்க்க இஷ்டப்பட்டதையெல்லாம் பார்த்து முடிந்ததும், போய்ப் படுத்து நிம்மதியாக உயிர் விடு. அவ்வளவுதான்!"

அவன் 'அவ்வளவுதான்' என்று சொல்லிவிட்டு அதற்கு நான் ஏதேனும் மறுப்பு சொல்லப்போகின்றேனோ என்ற சந்தேகத்துடன் பார்த்துவிட்டு, மேலும் தொடர்ந்தான்.

"வாழ்க்கை! இதர ஜனங்கள்! ஹூம்! அது ஏன் வந்து உன்னைக் கஷ்டப்படுத்தவேண்டும்? உனக்குத்தான் வாழ்க்கை வேண்டியதில்லையே. மற்றவர்கள் நீ இல்லாதபடிக்கே வாழ்ந்தும் வருகின்றார்கள்; நீ இல்லாதபடிக்கே வாழ்ந்தும் வருவார்கள். நீ யாருக்கேனும் தேவை என்பதாக, நீ கனவுகண்டு கொண்டிருக்கின்றாயாக்கும்! நீ என்ன ரொட்டியா, அல்லது ஊன்றி நடக்க உதவும் ஓர் ஊன்றுகோலா? உன்னை யாரும் விரும்பமாட்டார்கள்.

"தெரிந்துகொள்வதற்கும், தெரிந்ததைப் பிறருக்கு எடுத்துச் சொல்வதற்கும் என நீ சொல்லுகிறாய். ஆனால் ஜனங்களை எப்படி சந்தோஷப்படுத்துவதென்பதை உன்னால் தெரிந்து கொள்ள முடியுமா? முடியாது; உன்னால் முடியாது. நீ அதைப் பற்றிப் பேச ஆரம்பிக்கும்முன்னே, உன் தலையெல்லாம் நரைத்துப் போய்விடும். நீ என்னத்தைச் சொல்லக்கூடும்? ஒவ்வொருவருக்கும் அவரவர்க்கு என்ன வேண்டுமென்பது தெரியும். புத்திசாலிகள் இருப்பதை எடுத்துக்கொண்டு விடுகின்றனர். அறிவிலிகளுக்கு எதுவும் அகப்படுவதில்லை? ஆனால் ஒவ்வொருவனும் தனக்குத்தானே தெரிந்துகொள்ளுகின்றான்.

"உன்னைப்போன்றுள்ள ஜனங்களும் ஏராளமாய் இருக்கின்றார்கள்..." அந்தச் சமவெளிப் பிரதேசம் பக்கம் கையைச் சுட்டிக் காட்டிவிட்டு, "பின், அவ்வளவு இடம் இருக்கும் போது ஒருத்தர் மேல் ஒருத்தர் ஏறிக்கொண்டு மந்தை

போன்று கூடியிருக்கின்றார்கள். நாள் பூராவும் உழைத்துக் கொண்டு இருக்கிறார்கள். எதற்காக? யாருக்காக? அது யாருக்கும் தெரியாது.

“நாள் பூராவும் உழுது, நெற்றி வியர்வை நிலத்தில் சொட்ட பாடுபடும் ஒருத்தனைப் பார்த்துவிட்டு நீ என்ன நினைக்கிறாய்?—அவன் கடைசியில் அந்த மண்ணிலேயே விழுந்து, அந்த மண்ணுக்கே இரையாகிவிடுகின்றான். அவன் போகும்போது எதையும் தன்னுடன் எடுத்துச் செல்லவில்லை. அவனுக்குச் சொந்தமான நிலத்தைக்கூட அவன் பார்க்கவில்லை. பிறந்தது போன்றே அவன் இறந்தும் போகின்றான்—முட்டாள்!

“பூமியை வெட்டி சீர்திருத்த அவன் பிறந்தான்; அவனுக்கு ஓர் சமாதிக்குழி வெட்டி வைத்துக்கொள்ளக்கூட முடியாதபடி அவன் இறந்துபோய்விடுகிறான். சுதந்திரம் என்றால் என்னவென்று அவனுக்குத் தெரியுமா? இவ்வளவு பிரமாண்டமான சமவெளியைப்பற்றி அவனுக்கு எண்ணங்கள் ஏற்பட்டிருக்குமா? அந்த சமவெளியின் இனிய கானம் அவன் ஹிருதயத்தை மகிழ்வித்திருக்குமா? பிறந்தது முதலே அவன் அடிமை; வாழ்காலம் பூராவும் அடிமை; அவ்வளவுதான்! அதற்காக அவன் என்ன செய்ய முடியும்? அவனுக்குக் கொஞ்சம் புத்தி இருக்குமானால், அவன் ஒரு கயிற்றையெடுத்து கழுத்தில் சுருக்கு மாட்டிக்கொள்ளலாம்.

“இப்பொழுது என்னை எடுத்துக்கொள். இந்த ஐம்பத்தெட்டு வயதுக்குள் நான் எவ்வளவோ பார்த்திருக்கின்றேன். அவற்றையெல்லாம் நீ எழுதுவதானால்; அதோ நீ வைத்திருக்கின்றாயே அதைப்போல் ஆயிரம் பெரிய புத்தகங்கள் எழுதினாலும் போதாது. நான் சுற்றாத இடம் எந்த இடம் என்பதே சொல்லவே முடியாது. என் காலடி படாத இடமே கிடையாது. நான் போகாத ஊரை உன்னால் சொல்லவே முடியாது. அதுதான் வாழ்க்கை வழி;—உலகம் பூராவும்



சுற்றிப் பார், அவ்வளவுதான். ஒரே இடத்தில் ரொம்ப காலம் தங்கியும் விடாதே. அது சிலாக்கியமல்ல! இரவும் பகலும் மாறி மாறி உலகத்தை விரட்டிக்கொண்டு செல்வதைப் போன்று நீயும் உன்னை வாழ்க்கையின் எண்ணங்களினின்றும் விரட்டிச் சென்றுகொண்டிரு. நீ ஒருமுறை அதைப் பற்றி எண்ணிப்பார்க்க ஆரம்பிப்பாயானால், அது உன்னைக் கெடுத்துவிடும். அதுதான் எப்போதுமே ஏற்படக்கூடியது... அது எனக்கும் கூட ஏற்பட்டது. ஹூம்!...ஆம்......ஆம், தம்பி!......

“நான் கலிசியாவில் சிறையில் இருந்தேன். நான் எதற்காக இந்த உலகத்தில் இருக்கவேண்டும்? அதைப்பற்றி எண்ண ஆரம்பித்தேன், ஒரு வகையான மன வருத்தத்துடனேயே. சிறையில் அது துயரமாகவே இருந்தது! நான் ஜன்னல் வழியாக நிலங்களை பார்க்கும்பொழுது என் உள்ளம் மிகுந்த வேதனைப்படும். யாரோ என் உள்ளத்தை இறுக்கிப் பிடித்து அப்படியே அதை திருகுவதைப் போன்று உணர்வேன். எதற்காக வாழ்கின்றார்கள் என்பதை யார்தான் சொல்லமுடியும்? அதை யாராலும் சொல்ல முடியாது, தம்பி! அதை உன்னையே நீ கேட்டுக்கொள்வதிலும் ஒன்றும் பிரயோஜனமில்லைதான். வாழு; அதுதான் வேண்டியது. போய் நன்றாகச் சுற்றிப் பார். நீ ஒருபோதும் சோர்வடைய மாட்டாய். நான் அந்த சந்தர்ப்பத்திலே உயிரை விடக்கூட முயற்சித்தேன். ஆம், தம்பி! உண்மையாகத்தான் சொல்கின்றேன்!

“ஹ! நான் ஒரு தடவை ஒரு மனிதனிடம் பேசிக்கொண்டிருந்தேன். அவன் ஒரு கடுமையான பேர்வழி; உங்கள் ரஷ்யன்தான். அவன் சொன்னான்: ‘நீங்கள் வாழுங்கள், நீங்கள் நினைக்கிறபடியல்ல. ஆனால் கடவுளின் கட்டளைகளின்படிக்கு. கடவுளுக்குக் கீழ்ப்படியுங்கள். அவர் நீங்கள் கேட்பதையெல்லாம் உங்களுக்கு அளிப்பார்’ என்று. அந்த மனிதன் ஆயிரம் பீத்தலான கந்தல் உடைகளைத்தான் தரித்திருந்தான். நான் அவனிடம் சொன்னேன்: ‘புதிய உடைகள்

வேண்டுமென்று கடவுளைக் கேட்டுப்பாரும்' என்று. அதற்கு அவன் உடனே என்மீது சீறி விழுந்து என்னைத் திட்டலானான். தன்னுயிரைப் போன்று மன்னுயிர் அனைத்தினிடமும் அன்பு பாராட்டவேண்டுமென்றும், குற்றங்களை மன்னிக்கவேண்டும் என்றும் என்னிடம் சொன்னான். நான் அவனிடம் சொன்னது குற்றமாயின் அவன் என்னை மன்னிக்கவேண்டியதுதான்! உலகத்தில் ஆசான்களாய்த்தான் இருக்கின்றார்கள். உன்னை கொஞ்சமாக சாப்பிடும்படி உனக்கு உபதேசிப்பார்கள். ஆனால் அவர்கள் ஒரு நாளைக்குப் பத்து தடவைக்குமேல் சாப்பிடுவார்கள்.''

அவன் அந்த கணப்பின்மீது எச்சிலைத் துப்பிவிட்டு, சுக்கானுக்கு புகையிலையை அடைத்தக்கொண்டு சற்று அமைதியாக இருந்தான். மெலிந்த குரலில் காற்று துக்கத்துடன் புலம்பிக்கொண்டிருந்தது. குதிரைகள் காரிருளைக் கண்டு கனைத்துக்கொண்டிருந்தன. அந்த நாடோடிக் கூடாரத்திலிருந்து இனிய கானம் இழைந்து வந்துகொண்டிருந்தது. மேக்கரின் மகள்; அந்த அழகி நான்காதான் பாடிக்கொண்டிருந்தான். அவளது குரல் எனக்கு நன்றாய்த் தெரியும். அவள் பேசினாலும் அல்லது பாடினாலும் அது எப்பொழுதும் கம்பீரமாகவும்; இனிமையாகவுமே தொனிக்கும். அவளது கருத்த முகத்தின் சாயல் ராஜகுமாரிகளின் முகத்தைப் போன்று கம்பீரத்துடன் காணப்பட்டது. அவள் பழுத்த நிறக் கருவிழிகளிலே அவளது ஈடு இணையற்ற அழகும்; எதையும் அலட்சியத்துடன் எண்ணும் ஒரு கர்வப் பான்மையும் பிரதிபலித்தன.

மேக்கர் சுக்கானை எடுத்து வைத்துக்கொண்டு, மேலும் பேசலானான் :

"நீயும் கொஞ்சம் புகை குடி! அவள் நன்றாகப் பாடுகின்றாள்; அந்தப் பெண். அப்படித்தான் நான் சொல்லவேண்டும்! அதைப்போன்ற ஒரு பெண் உன்னைக் காதலிப்பதை நீ விரும்புவாயா? மாட்டாய்! அதுதான் சரி!

"பெண்களை ஒருபோதும் நம்பாதே. அவர்களைவிட்டு ஓரடி விலகியே செல். நான் சுக்கான் குடிப்பதில் மகிழ்ச்சி



யடைவதைப் போன்று, பெண்கள் முத்தமிடுவதில் அதிகம் மகிழ்ச்சியடைகின்றார்கள். ஆனால் ஒருமுறை நீ அவளை முத்தமிடுவாயானால் அன்றோடு உன் சுதந்திரத்திற்கு நீ விடை கொடுத்தனுப்ப வேண்டியதுதான்! அவள் ஒரு சூக்ஷ்ம சக்தியால் உன்னைக் கட்டிப்போட்டு விடுவாள். உன்னால் ஒருக்காலும் அந்தக் கட்டை அவிழ்க்க முடியாது. நீ உன் ஆத்மாவை அவள் காலடியில் கிடத்தி அங்கேயே நீ கிடக்க வேண்டியதுதான். இதுதான் உண்மை. பெண்களிடம் ஜாக்கிரதையாக நடந்துகொள்! அவர்கள் வஞ்சகிகள்! உலகிலுள்ள எல்லாவற்றையும்விட அவள் உன்னையே காதலிப்பதாகச் சொல்லுவாள். ஆனால் அவளை ஒரு குண்டூசியால் குத்திவிட்டால் போதும். உன் ஹிருதயத்தையே பிளந்துவிடுவாள். அத்தகைய பெண்களை நான் ஏராளம் பார்த்திருக்கின்றேன்! சரி, தம்பி. நல்லது நான் உனக்கு ஒரு கதை சொல்லட்டுமா?—நிஜமாகவே நடந்த கதை! அதை மட்டும் ஞாபகத்தில் வைத்துக்கொள்வாயானால், நீ வாழ்காலம் பூராவும் ஒரு சுதந்திரப் பறவை போன்றே இருக்கலாம்.

"ஒரு காலத்தில் லோய்க்கோ ஸோபார் என்ற பெயருடைய ஒரு நாடோடி இளைஞனிருந்தான். ஹங்கேரி, பொஹிமியா, ஸ்லோவேனியா இன்னும் மற்றும் எல்லா இடங்களிலுமுள்ள ஜனங்களுக்கு அவனை நன்றாகத் தெரியும். அவன் ஓர் அழகான வாலிபன். அந்தப் பக்கங்களில் அரை டஜன் பேர்வழியுள்ள ஓர் ஊராயிருந்தாலும் சரி, அதிலுள்ளவர்கள் யாரேனும் கடவுளுக்கு மரியாதை செய்யாவிட்டால், அவர்கள் அவனைக் கொன்றே விடுவார்கள். ஆனால் லோய்க்கோ குதிரை சவாரியிலே ரொம்பப் பற்றுக்கொண்டவனாக இருந்து வந்தான். அதிலே அவன் ரொம்பவும் கெட்டிக்காரன். ஒரு பட்டாளத்தை நிறுத்தி அவனை மறைக்க முயன்றாலும் மறைக்க முடியாது. அவன் குதிரையைத் தட்டிவிட்டு ஒரே பாய்ச்சலாய் பாய்ந்து போயே போய்விடுவான். ஆஹா! அவன் யாருக்குமே பயப்பட மாட்டான்! சைத்தான்களின் ராஜாவே தன் சேனைகளுடன் வந்தாலும் சரிதான்.

அவற்றையெல்லாம் ஒரே விரட்டு. அவைகள் போயே போய் விடும்!

"நாடோடி முகாம்கள் பூராவுக்கும் அவனைத் தெரியும். தெரியாவிட்டாலும் அவனைப் பற்றிக் கேள்விப்பட்டிருப்பார் கள். அவன் பிரியம் பூராவும் குதிரைகளின் . பேரில்தான்; வேறொன்றிலுமில்லை. அதுவும் கூட நீண்ட நாளைக்கு நிலைத் திருப்பதில்லை. கொஞ்சநாள் சவாரி செய்ததும் யாரேனும் முடைப்பட்டு அவனிடம் பண உகவி கேட்கும்போது, அவன் அதை விற்று அவர்களுக்குப் பணம் கொடுத்துவிடுவான். அவன் ஹிருதயத்தை வேண்டுமென்று யாரேனும்கூடக் கேட் டாலும் தயங்காது தன் மார்பைப் பிளந்து, ஹிருதயத்தை வெளியே எடுத்து அதே க்ஷணம் கொடுத்துவிடுவான். அவ்வளவு சிறந்த குணமுடையவன்.

"அப்போது, அதாவது சுமார் பத்து வருடங்களுக்கு முன்பு, எங்கள் கூட்டத்தார் புக்கோவினு வழியாகப் போய்க் கொண்டிருந்தோம். நல்ல வசந்த காலத்தில் ஒருநாள் இரவு, நானும் கோஸுத்தில் யுத்தம் செய்த டானிலோ என்ற வயோதிகரும், கிழ தாரும், டானிலோவின் மகள் ராதாவும் மற்றவர்களும் சுற்றி உட்கார்ந்திருந்தோம்.

"என் மகள் நான்காவை உனக்குத் தெரியுமா? தெரிந் திராது. ரொம்பவும் அழகான பெண்! அவளைக்கூட ராதா வுக்கு ஒப்பிட்டுக் கூற முடியாது. அவ்வளவு கௌரவம் பொருந்தியவள். அவள் அழகைப்பற்றி வருணிப்பதற்கு வார்த்தைகளே இல்லை. அவளைப் போன்ற பேரழகி யாருமே இல்லையென்று சொல்லிவிடலாம்...!

"அவள் அநேக வாலிபர்களின் உள்ளங்களை வாட்டியிருக் கின்றாள். ஆமாம்; எத்தனையோ பேரை! மோராவாவில் ஒரு பெரிய பணக்காரன். அவன் குதிரைமீது போய்க்கொண் டிருந்தபோதே அவளைப் பார்த்துவிட்டான். அவனுக்கு விமோகதாபம் ஏற்பட்டுவிட்டது.அவன் தங்கப்பூ வேலை செய்த விலை உயர்ந்த உக்ரேனிய நீண்ட 'கோட்டு' போட்டிருந்தான்.



குதிரை காலடி போடும்போதெல்லாம் அவன் இடையில் தொங்கிய நவரத்தினங்களால் இழைக்கப்பெற்ற உடைவாள் தக தகவென்று பிரகாசித்துக்கொண்டிருந்தது. தலையில் தரித்திருந்த வெல்வெட் நீலக் குல்லா வானத்தின் அழகிய நீல ஒளியைப் போன்று அவ்வளவு அழகுடன் காணப்பட்டது. அவன் பெரும் செல்வச்சீமான். பிரபு வம்சத்தினன். அவன் சொக்கிப்போய் ராதாவிடம் சொன்னான் : 'பெண்ணே! எனக்கு ஒரு முத்தம் கொடு! நான் உனக்கு ஒரு பை பணம் தருகின்றேன்' என்று. அதைக் கேட்ட மாத்திரத்தில் மறு மொழி கூறாது முகத்தைத் திருப்பிக்கொண்டாள். அவன் கீழே இறங்கி ஓடிவந்து அவளிடம் கெஞ்சுவதைப் போன்று 'நீ என்னை அன்புடன் ஒரு முறை பார்க்க மாட்டாயா? நான் ஏதேனும் தவறாக சொல்லியிருப்பின் என்னை மன்னித்துவிடு,' என்று சொல்லிவிட்டு ஒரு பெரும் பை பணத்தை அவள் காலடியில் வைத்தான். ஆனால் ராதா அதைக் காலால் உதைத்து எட்ட தள்ளிவிட்டாள்!

"'என்ன பெண்' என்று தனக்குள் முனகிக்கொண்டு குதிரையை சவுக்கால் ஒரு சின்ன தட்டு தட்டிவிட்டு ஒரு நொடியில் மாயமாய் மறைந்துவிட்டான்.

"மீண்டும் மறுநாள் திரும்பி வந்தான். கூடாரத்தருகில் வந்து, கர்ஜித்துக்கொண்டே 'அவள் தகப்பனார் யார்?' என்றான். டானிலோ வெளியே வந்தான். அவனிடம், 'உனக்கு எவ்வளவு வேண்டுமானாலும் தருகிறேன். உன் மகளை என்னிடம் விற்றுவிடு,' என்றான். அதற்கு டானிலோ பதில் சொன்னான் : 'பணக்காரர்கள்தான் மனச் சாட்சியிலிருந்து பன்றிக் குட்டி வரை விற்பார்கள். ஆனால் நான் அப்படிப் பட்டவனல்ல. என்னிடம் பேரம் பேசாதே!' என்று.

"அவனுக்குக் கோபம் வந்துவிட்டது. தன் வாளை உருவ லானான். 'ஆனால் அங்கிருந்த சிறுவர்களில் ஒருவன் கொள்ளிக் கட்டையைத் தூக்கி குதிரையின் காதோரம் கொண்டு போக லானான்.........நாங்கள் கூடாரத்திற்குப் போய்விட்டோம்.

அவன் மறுபடியும் வந்து அடித்து விடுவானோ என்று பயந்து நாங்கள் இரண்டு நாள் வரை எங்கேயும் கிளம்பவில்லை. அவன் மேலும் சொன்னான்: 'உனக்குத்தான் சொல்கின்றேன். கடவுள் சாட்சியாகவே என் மனசு சுந்தமாயிருக்கின்றது· கடவுள் முன்னிலையில் உன் மகளை எனக்கு விவாகம் செய்து கொடு. நான் பெரிய பணக்காரன். என் செல்வத்தில் சரி பாதி உனக்குத் தருகின்றேன்......' என்று.

"அது எங்கள் எல்லோரையும் கொஞ்சம் யோசிக்கச் செய்துவிட்டது.

"டானிலோ பல்விடுக்கு வழியாகச் சொன்னான்: 'நல்லது மகளே! உன் இஷ்டம் என்ன?'

"அதற்கு ராதா எங்களைப் பார்த்துக் கேட்டாள்: 'கழுகு காக்கை கூட்டுக்கு போகுமானால் எப்படி இருக்கும்?'.

"இதைக் கேட்டு டானிலோ சிரிக்கலானான். நாங்கள் எல்லோரும்கூட சிரித்துவிட்டோம். 'நன்று சொன்னாய், மகளே!...அந்த புருக்களைப் பார்! அவைகள் எவ்வளவு சாதுவாக இருக்கின்றன' என்றான்.

"அந்த பிரபு தன் தொப்பியை கழற்றி எறிந்துவிட்டு வேகமாய்ச் செல்லலானான். குதிரை பாய்ந்து சென்ற வேகத்தில் தரையே கிடு கிடென்று அதிர்ந்தது. அப்படிப்பட்ட பெண், தம்பி, ராதா!

"ஓர் இரவு, நாங்கள் சுற்றிலுமாய் உட்கார்ந்திருந்தோம். அந்தச் சமவெளியிலிருந்து இனிய கானம் வந்துகொண்டிருந்தது. ஆஹா! எவ்வளவு அழகான கீதம்! அது உள்ளத்தைப் பரவசப்படுத்தி உணர்ச்சிக் கடலிலே மிதக்க வைத்தது. அந்த கீதத்தைக் கேட்ட பின்பு, அதைக் கேட்காவிடில் உலகத்தில் வாழ்ந்தே பயனில்லை என்றே எண்ணிவிட்டோம்.

"ஒரு மனிதன் குதிரைமீது இருந்தபடியே பிடில் வாசித்துக்கொண்டு அந்த இருளில் எங்கள் அருகில் வந்தான். அவன் கணப்பண்டை வந்ததும், வாசிப்பதை நிறுத்திக்கொண்டு எங்களைப் பார்த்துச் சிரித்தான்.



"டானிலா சந்தோஷம் தாளாது உரத்த குரலில், 'ஆஹா! நீயா, ஸோபார்!' என்று கத்தலானான். ஆமாம். அவன் தான் லோய்கோ ஸோபார்!

"அவன் மீசை மயிர் அவன் தோள்பட்டையை தொட்டுக் கொண்டிருந்தது. அவன் கண்கள் நட்சத்திரங்களைப் போன்று அவ்வளவு பிரகாசமாயிருந்தள. அவன் சிரிக்கும்பொழுது, ஆஹா! உதய சூரியன் பூரண எழிலுடன் வெளிவருவதைப் போன்றிருக்கும்! அவனும் அவன் குதிரையும் ஒரே கல்லில் வார்த்தெடுத்தாற் போன்று—அவ்வளவு அழகு அவன். அந்த நெருப்பண்டை நின்று கொண்டிருந்தான்· அந்த செவ்வொளியில் அவன் உடம்பு ஒரே சிவப்பாக இருந்தது. புன்முறுவல் ததும்பும் அவன் முகத்திலே அவன் வெண் பற்கள் அழகாக காணப்பட்டன. ஆஹா நான் அதுவரை யாரையுமே அப்படி உற்றுப் பார்த்தது கிடையாது! நான் யார்மேலும் அவ்வளவாகப் பிரியம் கொண்டதும் கிடையாது!

"ஆமாம், தம்பி! அவன் அவ்வளவு அழகாக இருந்தான்! அவன் உன் கண்களுக்கு நேரே பார்ப்பானானால், அந்த பார்வை உன் ஹிருதயத்துக்குள் சென்று அது உன்னை வசியப் படுத்திவிடும். அப்படிப்பட்ட மனிதர்கள் இருப்பதே அபூர்வமெனலாம். அவனைப் பார்த்தால், அவனை மிக சிரேஷ்டனாகவே எண்ணத்தோன்றும், ரொம்ப மேலான முறையில்தான், இந்த உலகத்தில்தான், நல்லதை எல்லாம் நல்லதாக நினைக்க மாட்டார்களே! சரி, நாம் கதைக்குப் போவோம்!

"ராதா சொன்னாள்: 'லோய்கோ நீ நன்றாக வாசிக்கின்றாய்! அத்தகைய இனிய நாதத்தையும், கந்தர்வகான இனிய பிடிலையும் உனக்கு யார் செய்துகொடுத்தார்கள்?"

"அவன் சிரித்துவிட்டுச் சொன்னான்: 'அதை நானே செய்தேன்! ஆயினும் அதை நான் மரத்தால் செய்ய வில்லை. நான் அருமையாய் காதலித்த ஒரு பெண்ணின் மார்பிலிருந்து செய்தேன். நான் வாசிக்கும் அந்த பிடில் கம்பிகள் அவளது ஹிருதய நரம்புகள். பிடில் கொஞ்சம் தவறாகத்தான் வாசிக்

கின்றது. ஆயினும் அதை எப்படிச் சரியாக வாசிக்க வேண்டு மென்பது எனக்குத் தெரியும்.''

"நமது பழக்கம் பெண்களை ஒன்றும் தெரியாதவர் களென்று நினைத்து ஒதுக்கி நடப்பதென்பது உனக்குத் தெரியும். லோய்க்கோவும் அப்படித்தான். ஆனால் ராதா அந்த வகையிலெல்லாம் சிக்கக் கூடியவள் அல்ல. அவள் ஒரு கொட்டாவி விட்டுக் கொண்டே திரும்பி, 'ஜனங்கள் என் னமோ ஸோபார் ரொம்ப கெட்டிக்காரர், மகா சாமர்த்திய சாலி, என்று சொன்னார்கள்.—எவ்வளவு பொய்யர்கள்!' என்று சொல்லிவிட்டு அதைவிட்டு நகரலானாள்.

"'ஆஹா! அழகிய நங்காய்! உன் பற்கள் எவ்வளவு அழகாக இருக்கின்றன!' என்று லோய்கோ குதிரையை விட்டு இறங்கி அவளைப் பார்த்தபடி சொல்லி விட்டு, பின், 'சகோதரர்களே, எல்லோரும் சௌக்கியந்தானே! நான் இங்கே உங்களிடம்தான் வருகின்றேன்,' என்றான்.

"'வாருங்கள். உங்களை அன்புடன் வரவேற்கின்றோம்' என்றான் டானிலோ பதிலுக்கு. நாங்கள் அவனை முத்த மிட்டு, அவனுடன் பேசிக் கொண்டிருந்துவிட்டு பின் படுக்கச் சென்றோம்...நன்கு தூங்கலானோம். காலையில், ஸோபாரின் தலை, துணியால் கட்டப்பட்டிருப்பதைக் கண்டோம். என்ன அது? ஓ, அவன் தூங்கிக் கொண்டிருந்தபொழுது அவன் குதிரை குளம்பால் அவன் தலையை மிதித்து விட்டதாக்கும்!

"ஹா...ஹா!...நாங்கள் அந்த குதிரையைப் பார்த்துச் சிரித்துக்கொண்டோம். 'சரி லோய்க்கோ ராதாவுக்கு ஏற்ற வனல்லவா?' நான் அப்படியாக நினைத்துக்கொண்டேன். அவன் அவ்வளவு அழகாக யிருந்துங்கூட, அவளுக்கு அல்ப மனசு!—நூறு சேர் தங்கத்தையே வடமாகச் செய்து அவள் கழுத்தைச் சுற்றிப் போட்டாலுங்கூட, அவள் மனசு கொஞ் சங்கூட மாறவே மாறாது. எப்படியுந்தான்...போகட்டும்!

"நாங்கள் அந்த இடத்தில் ரொம்ப காலம் தங்கியிருந் தோம். ஸோபாருங்கூட எங்களுடனேயே இருந்தான்.



அவன் ஒரு நல்ல தோழன். ரொம்ப வயதானவர்கள் மாதிரி அவனுக்குத் தெரிந்த ஒவ்வொன்றையும் எங்களுக்குச் சொல்லுவான். அவனுக்கு ருஷ்ய பாஷையும், மக்யா பாஷை யும் எழுதவும், படிக்கவும் தெரியும். அவன் பேச ஆரம்பித்து விட்டால், நீ சாப்பிடுவதையும், தூங்குவதையும் கூட மறந்து விட்டு அப்படியே யுகக் கணக்கில் கேட்டுக்கொண்டே யிருந்து விடுவாய். அவன் பிடில் வாசிப்பதிலும் சரி, ஆஹா! அந்த மாதிரி வாசிக்கக் கூடியவர்கள் உலகத்தில் யாருமே இருக்க முடியாது! அவன் பிடிலை மீட்டும் பொழுது உன் ஹிருதயம் அடித்துக்கொள்ளும். அவன் மீண்டும் வாசிக்கும்பொழுது அது அடித்துக் கொள்வதையே நிறுத்திவிடும். நீ கேட்டுக் கொண்டே உன்னை யறியாது சிரித்துவிடுவாய். அதைக் கேட்கும்பொழுது துக்கமும் சந்தோஷமும் உனக்கு மாறிமாறி உண்டாகும். ஒரு சமயம், யாரோ மிக்கத் துயரத்துடன் புலம்புவதைப் போன்றிருக்கும். அந்தத் துயரத்தின் சாயல் உன்னை அபயமளிக்கும்படி கெஞ்சுவதைப் போன்றிருக்கும். அந்தத் துயர நாதம் கத்தியால் உன் ஹிருதயத்தைக் கீறு வதைப் போன்றுணர்வாய். இன்னொரு சமயம், அந்தச் சமவெளி, வானத்திடம் ஓர் அழகிய கதை சொல்வதைப் போன்றிருக்கும். ஒரு துயரமான கதை, காதலனின் பிரிவைச் சகியாது ஓர் இளம் பெண் துயரத்தால் கண்ணீர் வடிப்பதை போன்று. மறுகணம் ஒரு வாலிபன் தன் காதலியை சம வெளிக்குக் கூப்பிடுகின்றான். பின் திடீரென. ஆஹா! ஒரு கந்தர்வக் குரல் காற்றிலே மிதந்து வரும்! அந்த அழகிய சூரியன் வானத்தில் நடமாடுவதைப் போன்று தெரியும்! ஆமாம்; அவ்வளவு அழகாயும் இனிமையாயு மிருக்கும்!

"உன் உடம்பின் ஒவ்வொர் மயிர்க்காலும் கூட அந்த கீதத்தை புரிந்துகொள்ளும். நீ உன் உயிராலும், உடலாலும் அதற்கே அடிமையாகிவிடுவாய். லோய்கோ என்ன விரும்பி னாலும், யாருடனும், எதுவும் செய்துவிடுவான். அவன் மீது எல்லோருக்குமே அன்பு; எல்லோருமே மிதமிஞ்சி அவனிடம அன்பு பாராட்டினர்—ராதாவுக்கு மட்டுந்தான் அவனைப்

பார்க்கக் கண்ணில்லை! அதுகூட ஒன்றும் கெட்டதல்ல. அவனை அவள் கேலி செய்வதுதான் ரொம்பத் தகாத விஷயம்.

"அவள் அவன் ஹிருதயத்தையே புண்படுத்திவிடுவாள். ஆமாம்; புண்படுத்தித்தான்விடுவாள். லோய்கோ மீசையை முறுக்கிக்கொண்டு, பற்களைக் கடித்துக்கொள்வான். அவன் கண்கள் சிவந்து போகும். சில சமயம், அவன் மனசை நிதானப்படுத்திக்கொண்டதைப் போன்று அவைகள் பிரகாசிக்கும். இரவில் அந்த சமவெளியிலே வெகு தூரத்திற்குச் செல்வான். பொழுது புலரும்வரை அவன் பிடில் சோகத்துடன் இழைந்துகொண்டிருக்கும். லோய்கோ வின் சுதந்திரம் இறந்து போனதைப் பற்றி புலம்பிக் கொண்டிருக்கும். நாங்கள் படுத்தபடியே அதைக் கேட்டு, சிந்தித்துக்கொண்டிருப்போம். என்ன செய்தல் கூடும்? இரண்டு கற்கள் ஒன்றோடொன்று அடிபடும்பொழுது, அதன் மத்தியில் சென்றால் அது நம்மை யல்லவோ நசுக்கிப்போட்டுவிடும்! வேறொன்றும் பிரயோஜனப்படாதென்பது தெரிந்தது.

"நாங்கள் இந்த சமாச்சாரங்களைப்பற்றி விவாதித்துக் கொண்டு கூட்டமாய் உட்கார்ந்திருந்தோம். பின் விஷயங்கள் மேலோடவில்லை. டானிலோ லோய்கோவிடம் சொன்னான்; 'லோய்கோ, ஆத்மாவை உற்சாகப்படுத்த ஏதேனும் ஒரு பாட்டுப் பாடு!' அந்த வாலிபன் கொஞ்ச தூரத்தில் படுத்துக்கிடந்த ராதாவைப் பார்த்துவிட்டு, வானத்தை உயர்ந்து நோக்கியபடி தன் பிடிலை எடுத்து மீட்டலானான். பிடில் உண்மையில் ஒரு பெண்ணின் இதயக் குரலைப் போன்ற இனிமையுடன் ஒலிக்கலாயிற்று. லோய்கோ பாடினான்:

'ஹே—ஹோ! இதயத்தின் தாகத்தை
தீர்ப்பது ஜ்வாலை;
இந்த பிரமாண்டமான சமவெளி யகன்றது;
காற்றைப் போன்று கடுகியே செல்லும் என் புரவி;
புஜபல பராக்ரம வீரனே அதில் செல்பவன்'.

"ராதா தன் முழங்கையைக் கீழே ஊன்றியபடி தலையைத் திருப்பி அந்த பாடகனைப் பார்த்து இகழ்ச்சியாய்ச் சிரிக்கலானாள். அவன் முகம் விடிவானத்தைப் போன்று சிவக்கலாயிற்று.



'ஹே—ஹோ-ஹே! தோழனே எழுவாய்!
முன்னேக்கி நாம் செல்லுவோம்!
காரிருளில் தவிக்கும் சமவெளி,
விடிவைத் தழுவவே வேண்டி நிற்கின்றது!
ஹே—ஹோ! உதயத்தை சந்திக்கப் பறந்தே
செல்வோம்!
பறவையைப் போன்று விரைந்தே செல்வோம்!
அழகிய சந்திரன் உன் பிடரிமயிரெனத்
தொட்டிட வேண்டாம்; வேண்டிக்கொள்கின்றேன்!'

"அவன் பாடினன்! யாருமே அதைப்போன்று பாட முடியாது! ஆனல் ராதா சொன்னள்:

'உன்னல் அவ்வளவு உயரப் பறக்க முடியாது, லோய்கோ! நீ கீழே விழுந்து உன் மீசை நனைந்துபோய்விடும்; ஜாக்ரதை.'

"லோய்கோ மிகுந்த ஆத்திரத்துடன் அவளை வெறித்துப் பார்த்துவிட்டுத் தன் ஆத்திரத்தை அடக்கிக்கொண்டு மேலும் பாடினன்:

"ஹே-ஹோ-ஹே! காலையின் இளம் பரிதி வரட்டும்.
அயர்ந்த சிறு துயிலினின்றும் நம்மை எழுப்பட்டும்.
செல்-செல்-செல்......அவமானத்தால் நாம் வெட்கு-
வதற்குமுன்
மனிதர் கண்டு ஆச்சரியம் கொள்வரே!'

"என்ன அழகான பாட்டு! நான் இதைப்போன்று என்றுமே கேட்டதில்லை,' என்றான் டானிலோ. அந்த வயோதிக நரின் மீசைகூடத் துடித்தது. அவன் தோள்கள் குலுங்கின. எல்லோருமே அந்த ஸோபாரின் அதியுன்னதமான பாட்டைக் கேட்டுப் பரவசத்தால் மெய் மறந்தோம்! அது ராதா ஒருத்திக்குத்தான் பிடிக்கவில்லை.

"குளவி கழுகு போன்று கத்தவேண்டுமென்றால், அதற்கு எப்படி முடியும்' என்றாள் இறுமாப்புடன்-

"டானிலோ கோபம் கொண்டவனாய் எழுந்து, 'ராதா: நீ சவுக்கின் ருசியைத் தெரிந்துகொள்ள விரும்புகின்றாயா?' என்றான். ஆனால் ஸோபார் தன் தொப்பியை சுழற்றி எறிந்து விட்டுச் சொன்னான். அவன் முகம் கருத்துப் போயிற்று:

'வேண்டாம், டானிலோ! அடங்காக் குதிரைக்கு எ.'.குக் கடிவாளம் போடணும். உன் மகளை எனக்கு கல்யாணம் செய்து கொடுத்திடு!'

"பதிலுக்கு டானிலோ சிரித்துக்கொண்டு சொன்னான். 'நீ சொல்லுவது சரிதான். உன்னால் முடிந்தால் அவளை அழைத்துக்கொள்!'

"சரி பெண்ணே! நான் சொல்வதைச் சற்றுக் கேள் காற்றில் விட்டு விடாதே! என் காலத்திற்குள் உன் போன்ற பெண்களை எத்தனையோ பேர் பார்த்திருக்கிறேன். ஆனால் யாரும் உன்போன்று என் இதயத்தை தொட்டதே கிடையாது. ஆஹா! ராதா! நீ என் ஆத்மாவையே உன் கண்ணியில் சிக்க வைத்துவிட்டாய்! நல்லதுதான்! அதற்கு என்ன வேண்டுமோ, அது வேண்டியதுதான்...நான் என் மனப்பூர்வமாக, ஆண்டவன் முன்னிலையில், உன் தந்தைக்கும் மற்றும் இங்குள்ள ஜனங்களுக்கு முன்னிலையில், உன்னை நான் மனைவியாக ஏற்றுக்கொள்ளுகிறேன். சற்றுக் கவனி! நீ என் இச்சைக்கு மாறுகிவிடாதே! நான் சுதந்திர புருஷன். நான் என் இஷ்டப்படி வாழ்கின்றேன்!' அவன் கண்களில் தீப்பொறி பறக்க, பற்களை கடித்துக்கொண்டு அவ்விதம் சொல்லிக்கொண்டே அவளிடம் சென்றான். அவன் கையை அவளிடம் நீட்டுவதைக் கண்டோம்; இப்பொழுது நாங்கள் நினைத்தோம்: அந்த சமவெளிக் குதிரைக்கு கடிவாளத்தை மாட்டி விட்டானென்று! திடீரென்று அவன் கை மேலோங்குவதைக் கண்டோம்; மறுகணம் அவன் ஆவென்றலறியபடி கீழே சாயலானான்.

"அட தெய்வமே! துப்பாக்கிக் குண்டு அவன் மார்பில் பாய்ந்ததைப் போன்று இருந்தது அது. ராதா அவன் காலில் சுற்றியிருந்த சவுக்கை இழுப்பதைப் பார்த்தோம்.



"விகண்டையாய் சிரித்துக்கொண்டே அவள் மீண்டும போய்ப் படுக்கலானாள். அடுத்து என்ன நடக்கப்போகிறது என்பதை நாங்கள் பார்த்த வண்ணமிருந்தோம். லோய்கோ தலையை நிமிர்த்தி எழுந்து உட்கார்ந்தான். உடனே எழுந்து யாரையுமே பார்க்காதபடிக்கு சமவெளிக்கு விரைந்து நடந்து சென்றான். நூர் என் காதோடு காதாக 'அவனைக் கவனி' என்று முணுமுணுத்தான். நான் அந்த இருளில் ஸோபாரை பார்த்துக்கொண்டேயிருந்தேன். ஆம் தம்பி!"

மெக்கர் தன் சுக்கானிலுள்ள சாம்பலைக் கொட்டிவிட்டு' மறுபடியும் அதில் புகையிலை வைத்து அடைத்தான். நான் என் கோட்டை இழுத்து இறுக்கிப் போர்த்துக்கொண்டு, வெய்யிலால் கறுத்துப்போன அவன் கிழ முகத்தைப் பார்த்துக்கொண்டிருந்தேன். அவன் தனக்குள் ஏதோ முனகிக் கொண்டு, தலையை ஆட்டிக்கொண்டான். அவன் நரைத்த மீசை மேலும், கீழுமாக ஆடிக்கொண்டிருந்தது. அவன் தலை மயிர் காற்றில் பறந்துகொண்டிருந்தது. அவன் மரம் போன்று உணர்ச்சியற்றுற் போன்று அப்படியே உட்கார்ந்திருந்தான். ஆயினும் அதனிடம் பலமும், முறுக்கும், அதைப்பற்றிய பெருமையும் இல்லாமல் இல்லை. கடல் அதன் கரையுடனே சம்பாஷித்துக்கொண்டிருந்தது. அந்தக் காற்று, சமவெளியிலே இன்னும் வீசிக்கொண்டேயிருந்தது. நான்கா பாடுவதை நிறுத்தலானாள். வானத்தின் மேகங்கள் ஒன்று சேர்ந்து அந்த இலையுதிர் காலத்தின் இரவை இன்னும் இருளாக்கிக் காண்பித்தன.

"சேர்ந்தாற்போன்று லோய்கோ நடந்துபோய்க்கொண்டிருந்தான். அவன் தலை குனிந்தபடியிருந்தது; அவன் கைகள் கீழே தொங்கியபடி கிடந்தன. அவன் ஒரு பள்ளத் தாக்கண்டை சென்றதும் அங்கே ஒரு கற்பாறையின் மீது உட்கார்ந்துகொண்டு புலம்பலானான். அந்தப் புலம்பல் உள்ளத்தை உருக்கி அவன்பால் அனுதாபத்தைச் சுரக்கச் செய்தது. ஆனால் நான் அவனிடம் செல்லவில்லை. துக்கத்தை வெறும் வார்த்தைகளால் தேற்ற முடியாதல்லவா? அதுதான்.

அவன் ஒருமணி நேரம் அப்படியே உட்கார்ந்திருந்தான். இரண்டு மணி நேரம், மூன்று மணி நேரம், அவன் அப்படியே அசைவற்று உட்கார்ந்திருந்தான்.

"நான் பக்கத்தில் தரையில் படுத்துக் கிடந்தேன். அது நடுநிசி. சந்திரனின் வெள்ளிக் கிரணங்கள் எங்கும் படர்ந்து நின்றன. அந்தச் சந்திரிகையிலே தூரத்தில் உள்ள எல்லாமுமே ஸ்பஷ்டமாக காணப்பட்டன.

"திடீரென்று அவள் கூடாரத்தை விட்டு எங்களை நோக்கி ராதா வருவதைக் கண்டேன். அது எனக்கு சந்தோஷத்தை யளித்தது. 'ஆஹா! என்ன மேனி! வீரப் பெண் ராதா!' என்று நான் நினைத்துக்கொண்டேன்.

"அவள் அருகே வரலானாள். ஆனால் அவள் வருவதை அவன் கவனிக்கவில்லை. அவள் கையை அவன் தோளின்மேல் போட்டாள். லோய்கோ சடக்கென்று தலையை நிமிர்த்தினான். பின் எழுந்து தன் கத்தியை உருவலானான். ஐயோ! அந்தப் பெண்ணை அவன் குத்திவிடுவானே என்று பயந்து கத்த நினைத்தேன். ஆனால் அதன் மறுகணம் இது என் காதில் விழுந்தது.

'அதைப்போடு! உன் தலையை நொறுக்கிவிடுவேன்!' நான் அங்கே பார்த்தேன், ராதா ஸோபாரின் தலையில் குறிவைத்த படி கையில் துப்பாக்கியுடன் நின்றாள். ஆமாம்; அவர்கள் பலப் பரீட்சை நடத்திப் பார்க்கின்றார்கள் என்று நினைத்தேன். மேலும் என்ன நடக்கக்கூடுமோ என்று ஆச்சரியத்துடன் கவனித்தேன்.

"இங்கே பார்!' ராதா தன் கைத்துப்பாக்கியை இடையில் சொருகிக்கொண்டு சொன்னாள். 'நான் உன்னைக் கொல்ல இங்கு வரவில்லை. ஆனால்......கத்தியைப் போடு!'

"அவன் கத்தியைப் போட்டுவிட்டு ஆத்திரத்துடனேயே அவள் கண்களை பார்க்கலானான்; அந்த அழகிய, வீரமிக்க இரு ஜீவன்களும் ஒருவரையொருவர் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தனர். பூரணசந்திரன் தன் வெண்ணிறக் கிர



ணங்களை அள்ளி வீசிக்கொண்டிருந்தான். நான் அவர்களைப் பார்த்தபடியே இருந்தேன்.

"லோய்கோ! உன்னைக் காதலிக்கின்றேன், லோய்கோ! என்றாள் ராதா.

'நான் வீரமிக்க வாலிபர்களை பார்த்திருக்கின்றேன். ஆனால் நீ மஹா வீரன், லோய்கோ! உன் வீரம் உன் முகத்தி லும், ஆத்மாவிலும் பிரதிபலிக்கின்றது. நான் நினைப்பேனா னால் அவர்கள் எல்லோரும் என் காலடியில் விழுந்து வணங்கு வார்கள். நான் கண்ணால் பார்த்தால் போதும்; அவர்கள் மீசையை சிறைத்துக்கொண்டு விடுவார்கள். ஆனால் விவேகம் அதுவாகுமா? அவர்கள் யாருமே அவ்வளவு வீரம் பொருந்தி யவர்களல்லர். நான் அவர்களைப் பேடிகளாகவே ஆக்கி விட்டேன். லோய்கோ! வீரமிக்க நாடோடிகளிலே இன்னும் சிலரேதான் இவ்வுலகத்தில் இருக்கின்றனர். ஆனால் நான் உன்னைக் காதலிக்கின்றேன்: நான் விரும்புகிறேன்! ஆனால் நீயின்றி நான் மட்டும் வாழ்வதென்பது முடியாது. நீயும் என்னை விட்டு நீயாக வாழ முடியாது. நீ என் காதல் நாயக னாக இரு. உன் உடலாலும், உயிராலும், உள்ளத்தாலும் நீ எனக்குரியவனாக வேண்டுமென்று நான் ஆசைப்படுகிறேன்.

"அவன் கடகடவென்று வாய்விட்டுச் சிரித்துவிட்டு 'உன் அமுத மொழிகள் என் ஹிருதயத்தை மகிழ்விக்கின்றன! இன்னும் சொல்!' என்றான்.

"இன்னும் சொல்லுகின்றேன், லோய்கோ! நீ எப்படி யிருந்தாலும் சரிதான். நான் உன்னை எனக்குரியவராக நினைத்துவிட்டேன். நேரத்தை வீணாக்காதே. நாடோடிச் சிறுவர்களின் இதயங்களைப் பரவசப்படுத்திக் கொண்டிருந்த உன் இனிய கீதங்களை அவர்கள் இனி இந்தச் சமவெளியில் கேட்க முடியாது....நீ வேறு பாடல்கள் பாடு, காதற் கீதங்களை பாடு, எனக்கு—ராதாவுக்கு—...இனி காலத்தை வீணாக் காதே...நான் சொல்லிவிட்டேன். தன் மூத்த தோழனுக்கு வணங்கும் வாலிபனைப் போன்று நீ எனக்கு நாளை தாழ்ந்து

வணங்குவாய். அந்த நாடோடிக் கூட்டத்தாருக்கு முன்னிலே யிலே நீ மண்டியிட்டு வணங்கி நீ என் வலக்கரத்தை முத்த மிடுவாய். பின் நான் உன் மனைவியாக இருப்பேன்.'

"அந்தப் பைத்தியக்காரப் பெண் அப்புறம் எப்படி ஆனாள் தெரியுமா! அது கேட்டே யிருக்க முடியாத விஷயம்! மண்டி நெகிரின் ஜாதியாரிடத்தில் அந்தச் சம்பிரதாயம் ஏற்கனவே இருந்தது. ஆகவேதான் அந்த வயோதிகர் சொன்னார். ஆனால் நாடோடிகளிடத்தில் அப்படி ஒன்றும் இருந்ததில்லை! அப்படி ஒன்றும் இருக்கக் கூடுமென்று நீ நினைக்க முடியுமா என்ன? நீ ஒரு வருஷத்திற்கு மூளையைப் போட்டு உடைத்துக்கொண்டாலும், உன்னால் முடியாது தான்!

"லோய்கோ அப்படியே சாய்ந்துவிட்டான். அவன் போட்ட சத்தம் மார்பிலே குத்துண்டு கதறுவதைப் போன்று அந்தச் சமவெளியில் ஒலித்தது. ராதா துடித்துப் போனாள். ஆனால், அவள் ஒன்றும் வெளிக் காட்டிக்கொள்ளவில்லை.

"சரி, நான் போய் வருகிறேன். நான் சொல்லியபடி நாளை நீ செய், லோய்கோ! தெரிகிறதா?"

"உம், தெரிகிறது. நான் செய்கிறேன்," ஸோபார் தன் கைகளை அவளிடம் காட்டிக்கொண்டு துயரம் நிறைந்த குரலில் சொன்னான். அவள் திரும்பிப் பாராதபடி போய் விட்டாள். அவன் புயலிலடிபட்டு விழுந்த மரக்கிளையைப் போன்று தரையில் விழுந்து புலம்பினான், சிரித்தான்.

"அதுதான் அந்த இரக்கமற்ற ராதா அந்த வாலிபனுக் குச் செய்தது.

"ஐயோ! ஜனங்களுக்கு ஏன் துன்பங்கள் வரவேண்டும்? ஒரு மனித இதயம் துக்கத்தாலும், துயரத்தாலும் புலம்பும் போது யார் அதைச் சட்டை செய்கின்றனர்?......

"நான் அந்த கூடாரத்திற்குத் திரும்பிப் போய் அந்த வயோதிகரிடம் யாவற்றையும் சொன்னேன். அவர்கள்



அதைப்பற்றி தீர ஆலோசித்துவிட்டு, இன்னும் பொறுத்துப் பாக்கலாமென்று அபிப்பிராயப்பட்டார்கள். மேலும் நடந் தது இதுதான்! மறுநாள் சாயங்காலம் நாங்கள் கணப் பண்டை சுற்றி உட்கார்ந்திருந்தோம். லோய்கோவும் எங்க ளிடம் வந்து உட்காரலானான். அவன் முகத்தில் துக்கம் வழிந் தோடிக்கொண்டிருந்தது. அந்த ஒரே ராத்திரிக்குள் அவன் முகம் அவ்வளவு மாறிப்போயிருந்தது. அவன் கண்கள் வளை யங் கட்டிப் போயிருந்தன. ஸோபார் தலையை நிமிர்த்தாமல் கீழே குனிந்தபடிக்கே எங்களிடம் சொன்னான் :

'நான் உங்களிடம் சில விஷயங்கள் சொல்ல விரும்பு கின்றேன், தோழர்களே! இன்று இரவு என் ஹிருதயத்தைப் பார்த்தேன். அதில் சுயேச்சையான என் ஆத்மாவுக்கு இடம் கிடையாது. ராதா அழகு ராணியைப் போன்று சிரித்துக்கொண்டே அதில் கொலு வீற்றிருக்கின்றாள்! அவள் என்னைக் காட்டிலும் அவள் சுதந்திரத்தையே அதிகம் நேசிக் கின்றாள். நான் என் சுதந்திரத்தைக் காட்டிலும் அவளையே அதிகம் நேசிக்கின்றேன்! ஆகவே தான் அவள் சொன்னபடி அவளுக்கு முன் வணங்கத் தீர்மானித்துவிட்டேன். வீரமிக்க லோய்கோ ஸோபாரை அவள் அழகு எப்படி ஆக்கிவிட்ட தென்பதை நீங்கள் எல்லோரும் பாருங்கள்!...அவள் எனக்கு மனைவியானதும், அவள் என்னைக் கட்டித் தழுவி முத்தமிடு வாள்! அதன்மேல், உங்களுக்குப் பாட்டுச் சொல்லுவதற்கு எனக்கு ஆசையிருக்காது! என் சுதந்திரத்தைப்பற்றி நான் கவலைப்படமாட்டேன்! இது சரிதானா, ராதா?' அவள் கண் களை உயர்த்தி அவனைப் பார்த்தான். அவள் விரைப்புடனே வாய் பேசாமல் தலையை ஆட்டிவிட்டுத் தன் கையை தன் கால் பக்கம் சுட்டிக் காண்பித்தாள். நாங்கள் அதைப் பார்த் துக்கொண்டிருந்தோமே தவிர வேறொன்றும் செய்யவில்லை. அவள் ராதாவாக யிருப்பிலும், லோய்கோ ஸோபார் ஒரு பெண்ணின் காலில் விழுந்து வணங்குவதை பார்க்காதபடிக்கு நாங்கள் போய்விட வேண்டும் என்று யோசித்துவிட்டோம்.

அது எங்களுக்குத் துக்கமாயும் வெட்கமாகவும், வருத்தமாயு மிருந்தது.

'சரி,' என்ருள் ராதா ஸோபாரிடம்.

'ஆஹா! அவசரப்படாதே, ராதா! இன்னும் எதேஷ்டமா யிருக்கிறது!......அவன் சிரித்துக்கொண்டே பதில் கூறிஞன். அந்தச் சிரிப்பிலே ஒரு வினயம் காணப்பட்டது.

"நான் உங்களுக்கு சொல்ல விரும்பினது இவ்வளவுதான்; தோழர்களே! அடுத்தது என்ன! அதுதான் இன்னும் பாக்கி யுள்ளது. ராதா என்னிடம் காண்பித்ததைப் போன்ற அவ் வளவு பலமான ஹிருதயம் அவளிடம் இருக்கிறதா என்பதை பரீக்ஷித்து பார்க்க வேண்டியது! என்னை க்ஷமித்துக்கொள்ளுங் கள்! நான் பரீக்ஷித்துப் பார்த்து விடுகிறேன்.'

அவன் சொன்னதை நாங்கள் சரியாகப் புரிந்துகொள் வதற்குள், ஸோபாரின் கத்தி ராதாவின் மார்பில் பாய்ந்து விட்டது. அவள் தரையில் சாயலானுள். அது எங்களைத் திடுக்கிடச் செய்துவிட்டது.

ராதா அந்தக் கத்தியை உருவி அப்பால் எறிந்துவிட்டு அந்தக் குத்துண்ட இடத்தைத் தன் தலை மயிரால் அமுக்கிக் கொண்டு, புன்னகையுடன் உரக்கச் சொன்னுள் :

"விடைபெற்றுக்கொள்ளுகிறேன், லோய்கோ! நீ இப்படிச் செய்வா யென்பது தெரியும்.........அவள் சொல்லி வாய் மூடி யதும் அவள் ஆத்மா பிரிந்து போனது.

" 'கர்வமுற்ற இளவரசி! நான் இப்பொழுது உன் காலடியை வணங்குகிறேன்' லோய்கோவின் அந்த உரத்த குரல் அந்தச் சமவெளியெங்கும் சப்தித்தது. அவன் உதட் டைக் கடித்துக்கொண்டு இறந்து கிடக்கும் ராதாவின் காலடி யில் விழலானுன். நாங்கள் தொப்பியைக் கழற்றிக்கொண்டு வாய் பேசாது நின்று கொண்டிருந்தோம்!



"நீ இதற்கு என்ன சொல்லுவாய் தம்பி! நூர் சொன்னுன்" நாம் அவனைக் கட்ட வேண்டுமென்பதாக. ஆனுல் லோய்கோ ஸோபாரைக் கட்டுவதற்கு யாருடைய கையும் கிளம்பவில்லை. நூருக்கும் அது தெரியும். அவன் கையைக் ஆட்டிக்கொண்டு பின்னுல் திரும்பிக்கொண்டான்.

"டானிலோ ராதாவுக்கும் அப்பால் கிடந்த அந்தக் கத்தியை வெறித்துப் பார்த்தான். அவன் மீசை துடிக்க லாயிற்று. அந்தக் கத்தி கூர்மையாக இருந்தது; அதில் இன்னும் ரத்தம் வடிந்துகொண்டிருந்தது. ஐயோ! மறு க்ஷணம் டானிலோ அந்தக் கத்தியை எடுத்து ஸோபாரின் முதுகில்—அவன் இருதயத்திற்கும் நேரே—ஓங்கிக் குத்தி விட்டான்.

'ஆஹா! நீ செய்தது சரிதான், டானிலோ!'...லோய்கோ திரும்பி எளிய குரலில் சொல்லிவிட்டுக் குத்துண்ட வேதனை யுடன் ராதாவின் காலருகே புரளலானுன்.

நாங்கள் நின்றுகொண்டே பார்த்துக்கொண்டிருந்தோம். அங்கே ராதா தன் தலை மயிரை மார்பகத்தில் அமிழ்த்தியபடி இறந்துகிடந்தாள். அவள் கண்கள் வானத்தை நோக்கிய படி விரியத் திறந்திருந்தன. அவள் காலடியில் வீரன் லோய்கோ ஸோபார் அப்படியே பிணமாகிக் கிடந்தான். அவன் முகம் கீழே கிடந்தது.

"நாங்கள் எண்ணத்தில் மூழ்கியபடியே நின்றுகொண் டிருந்தோம். டானிலோவின் புருவங்களும், மீசையும் துடித் துக்கொண்டிருந்தன. அவன் வானத்தைப் பார்த்தானே தவிர வேறென்றும் பேசவில்லை. வயோதிக நூர் கீழே விழுந்து முகத்தை குப்புறப் பொத்திக்கொண்டு, புலம்பிக் கொண்டிருந்தான்.

"நீ சுற்றுப்பயணம் செய்கிருயாக்கும். நல்லதுதான். ரஸ்தாவை விட்டு திரும்பிப் பார்க்காதபடிக்கு—போய்க்

கொண்டே யிரு—நேரே போய்க்கொண்டேயிரு……அவ்வளவு தான், தம்பி!"

மேக்கர் தன் பேச்சை நிறுத்திவிட்டுச் சுக்கானை எடுத்துப் பையில் போட்டுக்கொண்டு, கோட்டை இழுத்து மார்பை மூடிக்கொண்டான். மழை லேசாகத் தூற ஆரம்பித்தது. காற்றுக் கிளம்பி கடல் உக்ரத்துடன் இரைய ஆரம்பித்தது. குதிரைகள் ஒவ்வொன்றாக அந்தக் கணப்பண்டை வந்து எங்களைப் பார்த்துக்கொண்டே சுற்றிலும் அசைவற்று நின்றன.

மேக்கர் அவர்களிடம் "ஹே…ஹே…ஹோ!" என்று சொல்லிக்கொண்டே அவனுக்குப் பிரியமுள்ள கறுப்புக் குதிரையின் பிடரி மயிரைப் பிடித்துத் தடவிக் கொடுத்து விட்டு, பின் என்னிடம் திரும்பி,

"படுக்க நேரமாச்சு…" என்றான்.

இதைச் சொல்லிவிட்டுத் தன் நீண்ட கோட்டை இழுத்து போர்த்துக்கொண்டு தரையில் படுக்கலானான். நான் தூங்க இஷ்டப்படவில்லை. அந்த சமவெளிப் பக்கம் கவிந்த இருளைப் பார்த்தவண்ணமிருந்தேன். அந்த கர்வமிக்க அழகு ராணி, ராதாவின் உருவம் என் கண்முன்னே தெரிவதைப்போன்று இருந்தது. அவள் தன் தலைமுடியை தன் மார்பில் வைத்து அழுத்திக்கொண்டிருக்கிறாள். அவள் விரல்களின் வழியாக இரத்தம் வழிந்து, சிவப்பு நட்சத்திரங்களைப் போன்று துளி துளியாகத் தரையில் சொட்டிக்கொண்டிருந்தது.

அவள் காலடியிலே வீரமிக்க நாடோடி இளைஞன்—லோய்கோ ஸோபார் கிடந்தான்…அவன் முகத்தினின்றும் கண்ணீர் தாரை தாரையாக வழிந்தோடிக்கொண்டிருந்தது…

மழை கனக்க ஆரம்பித்தது. கடல் இந்தப் பெருமை மிக்க நாடோடிக் காதலர்களுக்கு—வயோதிக சிப்பாய்



டானிலோ மகள் ராதாவுக்கு லோய்கோ ஸோபாருக்கு—துக்க கீதம் இழைத்துக்கொண்டிருந்தது.

அந்த இருளின் மூடுபனியிலே அவர்கள் இருவரும் மௌனமாக அலைகின்றனர். அவன் முயன்றும், அந்த வீர மிக்க லோய்கோவால் ராதாவைப் பிடிக்க முடியவில்லை.

# தங்கச் சுரங்கம்

### பால்ஸாக்

**நா**ன் அப்பொழுது பாரீஸ் நகரின் ஒதுக்கமான சின்ன தெருவொன்றில் வசித்துவந்தேன். காதல் சாஸ்திரம் என்னை சிறியதோர் மச்சு வீட்டில் இருக்கும்படி செய்துவிட்டது. நான் அங்கே இரவு முழுவதும் வேலை செய்வேன். பகலிலும் பக்கத்திலுள்ள நூல் நிலையத்திற்கு போய் அதில் வேலை பார்ப்பேன். அங்ஙனமே இளைஞர்களைப் போன்று பெரும்பாலும் தனியனாகவும், செட்டாகவும் வேலைப்பார்த்து வாழ்ந்துவந்தேன். நான் அங்கு அனுபவித்த ஓர் பொழுதுபோக்கு, மாலை வேலைகளில் கொஞ்ச தூரம் நடந்துபோய் வருவதுதான். பின்னிட்டு அந்த ஜனங்களின் பழக்க வழக்கங்களையும் கற்றுக்கொள்ள ஆரம்பித்தேன். அவர்களைப் போன்றே நானும் எளிய உடைகள் அணிந்துகொள்வேன்; அவர்களுடன் சகஜமாகப் பழகுவேன்; சந்தைகளுக்குப் போவேன்; அக்கம் பக்கங்களிலுள்ள ஹோட்டல்களுக்குப் போய் அவர்களுடன் சேர்ந்து சீட்டாடுவேன்.

அவ்விதம் அவர்களுடன் நெருங்கிப் பழகியதின் மூலம் நான் வெகு சீக்கிரத்திலேயே மனித சுபாவத்தை அறிந்துக்கொள்வதில் பெரிய நிபுணனாகிவிட்டேன். எனக்கு ஏற்கனவேயே அந்த வகையில் கொஞ்சம் அருள் இருந்தது. ஒரு மனிதன் அவனைப்பற்றிய குண விசேஷங்களைக் கிரகிக்க முடியாதவாறு எப்படித்தான் உடைகளைக் கொண்டு தன்னை மறைத்துக்கொண்டு இருப்பினும் அவன் சுபாவத்தை அறிந்து அவன் எப்படிப்பட்டவன் என்று என்னால் சொல்லிவிட



முடியும். இப்படி மனித சுபாவத்தைக் கண்டறியக்கூடிய எனது சக்தியைப் பாக்தாத் கலீப் தன் செல்வத்தைக் கண்டு பெருமிதமடைவதைப்போன்று நானும் பெருமிதம் அடைவேன்.

என்னிடம் இருக்கும் இந்தச் சக்தியை பயன்படுத்தியதன் மூலம் மக்களின் குணாதிசயங்களையும், அவர்களின் வெற்றி தோல்விகளையும் தெரிந்துக்கொள்ளலானேன். அவர்களிலே வீரர்களையும், விஞ்ஞான ஆராய்ச்சியாளர்களையும், புதுமையாக எதையும் கண்டுபிடிக்கும் மேதைகளையும், திருடர்களையும், குடியர்களையும், தீயர்களையும், வறுமையால் வாட்டப்பட்ட நோயாளிகளையும் கண்டு இருக்கின்றேன்.

நான் இங்கே உங்களுக்குச் சொல்லும் கதையை இவ்வளவு நீண்டகாலமாக எப்படி என்னுள் அடக்கி வைத்து இருக்க முடிந்ததென்பது எனக்கே தெரியவில்லை.

ஒரு நாள் என் வீட்டுச் சொந்தக்காரியின் அவளது உறவினர் ஒருவர் வீட்டுத் திருமணத்திற்குப் போகச் சம்மதித்தேன்.

அந்தக் கல்யாண விருந்து சாப்பாடும், நடனமும், ஒயின் வியாபாரக்கடை ஒன்றில் உள்ள ஒரு பெரிய அறையில் நடக்க ஏற்பாடு செய்திருந்தது. குறிப்பிட்ட அந்தத் தேதியில் நான் அங்கே சென்றேன். சுமார் என்பதுபேர் வரை ஆடம்பரமாக ஆடைகள் அணிந்து சிங்காரித்துக்கொண்டு அங்கே கூடியிருந்தார்கள். விருந்து முடிந்ததும் எல்லாரும் நடனமாட ஆரம்பித்தனர். அவர்கள் நடனமாட ஆரம்பித்த கொஞ்ச நேரத்திற்குள்ளேயே உலகம் நாளையோடு முடிந்துபோய்விடுவதைப்போன்று "நன்றாய் சாப்பிடு, குடி, சந்தோஷமாக இரு- ஏனெனில் நாளை நீ இறந்துவிடுவாய்!" என்ற உபதேசத்திற்குக் கீழ்படிந்து நடப்பதைப்போன்று கோலாகலமாகக் கூத்தாடலானார்கள். அந்த நடனங்கள் பிரமாதமாக, அளவிட முடியாததாக யிருந்தன. சித்திரப்பாவைகள் போன்ற இளநங்கையர்களின் காதல் வீச்சு வீசும் பார்வைகளை பார்க்கும்பொழுது......

அவர்கள் சந்தோஷத்திற்கு எல்லையில்லாதபடி இருந்தது. சிவப்பு வர்ணம் பூசப்பட்ட சுவர்களும், ஒயின் வாடையும், புல்லாங்குழல், கிளாரிநட், பிளாக்லட் வாசித்துக்கொண் டிருந்த மூன்று குருடர்களின் இன்னிசைக் கச்சேரியும் ஒன்று கூடி அந்த அறையைச் சோபிதமாகத் தோன்றச்செய்தன.

அன்று மாலை அங்கே வாசிப்பதற்கு அந்த மூவருக்கும் ஐந்து ஷில்லிங் கொடுக்கப்பட்டது. அவர்கள் விருப்பப்படியே என்ன விரும்பினார்களோ என்ன வாசித் வாசித்தார்கள். தார்களோ பொதுவாக அவர்கள் வாசித்தது எல்லாருக்கும் பிடித்து இருந்தது.

அந்த அறையின் மூலையில் உட்கார்ந்திருந்த அந்த மூன்று குருட்டு வித்வான்களிடம் நான் சென்றேன். சங்கீதக் கலைஞர்க ளிடம் எனக்கு எப்பொழுதுமே அமோகப் பிரியம் உண்டு. அவர்களை மனிதர்களில் சிறந்த ஏதோ அற்புதப் பிறவி களாகவே நான் கருதுவதுண்டு.

அந்தப் புல்லாங்குழலும், பிளாக்லட்டும் பொதுவான வாத்தியங்களைப் போன்று இருந்தன. ஆனால் அந்தக் 'கிளாரி நட்' வாசித்தவனிடம் அபாரசக்தி காணப்பட்டது. அவன் முகம் பிறரைக் கவரக்கூடியதாயும் இருந்தது. வசீகரமுடைய தாயும் இருந்தது. அவன் தலைமயிர் வெள்ளியால் கவசம் செய்து மாட்டப்பட்டதைப் போன்று, அவ்வளவு வெண்மை யுடன் பிரகாசித்தன. அவன் முகத்திலே துக்கமும், கோர மும் படர்ந்துக் காணப்பட்டன. அவனது மங்கிய விழிகளில் அவன் ஆத்ம உணர்ச்சி பிரதிபலித்தது. அவன் இத்தாலிய நாட்டை சேர்ந்தவன் போன்று காணப்பட்டான்: கஷ்ட மின்றி, மிக்கலட்சிய பாவத்துடன் கலைச்சுவை ததும்ப அவன் இனிமையாக வாசித்துக்கொண்டிருந்தான்.

அவனிடத்திலே இராஜ கம்பீரமும், பெருந்தன்மையும் காணப்பட்டன. மக்கள் புரிந்துகொள்ளாத ஓர் மகாமேதை போன்று அவன் இருந்தான். அவனிடம் காந்த சக்தி போன்ற ஓர் சக்தி பிறரைக் கவர்ந்துக்கொண்டு இருந்தது. அந்த மனிதனிடத்தே பெருந்தன்மையை நான் கண்டேன்.



அவன் செருக்கின்றி அடக்கத்துடன் காணப்பட்டான். அவன் சங்கீதம் அவனுக்கு ஓர் ஆத்மசாந்தியளிப்பதைப் போன்று நினைக்கத் தோன்றியது. முகத்தில் உள்ள சுருக்கங்களும், கோடுகளும் ஒருகாலத்தில் அவன் உள்ளத்தே குமுறி எழுந்த குமுறல் ஒன்றை ரகசியமாக வெளிக்காட்டுவதைப் போன்று இருந்தன. நான் அவனைப் பார்த்துக் கேட்டேன்.

"நண்பரே, தாங்கள் எந்த ஊரிலிருந்து வந்து இருக்கின் றீர்கள்?"

"வேனீஸிலிருந்து."—அவன் இத்தாலிய உச்சரிப்போடு பதில் சொன்னான்.

"தாங்கள் பிறவியிலேயே குருடுதானா? அல்லது ஏதேனும்

"நான் எப்பொழுதும் குருடாயில்லை."

"நான் வேனீஸைப் பற்றி நிறையக் கேள்விப்பட்டு இருக் கிறேன். எனக்கு அங்கே போகவேண்டுமென்று ஆசையுண்டு" என்றேன்.

அந்த வயோதிக மனிதன் சடக்கென்று ஏதோ உணர்ச்சி யால் தாக்குண்டவனைப் போன்று காணப்பட்டான். பின் சொன்னான்:

"நான் உங்களுடன் இருந்தால் உங்கள் நேரம் அங்கே வீணாக்காது."

அந்த மூன்று வித்வான்களும் இப்பொழுது மீண்டும் வாசிக்க ஆரம்பித்தார்கள். அவர்கள் நான்கு தேசத்தின் நடனங்களுக்கான இசையை வாசிக்க ஆரம்பித்த பொழுது அந்த வேனீஸ்காரன் என்னைப் பற்றி எண்ணிக் கொண்டே வாசிப்பதைப் போன்றிருந்தது. என்பால் அவனது அன்புசுரப் பதை அவன் முகம் வெளிக் காட்டிற்று. அதற்கு முன்னால் காணப்படாத அளவு அவன் முகத்தில் துயரரேகைகள் நெளிந்தன. அவன் வாசித்து முடிந்ததும், சிரித்துக் கொண்டே

வாத்தியத்தைக் கீழே வைத்துவிட்டு நெற்றி வியர்வையைத் துடைத்துக்கொண்டான்.

"உங்களுக்கு இப்பொழுது எவ்வளது வயசாகிறது?" என்று கேட்டேன்.

"எண்பத்திரெண்டு."

"ஏன் உங்களை 'டோஜி' என்று எல்லோரும் சொல்கிறார்கள்?"

"நான் வேனிஸ் நாட்டு அரச குடும்பத்தைச் சேர்ந்தவன். அவர்கள் என்னை டோஜியாக தேர்ந்தெடுத்து அனுப்பியிருந்தார்கள்."

"அப்படியானால் உங்கள் பெயர் என்ன?"

"இங்கே பார்தர்கான் என்று கூப்பிடுவார்கள். ஆனால் என் முழு இத்தாலிப் பெயர் வேர்ஸேஸ் பிரின்ஸ்-மார்கோ பாசிஞோகான்."

"என்ன நீங்கள் அந்தப் புகழ்பெற்ற பாசிஞோகான் வம்சத்தவரா?"

"ஆமாம் ஐயா, ஆமாம்!"

உலக விஷயங்கள், தேசாபிமானம், அதற்கு மேலே மனித சுவாபம் ஆகியவற்றைக் குறித்து மனத்தில் வேதனைப் படுபவனைப் போன்று அவன் முகத்தின் சுருக்கங்கள் காண்பித்தன.

"வேனிஸில் ஒரு செனட்டராக இருந்திருப்பதால், நீங்கள் ஒரு பெரும் பணக்காராக இருந்திருக்க வேண்டுமே! உங்கள் சொத்துக்களெல்லாம் என்ன ஆயிற்று" என்று கேட்டேன்.

அவன் தன் அழகிய தலையை நிமிர்த்தி என்னை ஓர் முறை பார்த்து விட்டு "எனக்குத் துரதிர்ஷ்டங்கள்" என்றான்.

எனக்கு முன்னரைக் காட்டிலும் இப்பொழுது ஆவல் அதிகரித்தது. மேலே அவன் சொல்லப்போவதை எதிர்பார்த்



துக் கொண்டிருந்தேன். என் மனக் கண்ணிலே அழகிய வேனீஸ் நகரை சித்தரித்துப் பார்த்தேன். அதன் சௌந்தர்யம் என் உள்ளத்தைக் கொள்ளை கொண்டது. அந்த இன்பப் பாவசத்தினூடே மனோரதத்தில் ஏறிச் சென்றேன். ரியால்டோவைக் கடந்து லிடோ துறைமுகத்தில் இறங்கினேன். அந்தப் புகழ் மிக்க தேவாலயத்தையும், அதன் ஒவ்வொரு வேலைப் பாடுகளையும் கண்டேன். அதன் ஒவ்வோர் விலையுயர்ந்த அணி கலன்களையும் கண்ட பொழுது இத்தாலியப் பிரபுக்களையும் அவர்கள் புரிந்த கொடுமைகளையும், நசிவுக்குக் காரணமான தீய குணங்களையும் பற்றி எண்ணினேன். பாசிஞோகான் வாசிப்பதை நிறுத்தி வாத்தியத்தை கீழே வைத்து விட்டு என்னருகில் வந்தான். "நாம் போவோம்" என்றான்.

அவன் வார்த்தைகள் எனக்கு மகிழ்ச்சியையும் ஆச்சரியத்தையும் உண்டு பண்ணியது. நான் அவன் கையைப் பிடித்துக் கொண்டேன். இருவரும் சேர்ந்து புறப்படலானோம்.

தெருவுக்கு வந்ததும் அவன் சொன்னான்: "நீ என்னை வேனீசுக்கு அழைத்துக் கொண்டு போவாயா? என்னை நம்பு வாயா! அம்ஸ்டெர்மாம் அல்லது லண்டனில் உள்ள பெரிய பணக்காரர்களை காட்டிலும் அராபிக் கதைகளில் வரும் பெரிய மன்னர்களைக் காட்டிலும் நீ பெரும் பணக்காரனாகி விடலாம்."

அவனுக்குப் பைத்தியம் பிடித்திருக்கக் கூடுமோ வென்று நினைத்தேன். ஆயினும் அவனது வசீகரத் தோற்றமும், அவன் வாய்மையும் என் உள்ளத்தைக் கவர்ந்திருந்ததால் அப்படி நினைக்கவும் மனம் இடங் கொடுக்க வில்லை. பேசிக்கொண்டே சற்றுதூரம் சென்றோம். வழியில் இருந்த கல்லின் மேல் உட்கார்ந்தான். பூரண சந்திரிகையிலே அவனது நரைத்த தலை மயிர் வெள்ளிக்கம்பிகள் போன்று பிரகாசித்துக் கொண்டிருந்தன. அவன் என்னிடம் கதை சொல்ல ஆரம்பித்தான். அவன் சொல்வதைக் கேட்டுக் கொண்டு இருந்த பொழுது, நான் ஏதோ ஓர் அற்புதக் கனவுலகில் உலாவுவதைப்போன்று

ஆச்சரியத்தால் மெய் சிலிர்த்தேன். அவன் சடக்கென்று சொன்னான்.

"நான் சொன்னவற்றைப் பற்றி நீ சந்தேகப்படுகின்றாய் என்பதை நான் அறிவேன். ஆனால் அது உண்மை என்று உறுதி செய்து தருகிறேன்...உனக்கென்ன வயது இருபது இருக்குமா?...அல்லது இன்னும் கொஞ்சம் கூட இருக்கலாம், நல்லது. நான் உன் வயதாக இருக்கும்பொழுது—அது ஒரு காலம்—நல்ல வாபலிம். மிக்க அழகாயும் பணக்காரனாயுமிருந்தேன். ஆனால் எனது முதல் மதியீனச் செயல், நான் ஒரு பெண்ணின் மீது கொண்டிருந்த காதலாகும். மனிதர்களில் யாரும் இதுவரை காதலித்திராத அளவு அவளை நான் காதலித்தேன். அவளது ஓர் முத்தத்திற்காக நான் அகப்பட்டுக் கொள்ளக் கூடுமானால் என்னைக் கண்ட துண்டமாக வெட்டி சித்திரவதை செய்து கொன்று விடக்கூடிய அபாயங்களையும் பொருட்படுத்தாதபடி சோபாவின் கீழ் படுத்துக்கிடந்தேன்.

"வெண்டிராமினியைச் சேர்ந்த அழகிய யுவதி ஒருத்தியைத்தான்காதலித்தேன். அவள் கல்யாணமானவள். செனேட்டர்களிலேயே பெரும் பணக்காரனான செகிரிடோ என்பவனின் மனைவியாவாள். அவனுக்கு சுமார் முப்பது வயதிருக்கும் அவன் தன் மனைவி மீது பைத்தியம் கொண்டிருந்தான்.

"ஒரு நாள் அவளுடன் உட்கார்ந்து காதலைப்பற்றி பேசிக் கொண்டிருந்ததை அவன் கண்டு விட்டான். நாங்கள் சந்தேகத்திற்கு இடம் ஏற்படாதபடி நடக்கலானோம். ஆனால் அதை அவன் நம்பவில்லை. என்மேல் பாயலானான். நான் அவனிடம் பிடி கொடுக்க வில்லை. நான் நிராயுதபாணியாக இருந்த போதிலும் என் தற்காப்பை உத்தேசித்து அவனைப் பிடித்துக் கீழே தள்ளி அவன் நெஞ்சில் முழங்காலை வைத்து அமுக்கி அவன் உயிரையே பிழிந்து விட்டேன்...பின் அவளை (பயன்காவை) என்னுடன் வரும்படி கூப்பிட்டேன். ஆனால் அவள் மறுத்து விட்டாள். அப்படிப்பட்டவர்கள் பெண்கள் நண்பா...!



"ஆகவே நான் மட்டும் தனியாகக் கிளம்பி விட்டேன். என் மீது குற்றம் சாட்டப்பட்டது. என் சொத்துக்கள் பறி முதல் செய்யப்பட்டன...ஆனால் உடைகளையும் ததியனின் அழகிய ஓவியங்களையும், வைரங்களையும் கைப் பற்றிக் கொண்டு நான் சாந்தியை நாடி வேறோர் நாட்டிற்கு செல்லலானேன்.

"ஸ்திரிகளின் கர்ப்ப காலத்தில், அவர்களின் எண்ணங் களும் செயல்களும் என்னவோ அதுதான் கர்ப்பத்திலுள்ள சிசுக்களும் உண்டாகிவிடுகிறதென்று சொல்லுகிறார்கள். என் தாய் கருவுற்றிருந்தபோது அவளுக்குத் தங்கத்தின் மீது அதிக ஆசை இருந்திருக்கவேண்டுமென்று நான் நிச்சயமாக சொல்ல முடியும். ஏனெனில்எனக்கு அதில்தான் அதிகம் ஆசை. அதை நான் எப்போதுமே காதலிப்பது உண்டு. என்னிடம் சதா கொஞ்சம் தங்கம் வைத்துக் கொண்டுதான் இருப்பேன். இப்பொழுதுகூட என்னுடைய சட்டைப் பைக்குள் கொஞ்சம் தங்க நாணயங்கள் இருக்கின்றன.

அவன் சொல்லிக்கொண்டே தன் சட்டைப் பைக்குள் கையை விட்டு சில தங்க நாணயங்களை எடுத்து, என்னிடம் காண்பித்துவிட்டு மேலே கதையைத் தொடர்ந்தான்.

"நல்லது......எனக்குக் கண் குருடாய் யிருப்பினுங்கூட தங்கம் எங்கே இருக்கிறதென்று உணர்வு உண்டு. நகைக் கடைகளுக்கு முன்னால் சதா நின்று அங்கிருக்கக் கூடிய தங்க ஆபரணங்களையும், அதன் நிறங்களையும் உள்ளத்தில் உருவகித்துப் பார்ப்பேன்.

"அப்பொழுது இந்த உலகத்தில் என்னிடத்தில் ஒன்றும் மிச்சமில்லை. என் துயரத்தைத் தணிக்க நினைத்துப் பழைய காதலி பயன்காவைப் போய் பார்க்க தீர்மானித்தேன். திரும்பவும் இரகசியமாகச் வேனீஸுக்கு சன்றேன். அவள் ஆதரவில் ஆறுமாத காலம் இரகசியமாக வாழ்ந்து வந்தேன். அந்த சந்தோஷ வாழ்க்கை என் வாழ்வின் கடைசி நாள் வரை நிலைத்து நிற்குமென்று நினைத்தேன். ஆனால் அவள் கள்ளக்

காதலர்களில் ஒருவன் அவள் வீட்டிற்கு வந்திருந்த பொழுது அவனுக்கு சந்தேகம் தோன்றிவிட்டது. பின் ஒரு சமயம் நாங்கள் சேர்ந்து இருந்த பொழுது, அவன் என்னைக் கண் கூடாகக் கண்டுவிட்டான். உடனே அவனுக்கும் எனக்கும் சண்டை மூண்டது. அவனுக்குப் பலத்தக் காயங்களை உண்டாக்கி விட்டேன்.

"என் சந்தோஷத்திற்கு முற்றுப்புள்ளி வைக்க வேண்டியதாயிற்று. நான் மீண்டும் அந் நாட்டைவிட்டு ஓட வேண்டியவனானேன்.

"அதன் பின்னரும் வாழ்விலே அதன் இன்பத்தின் சிகரம் வரை சென்றேன். பதினான்காம் லூயியின் அரண்மனையிலுள்ள புகழ் பெற்ற பேரழகிகளுடன் எல்லாம் வாழ்ந்தேன் ஆனால் எந்த வேனீஸ்காரியைப் போன்று, அவ்வளவு அழகிலோ, அன்பிலோ காதலிலோ அவர்களில் யாரையும் நான் காணவில்லை. ஆகவே அவளைப் போய் மீண்டும் பார்க்க வேண்டுமென்ற ஆசை உண்டானது. எத்தகைய ஆபத்துக்களையும் பொருட்படுத்தாது வேனீஸுக்கு சென்றேன். ஆனால் என் விரோதி என் வரவை எப்படியோ உளவறிந்து படியோ தெரிந்துக் கொண்டுவிட்டான். எனக்கு மரண தண்டனை விதிக்கப்பட்டது.

"அப்போது பயன்கா என் கூடவே இறந்துவிடுவதாகச் சொன்னாள்......பெண்களே ஓர் விநோத பிரகிருதிகள் தானே! அப்பொழுது என்னுடன் கிளம்பி வர மாட்டேன் என்று சொன்னவள் இப்பொழுது என்னுடன்கூட தானும் சாகிறேன் என்றாள்...அவளுக்குத் தூக்குத் தண்டனை விதிக்கப்பட்டது. அவள் தூக்கிலிடப்பட்டாள்...ஒரு நாள் இருட்டு நேரத்தில் ஏரிக்கும் கீழேயுள்ள ஓர் பயங்கர பாதாளச் சிறைக்குள் என்னைக் கொண்டுபோய் தள்ளி விட்டனர்.

"என் உடைவாள் முறிந்து போய்விட்டது. அதில் கொஞ்சம் கைப்பிடியோடு இருந்தது. அது எதற்கேனும் பயன்படலாமென்று நினைத்து அதைமட்டும் தந்திரமாக என்



னிடம் ஒளித்து வைத்து இருந்தேன். எனக்கு வயது இருபத்திரெண்டுதான். நல்ல பலத்துடனும், தைரியத்துடனும் இருந்தேன். அந்தச் சண்டையில் ஏற்பட்ட காயங்கள் வெகு விரைவிலேயே ஆறிப்போய்விட்டன...ஆனால் என் உடம்பு சௌக்கியம் அடைந்ததும் எனக்கு விதிக்கப்பட்ட மரண தண்டனை நிறைவேற்றப்படும் என்பதை அறிந்தேன்.

"உடனே கொஞ்சம் காலம் கடத்த எண்ணி உடம்பு சரியில்லை என நோயாளியைப் போன்று பாசாங்கு சய்துக் கொண்டு அதனின்றும் தப்பிக்க முயற்சிக்கலானேன். மிகவும் கஷ்டப்பட்டு நாளெல்லாம் சிந்தித்தேன். கடைசியாக ஒரு யோசனை தோன்றது. அந்தச் சுவரில் துவாரம் செய்து அதன் வழியாக அந்தக் கால்வாயில் குதித்து, அதில் இருந்து நீந்திக் கரைக்குப் போய்விடலாம் என்று முடிவு கட்டினேன். ஆனால் அது சாத்தியமாகத் தோன்றவில்லை. எனக்கு தண்ணீருக்குள் மூழ்கி யிருக்கத் தெரியாது...நான் நீந்துவதற்கு முன் தண்ணீருக்குள் மூழ்கியாக வேண்டும். அந்தத் துளை வழியாக தண்ணீர் பீறிக்கொண்டு சிறைக்குள் வந்து பறியில் அகப்பட்ட எலியைப்போன்று என்னை அமுக்கிவிடும். என்ன செய்வது?

"தன்னைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டுமென்ற ஆசைதான் மனிதனை ஏதேனும் ஒன்றைக் கண்டு பிடிப்பதில் பெரிய நிபுணனாக ஆக்கிவிடுகிறது. அவன் கற்பனை எதையும் ஒதுக்கித்தள்ளி விடுவதில்லை. அவன் மூளை அதற்கு முன்பெல்லாம் இல்லாததைக் காட்டிலும் வெகு துரிதமாக வேலை செய்யும். ஆகவே கடைசியாக என் அறையை சுற்றிப் பார்க்கலானேன். அங்கே ஒரு கல் இருந்தது. அதில் அராபி மொழி எழுதப்பட்டிருந்தது. யாரோ ஒரு கைதி அவனுக்குப் பின் அங்கே வருபவர்களுக்கு எச்சரிக்கை செய்வதற்காக அவ்விதம் எழுதி வைத்திருக்க வேண்டும். அந்தக் கல்லில் கீழக் கண்டவிதம் எழுதப்பட்டிருந்தது:

"கதவுக்கு சமீபத்திலிருக்கும் 'வலது பக்க' மூலையில் உன் பக்கத்தில், நான் மேலும் இரண்டு கற்களை தோண்டி எடுத்

தேன். மூன்றுஅடி ஆழத்திலும் பதினாறுஅடி நீளத்திலுமாக சௌகர்யமான ஓர் சுரங்கப் பாதைத் தோண்ட நினைத்தேன்''

"அதிர்ஷ்டவசமாக அங்கே என்னை கண்காணிக்க அந்த சிறைக்குள் வார்டர்கள் இல்லை. அங்கு காவல் பார்த்துக் கொண்டிருந்த ஒருவனும் முன்னதாகவே தூங்கப் போய் விட்டான். எவனோ ஒருவன் அத்தகைய நிலையை ஆரம்பித்து வைத்தது எனக்கு அதிர்ஷ்டம் என்றுதான் சொல்லவேண்டும். அவன் ஆரம்பித்து வைத்தில் நான் லாபம் அடையவேண்டிய பிராப்தம் இருந்ததால், அவன் அதை முடிப்பதற்குள் இறந்து போய்விட்டான் போலும்!

"நான் ஓர் கல்லைப் புரட்டிப் பார்த்தேன். அதன் மறுப் பக்கத்தில் புதையல் இருக்குமிடத்தைப் பற்றி சில வரிகள் எழுதப்பட்டிருந்தன. அதை எடுக்க கிட்டதட்ட ஒரு மாத மேனும் ஆகுமென்று கணக்கிட்டேன். அந்தப் புதையலைப் பற்றி சதா என் மனத்தில் எண்ணிக் கொண்டே நான் இடைவிடாது உழைக்கலானேன். தங்கம்! வைரம்! அவற்றை நான் அடைய வேண்டும்.

"ஒரு நாள் இரவு அவ்விதம் வேலைப் பார்த்துக்கொண்டு இருக்கும்போது என் கத்தி ஒரு மரத்தில் குத்தி அதில் பொத்தலுண்டாக்கிவிட்டது. காரியம் சுலபத்தில் கைகூடுவதாகவே இருந்தது.........நல்ல காலம்; மறு நாள்தான் நான் நீதிஸ்தலத்திற்கு கொண்டு போகப்பட இருந்தேன். எனவே என் சக்தி முழுவதையும் உபயோகித்து பூதத்தைப்போன்று வேலை செய்யத் தொடங்கினேன். வெகு சீக்கிரத்திலேயே என் கத்தி அந்த மரத்தைக் குத்தி துளைத்துக்கொண்டு போனது. அதற்கப்பால் ஒன்றும் தடங்கலில்லை. அந்த துவாரத்தின் வழியாகப் பார்த்தேன். அங்கு ஓர் குகை இருப்பதும் அந்தக் குகைக்குள் தங்கக் குவியல் இருப்பதும் தெரிந்தது.

"அங்கு 'டோஜியும் பத்துக் கவுன்சிலர்களில் ஒருவரும் உள்ளே இருந்தனர். அவர்கள் என்ன பேசிக்கொண் டிருக்



கின்றனர் என்பதை கவனித்துக் கேட்டேன். அரசாங்கத்தின் "டோஜிகள்'' எல்லோரின் இரகசியத் திரவியங்களும் அங்கே தான் இருக்கின்றதென்பதை நான்கு தெரிந்துக் கொண்டேன்.

"அவ்வளவுதான்! நான் காப்பற்றப் பட்டேன். சிறை அதிகாரி வந்ததும் நான் தப்பியோட உதவும்படியும், என்னுடன் கூடவந்து முடிந்தவரை தங்கத்தை எடுத்துக் கொண்டு போகலாம் என்றும் சொன்னேன்.

"அவன் தயங்கவில்லை. அதே கணம் சம்மதித்தான். லெவனுக்கு செல்லக் கூடிய கப்பல் ஒன்றும் தயாராக இருந்தது. எல்லாவித ஏற்பாடுகளையும் செய்து முடித்துக் கொண்டு அன்று இரவே அந்த வேனிஸ் சுரங்கத்திற்குள் புகுந்து விட்டோம்.

"அங்கே நான்கு பெட்டிகள் நிறைய தங்கம் இருப்பதைக் கண்டேன். அதைத் தவிர வேறு எங்கு பார்த்தாலும் தங்க பாளங்கள் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன...அந்தச் சிறையதிகாரி அதைக் கண்டதும் சந்தோஷம் தாளமாட்டாமல் சிரித்துக்கொண்டு குதிக்கத் தொடங்கி விட்டான்.........

"அவனது மிதமிஞ்சிய சந்தோஷத்திலே வைரம் இருந்த மேஜையை அவன் பார்க்கவில்லை. நான் அதை மறைத்து உட்கார்ந்துக்கொண்டு முடிந்தவரை என் உடைகளில் அள்ளித் திணித்துக் கொண்டேன். எப்படியெல்லாம் திணித்துங்கூட அதில் மூன்றில் ஒரு பங்கைகூட என்றால் அள்ளி வைத்துக்கொள்ள முடியவில்லை.

"எங்களுடைய பேராசைக்கு எல்லையே இல்லாதிருந்த போதிலும் 2000 பவுன்களை மட்டுமே எங்களால் எடுத்து வர முடிந்தது. அதற்கும் சிறை வழியே போய் போய் ஆறுதரம் கட்டிக்கொண்டு வந்தோம். அதிலும் ஒரு மூட்டையை பிரித்து அங்குள்ள சிறை அதிகாரிகளுக்கும், காவலாளர்களுக்கும் கொடுத்து விட்டோம்.

"அதிகாலையில் தப்பித்துப் போய் வெகு சீக்கிரத்திலேயே கப்பலில் ஏறிக் கொண்டோம்.

"அன்று இரவின் சம்பவத்தை நினைத்த பொழுது அந்த இடத்தில் தங்கமும் வைரமும் நவரத்தினங்களும் குவித்து கிடந்ததை விட்டு வந்தது என்னை அதே சிந்தனையில் ஆழ்த்தியது. எனக்கு அதுவே ஜுரமாக வந்து விட்டது.........

"நாங்கள் ஸ்மிர்ணாவிலிருந்து பிரான்சுக்குச் சென்றோம். பின் அந்த ஜெயிலதிகாரியின் மன நிலையில் மாற்றம் உண்டா கியாது. நாங்கள் பிரியலானோம்.

"என்னிடத்திலிருந்த திரவியத்தில் பாதியை லண்டனி லும், ஆம்ஸ் டெர்டாமிலும் விற்ற பின்னர் நான் மாட்டரிட் டுக்குச் சென்றேன். அங்கே நல்ல சுகபோகத்தில் வாழ்ந்தேன். அத்தகைய சுகபோக வாழ்வின் மத்தியிலே என் ஆரோக்கியம் குன்றிபோனது. சில வருடங்களுக்கு முன் ஏற்பட்ட கவலை யும் ஆசையும் நோயாக மாறி என்னைப் பற்றிக் கொண்டது. அந்த அர்த்தமற்ற ஆடம்பர போகவாழ்வில் அமிழ்ந்து கிடப்பதனின்றும் கரையேறி நான் அமைதியான வாழ்விற்கு அந்த சமயம் சென்றிருக்கலாம்.

"அப்பொழுது நான் ஒரு பெண்ணைக் காதலித்தேன். அவளையே என் மனைவியாக்கிக் கொள்ள ஆசை கொண்டேன். அவள் பிரான்சு தேசத்திலுள்ள உயர்ந்த குடும்பப் பெண், அவளிடம் என் உண்மைப் பெயரைச் சொன்னேன்......ஆனால் அந்தப் பாதகி என்னிடமிருந்த திரவியம் அனைத்தையும் பறித்துக்கொண்டு என்னை அனாதையாக விட்டு விட்டாள் என்று சொன்னால் நீ என்னை நம்புவாயா? இம் மாதிரி பெண் ணாசையால் எல்லாம் இழந்து இழி நிலைக்கு ஆளாகி தெருவிலே திரிந்து அலையும் பிரபுக்களின் கதிக்கு நான் ஆளானேன். அவள் என்னை நிர் மூடனாக்கிவிட்டாள். நான் என்ன செய்ய முடியும்? என் உண்மை பெயரை யாரிடமும் சொல்லவோ அல்லது என் பாதுகாப்பைக் கருதி அதிகாரி களிடம் விண்ணப்பித்துக் கொள்ளவோ முடியாது. நான் அப்படி தெரிவிக்கக் கூடுமாயின் நான் திரும்பி மீண்டும் வேனி ஸுக்குப் போக வேண்டி ஏற்படும். வேனிஸுக்கு சென்றால்



அங்கே எனக்களித்த மரண தண்டனையை நிறைவேற்றி விடுவார்கள். ஆகவே என்ன செய்வதென்று பலவாறாக யோசித்துக் கொண்டிருந்தேன்......நல்ல வேளையாக புரட்சி ஏற்பட்டது. நான் அந்த சிறையை விட்டு வந்தபொழுது ஓர் திட்டத்துடன் வெளி வந்தேன். நான் எப்படியேனும் வேனிஸுக்குச் செல்ல வேண்டும். அந்தப் புதையலைப் பார்க்க வேண்டும் நான் எப்படிப் போக முடியுமென்பதுதான் தெரி யாதிருந்தது......நீ எனக்கு உதவி செய்வாய்யென்று நம்பு கின்றேன்."

"நாம் இருவரும்! வேனிஸுக்குச் செல்வோம். நாம் எப்படி யேனும் அங்கே போய் விடலாம். நாம் கோடீஸ்வரர்களாக திரும்பி வருவோம்...நீ என் வாரிசாக இருக்கலாம்...அப்புறம் நீதான் வேனிஸின் ராஜா."

**நா**ன் இந்தக் கதையை கேட்டு ஸ்தம்பித்து போய் விட்டேன். நான் நெடுநேரம் வாய் திறந்து ஒன்றுமே சொல்ல வில்லை. அவன் ஏக்கத்துடன் என்னைச் சாந்தமாகப் பார்த் தான். பின் தன் கிளாரிநட்டை எடுத்து ஒரு வேனிஸ் பாடலை பாட ஆரம்பித்தான்.

என் கண்களில் நீர் நிறைந்து விட்டது.

அந்தப் பக்கம் சென்று கொண்டிருந்த ஜனங்களின் இதயங்களை அந்தக் கீதம் தொட்டிற்குமென்பது நிச்சயம்.

அவன் வாசிப்பதை சடக்கென்று நிறுத்திவிட்டு சொன்னான்.

"அந்தப் புதையல் சதா என் கண்முன் தோன்றிக் கொண்டே இருக்கிறது......அந்த வைரங்களில் நல்ல ஜ்வலிப்பு இருக்கின்றது...அவற்றின் பிரகாசம் இருளடைந்த என் ஆத்மாவையே பிரகாசிக்கச் செய்கின்றது...என் தங்க சுரங்கத் தைக் கண்டு விட்டேன்! அதை நான் மீண்டும் அடைய வேண்டும்."

அடுத்த கணம் அவன் மண்டியிட்டு ஆண்டவனை நோக்கி பிரார்த்திக்கலானான்.

"என் உயிர் பிரிவதற்கு முன் ஆண்டவா! நான் வேனீஸுக்குச் செல்ல அருள்வீராக!"

"நானும் உன்னுடன் வருகிறேன்," என்றேன். அவன் முகத்தில் ஒளி உண்டானது. அவன் கையை நீட்டிக்கொண்டு "அப்பா! கடைசியாக நான் ஒருவரைக் கண்டு பிடித்தேன்" என்றான்.

அவன் கையைப் பிடித்து அழைத்துச் சென்றேன். அந்தக் விட்டின் வாசலண்டை சென்றதும் நாங்கள் ஒருவரை ஒருவர் கைகுலுக்கிக் கொண்டோம்.

"நாம் நாளைக்குப் புறப்படலாமா?" என்றான்.

"நாம் சிலவுக்கு கொஞ்சம் பணம் சேர்ந்ததும் புறப்படுவோம்."

"நாம் காலால் நடந்தே போவோம்......அவ்வளவு தங்கத்தை யடைய...அந்தக் கஷ்டமெல்லாம் ஒன்றும் பிரமாதமல்ல" என்றான்.

ஆனால் அந்த மாரிக் காலத்திலேயே பாசினோகான் பூவுலச் சுரங்கத்தை நோக்கி நடக்காமலே, மேலுலகுக்கு பறந்துபோய் விட்டான்.

# அமிர்தமும் விஷமும்

## ஆகஸ்ட்ஸ்டின்பர்க்

உதவி கவுன்சிலரான இளைஞன் குஸ்டாப்பாக் கல்யாண சம்பந்தமாக தன் விருப்பத்தை லூசியின் தகப்பனாரிடம் தெரிவித்தபொழுது, அந்த வயோதிக மனிதன் இப்படி முதல் கேள்வியைப் போட்டான்.

"நீ எவ்வளவு சம்பாதிக்கின்றாய்?"

"மாதம் சுமார் நூறு குரோனர் (நூறு ரூபாய்) வரை. ஆனால் லூசி......"

"அதைப் பற்றிச் சொல்லாதே" என்று இடை மறித்துச் சொன்னான் கிழவன். "நீ போதியது சம்பாதிக்கவில்லை."

"அப்படியல்ல, ஆனால் நானும் லூசியும் ஒருவரையொருவர் ரொம்ப அன்யோன்யமாக நேசிக்கின்றோம். ஒருவருக்கொருவர் நேந்து நிரவிக் கொண்டு போய்விடுவோம். அந்த நிச்சயம் எங்களுக்குள் உண்டு."

"அது சரிதான், ஆனால் எப்படியும் உன் வருமானமெல்லாம் சேர்த்தும் பன்விரண்டு நூறுதானே? சர்க்கார் சம்பளத்தைத் தவிர வேறு ஏதாகிலும் கிடைக்க வழியுண்டா?"

"ஆமாம், எங்களுக்குப் போதியது உண்டு. என்றுதான் நினைக்கிறேன். பின்னாடி நீங்கள் பார்ப்பீர்கள். நாங்கள் எப்படி ஒருவருக்கொருவர் பரஸ்பரம்......"

நீ சொல்வது சரிதான். அப்படி அந்த இதர வகையில் ஏதாவது வருமானம் வருமென்ருல், அவைகள் எப்படி என்று நான் தெரிந்து கொள்ளக் கூடாதா?''

"ஆஹா!" பாக் உற்சாகத்துடன் சொன்னன்: "எனக்கு இதர வேலைகளில் போதிய அளவு கிடைத்து விடும்."

"என்ன வேலை அது! எவ்வளவு கிடைக்கும்?"

"நான் பிரெஞ்சில் பாடம் சொல்லிக் கொடுப்பேன். அதோடு மொழி பெயர்ப்பேன். 'ப்ரூப் ரீடிங்'கும் கொஞ்சம் பார்ப்பேன்.

"மொழி பெயர்ப்புக்கு எவ்வளவு?"

"அதைச் சரியாகச் சொல்ல முடியாது. இப்போது ஒரு ப்ரெஞ்சு நூலை மொழி பெயர்த்துக் கொண்டிருக்கிறேன். அதற்கு ஒரு பக்கத்திற்கு ஐந்து'குரோனர் வீதம் கிடைக்கும்.''

"அது மொத்தம் எத்தனை பக்கங்களிருக்கும்?"

"சுமார் 4 டஜன் பக்கங்களுக்கு மேலிருக்கலாம்."

"சரி, இதற்கு ஒரு நூற்றி ஐம்பது குரோனர் என்று வைத்துக் கொள்வோம். இன்னும் பாக்கியில் என்ன வரும்.''

"அது எனக்குத் தெரியாது. அது கொஞ்சம் சந்தேகந் தான்."

"என்ன இது கல்யாணம் செய்து கொள்ள வேண்டு மென்கிருய். உனக்கு ஒன்றும் நிச்சயமாக இல்லையே. கல்யாணத்தைப் பற்றிய உன் கருத்தே ஓர் புதுமையாய் இருக்கிறது! குழந்தைகள் பெற்று விட்டால்...நீ இதெல்லாம் நினைத்துப் பார்க்கவில்லையாக்கும். உணவளித்து, உடை யளித்து அவர்களை முன்னுக்குக்கொண்டு வர எல்லாம்......"

"ஆனல்" பாக் ஆட்சேபித்தாற்போல் சொன்னன்: "அவ்வளவு சீக்கிரத்தில் குழந்தைகள் பிறந்து விடாது."



"குழந்தை குட்டிகளைப் பற்றியும் முன்னுடியே யோசித்துக் கொள்வது தான் ரொம்ப நல்லது.'' லூசியின் தந்தை மேலும் சொன்னன்: நீங்கள் இருவரும் விவாகம் செய்து கொள்வதாக வைத்துக் கொள்வோம். அதில் ஒன்றும் எனக்குச் சந்தகேமில்லை ஆனல் நீங்கள் ஒருவரை ஒருவர்...உண்மையில் எதில் பிரியப் படுகிறீர்கள். அதெல்லாம் எப்படி யிருந்த ாலும் சரிதான். எனக்கு அதில் சம்மதம். லூசியை அடைவதில் உள்ளதைப் போல் காலத்தை நல்ல வழியில் உபயோகித்து வருமானத் தைப் பெருக்க முயற்சிப்பதுதான் சிறந்த வழி."

இளைஞன் பாக் அவர் சம்மதம் கிடைக்கப் பெற்றதும் ரொம்பவும் சந்தோஷப்பட்டான். அந்த வயோதிக மனிதர் கையை எடுத்து முத்தமிட்டுக் கொண்டான். அட தெய்வமே! அவனுக்கு எவ்வளவு சந்தோஷம். அவன் லூசிக்குந்தான்! அவர்கள் ஒருவரோடொருவர் கைகோர்த்துக் கொண்டு முதன் முதலாக உலவச் சென்ற பொழுது அவர்களுக்கு எவ் வளவு பெருமை! இந்த இளந் தம்பதிகளுக்கு எல்லாமே எவ் வளவு ஆனந்தமாகத் தோன்றிய

சாயங்கால வேளைகளில் அவன் அவளைப் பார்க்க வருவான். அவன் வரும்போது திருத்தம் செய்து தர அவன் ஒப்புக் கொண்டுள்ள "ப்ரூப் ஷீட்டுகளை"க் கொண்டு வருவான். இதனல் அவனுக்கு ஒரு நல்ல வரவேற்பு கிடைக் கும். அவள் அவனுக்கு ஓர் முத்தம் கொடுப்பாள். ஆனல் ஒரு நாள் சாயங்காலம் அவர்கள் ஒரு தியேட்டருக்கு விஜயம் செய்தார்கள்; வாடகை ஜட்கா பிடித்துக் கொண்டு வீட்டுக்கு வந்தார்கள். அந்த மாலைப் பொழுதில் கொஞ்ச நேரம் குஷாலாய் உலாத்தி விட்டு வந்ததற்கு அவனுக்கு 10 குரோனர் செலவாகி விட்டது. மறுபடியும், இன்னும் சில நாள் மாலை வேளைகளில் வெளியே போய் உலாவி விட்டு வர, அவனுக்கு அழைப்பு வரும். அவன் பிரெஞ்சுப் பாடம் சொல்லிக் கொடுப்பதையும் விட்டு விட்டு உலாவப் போய் விடுவான்.

கல்யாணத் தேதி நெருங்கியதும், வேண்டிய சாமான்களை வாங்குவது பற்றி அவர்கள் யோசித்தார்கள். மெதுவான நல்ல இரண்டு மெத்தைகள், மேல் உரை உள்பட மிருதுவான நல்ல தலையணைகள், இவற்றை வாங்கினார்கள். ஷாப்பிற்குப் போய், சிவப்பு நிற ஷேடு உள்ள ஒரு விளக்கும், பளிங்கினால் செய்யப்பட்ட "வீனஸ்" உருவச்சிலை ஒன்றும் வாங்கினார்கள். அதோடு கண்ணாடி சாமான்களும் கத்தி, முள் போன்ற மேஜை சாமான்களும் வாங்கினார்கள். இதற்கு மட்டும் அந்தப் பெரியவரின் உதவியும், யோசனையும் அவர்களுக்குக் கிடைத்தது. இந்த சமயத்திலெல்லாம் குஸ்டஸ்பாக்குக்கு கடுமையான வேலை. ஓடியாடிப்போய் சாமான்களை எல்லாம் கொண்டு வந்து சேர்க்கவும், விடு தேடிப் பிடிக்கவும் கொடுக்க வேண்டிய பாக்கிக்கெல்லாம் "செக்" எழுதிக் கொடுக்கவும் இன்னும் என்ன என்ன...?

இந்த இடைக் காலத்தில் குஸ்டாப்புக்கு இதர வருமானங்கள் ஒன்றும் கிடைக்கவில்லை. ஆனால் அவர்கள் கல்யாணம் முடிந்த உடன் அவன் மீண்டும் (அவற்றை) ஆரம்பித்து விடுவான். அவர்கள் ரொம்பவும் சிக்கனமாக வாழ்க்கை நடத்துவதென்றும் யோசித்து விட்டார்கள். இரண்டே அறைகள் உள்ள விடு போதுமானதென்று தீர்மானம். முதல் மாடியில் ஓர் விட்டை 600 குரோனர் வாடகைக்குப் பிடித்துக் கொண்டனர். அதில் ஓர் சமையல் கட்டும், இரண்டு அறைகளும் உண்டு. முதலில் ஓசி சொன்னாள்: இன்னும் மேல் மாடியில் மூன்று அறை இருந்தால் தேவலாம் என்பதாக. அதைப் பற்றி என்ன அவர்கள் ஒருவருக்கொருவர் அவ்வளவு காலமாக விடாப் பிடியாகக் காதலித்து வரும்போது, இதொரு பிரமாதமா! கடைசியாக அறைகள் அலங்கரிக்கப்பட்டன. பள்ளியறை சின்ன கர்ப்பக் கிரகம் மாதிரி; கட்டில்கள் பக்கம் பக்கமாகப் போடப்பட்டு வாழ்க்கைப் பயணத்திற்குச் செல்லும் வெற்றி ரதங்கள் மாதிரி ஜோடிக்கப்பட்டன. படுக்கையிலே நேர்த்தியான கம்பளிப் போர்வைகளும், இளந் தம்பதிகளின் விலாசம் போட்ட உயர்ந்த ரகத் தலையணைகளும் அழகு செய்தன. நீண்ட அழகிய படுதா ஒன்று ஓசியின் உபயோகத்திற்காகத் தொங்கிக் கொண்டிருந்தது. அவளது ஆயிரத்தி இருநூறு குரோனர் பெறுமான "பியானோ" வாத்தியம் மற்றொரு அறையில் வைக்கப் பட்டிருந்து. அந்த அறை படிக்க, சாப்பிட, இளைப்பாற இவற்றிற்கு ஏற்ற சாதனங்களுடன் அலங்கரிக்கப்பட்டிருந்தது. இங்கும் உயர்ந்த மரத்தால் செய்யப்பட்ட வேலைப்பாடு நிறைந்த மேஜைகளும் நாற்காலிகளும் போடப்பட்டிருந்தன. அதோடு புத்தக பீரோ ஒன்றும் பெரிய நிலைக் கண்ணாடி ஒன்றும் ஒரு சோபாவும் போடப்பட்டு நல்ல காற்றோட்ட வசதியுடன் அறை அமைக்கப்பட்டிருந்தது.



விவாகச் சடங்கு ஒரு சனிக்கிழமை இரவு நடந்தது. அன்று மறு நாள் ஞாயிற்றுக்கிழமை. பொழுது விடிந்து ரொம்ப நேரமாகியும் தம்பதிகள் தூங்கிக்கொண்டே இருந்தார்கள். குஸ்டாப்தான் முதலில் கண் விழித்தான். ஜன்னல்கள் வழியாக வெளிச்சம் தெரிந்துங்கூட, அவன் கதவுகளைத் திறந்து விடவில்லை. விளக்கைக் கொஞ்சம் தூண்டி விட்டுக் கொண்டான். அதன் ஒளி வீனஸ் உருவத்தில் படர்ந்து அற்புதமாய் காணப்பட்டது. அந்த இளம் மனைவி அப்படியே தான் தூங்கிக் கொண்டிருந்தாள். கொஞ்சங்கூட புரளவில்லை. ஞாயிற்றுக்கிழமை சந்தை போன்ற இரைச்சல் சத்தத்திலும் அவள் எழுந்திருக்கவேயில்லை. இப்போது மாதா கோவிலிலிருந்து மணி சத்தம் ரொம்ப ஆனந்தமாக ஒலிக்கத் தொடங்கியது. அந்த ஆணும் பெண்ணும் சேர்ந்து கூடிக் குலாவி மகிழ்ந்து சிருஷ்டித்து விட்டத்தைக் குறித்து இன்பவிழா கொண்டாடுவதைப் போன்றிருந்தது, அந்த ஒலியின் குதூகலம்.

குஸ்டாப் திரைக்கு அப்பால் ஏதோ சாமான்களை எடுத்து ஒழுங்குற வைத்துக் கொண்டிருந்த பொழுது ஓசி கொஞ்சம் புரண்டு படுத்தாள். அவன் உடனே சமயலறைக்குப் போய் பார்த்தான் அந்த செம்புப் பாத்திரங்களும் தகர சாமான்களும் எவ்வளவு பள பளவென்று ஜோராக இருந்தன! எல்லாம்

அவனுக்கும் அவளுக்கும் தான் சொந்தம். சமயற்காரனிடம் பக்கத்து ஹோட்டலுக்குப் போய் சாப்பாடு எடுத்து வரும்படி சொன்னான். அந்த ஹோட்டல் முதலாளியும் விபரம் தெரிந்த வன். அவனுக்கு இது பற்றி எல்லாம் ஒரு நாள் முந்தியே தகவல்கள் கொடுக்கப் பட்டிருந்தன. அவனுக்கென்ன' வேண்டியது பணம் தானே!

மாப்பிள்ளை மறுபடியும் படுக்கை யறைக்குத் திரும்பி வந்தார். அங்கே வந்து நின்றுகொண்டு "நான் உள்ளே வரலாமா?" என்று கேட்டார்.

பதில் வந்தது. ஒரு சின்ன கீச்சக் குரலுடன் "அன்பே வேண்டாம். இன்னும் ஒரு நிமிஷம் போகட்டும்" என.

குஸ்டாப் பின் மேஜையை ஒழுங்கு படுத்தலானான். அதற்குள் ஹோட்டலிலிருந்து பலகாரம் வந்து சேர்ந்தது. மேஜைமேல் வெள்ளை விரிப்பு போட்டு அதன் மேல் அழகான கண்ணாடி டம்ளர்களும், புதிய தட்டுமுட்டு சாமான்களும் வைக்கப்பட்டன. லூசியின் இடத்திற்கும் பக்கத்திலே மலர் மாலை இருந்தது. பூவேலைப் பாடுடைய, காலை உடையுடன் இருந்தலூசியை சூர்ய கிரணங்கள் வந்து ஆசிர்வதித்தன. இருந் தும், இன்னும் அவள் உறக்கம் கலைந்த பாடில்லை. சாய்வு நாற் காலியில் சாயலானாள். ஏன் சிரமம்? குஸ்டாபே நாற்காலி யோடு இழுத்து அவளைப் பக்கத்தில் வைத்துக் கொண்டான். இரண்டொரு துளி சாராயம், அது அவளை உற்சாகப் படுத்தி விட்டுவிடும். ஒரு வாய்...அது அவள் ஆவலை எழுப்பி விட்டு விடும். விநோதம்தான்! அவள் அம்மா, அவள் சாராயங்கள் குடிப்பதைப் பார்க்கக் கூடுமானால்! அவள் என்ன சொல்வாள்? ஆனால் இதெல்லாம்தான் கல்யாணத்திற்கானவைகள் ஆயிற்றே! தெரிந்ததுதான்! இஷ்டப்படி என்ன வேண்டு மானாலும், எப்படியும் செய்து கொண்டே போகலாம்.

இளம் புருஷன், தன் மனைவிக்காக ரொம்ப கவலையுடன் காத்திருக்கிறான் வெகு ஆவலுடன்! வாஸ்தவத்தில், அவன் கல்யாணமாவதற்கு முன்னால், அவனது பிரமச்சரிய



வாழ்விலே அவனுக்கு இன்னும் இதைவிட நல்ல சாப்பாடு களெல்லாம் கிடைத்திருக்கும். ஆனால் இதைப் போன்ற சந்துஷ்டியையோ, உற்சாகத்தையோ அவன் அனுபவித்திருக் கவே முடியாதுதான்! ஒரு கிளாஸில் "பீரை" ஊற்றிக் கொண்டு ஒரு தட்டில் பலகாரங்களை எடுத்து வைத்துக் கொண்டபொழுது இப்படி எல்லாம் அவன் மனம் நினைத்துப் பார்த்தது. பிரம்மச்சாரிகள்—கல்யாண மாகாதவர்கள் எல்லாம் மடையர்கள்! எவ்வளவு லோபிகள்! ஏன் அவர்கள் மீதும் நாய்களுக்கிருப்பது போன்று ஓர் வரி போடக் கூடாது? லூசிக்கு இதில் அவ்வளவு வேகம் தட்ட வில்லை. சாந்தமா கவும், இனிமையாகவும் சொன்னாள். "ஒரு வேளை அந்த ஏழைப் பசங்கள் கல்யாணம் செய்து கொள்ளாததற்கு அவர் களது இரக்க குணம்தான் காரணமாயிருக்க வேண்டும். அதில் சந்தேகமே இல்லை. அவர்கள் கல்யாணம் செய்து கொள்வார் களானால், அவன் நினைக்கிறபடி அவர்களுக்குத்தான் இப்படி யெல்லாம்..."

குஸ்டாபின் மனதிலே ஓர் கவலை தோன்றியது. நிச்சயம். சந்தோஷம் என்பது பணத்தினால் நிறுத்துப்பார்ப்பதல்ல அல்லவே அல்லதான். ஆனால்—பரவாயில்லை. எவ்வளவோ வேலைகளிலிருக்கின்றன. பின் எல்லாம் சாவதானமாகப் போய்விடக் கூடும். தற்போதைக்கு அங்கே இந்தக் கம்மென்று மணம் வீசும் கௌதாரி வறுவலையும், மடையான் குழம்பையும் பிரெஞ்சு ஒயினையும்தான் முக்கியமாக கவனிக்க வேண்டும். இந்தத் தடபுடலான சாப்பாடும், ஆர்டியோ சியாகோ பழங் களும் அந்த இளம் மனைவிக்கு ஓர் கணம் திகிலேற்படுத்தி விட்டது. அவள் குஸ்டாபை அச்சத்துடனும், நாணத் துடனும் கேட்டாள்: "அவர்கள் என்றைக்கும் இப்படியே வாழ்க்கை நடத்தமுடியுமா?" என. ஆனால் குஸ்டாப் லூசியின் கிளாசில் இன்னும் ஒரு தரம் நிறைய ஒயினை ஊற்றி வைத்து விட்டு அவளிடம் சாந்தமாகச் சொன்னான்: "எல்லா நாளும் ஒரு நாளைப் போலிராது. மனிதர்கள் வாழ்க்கை இன்பத்தை அவர்களால் முடிந்த போது அனுபவிக்க வேண்டும். ஆஹா! வாழ்க்கை எவ்வளவு இன்பமாக இருக்கின்றது!"

ஆறு மணிக்கெல்லாம் இரண்டு குதிரைகள் பூட்டிய நல்ல அழகான வண்டியில் தம்பதிகள் ஏறி உட்கார்ந்து கொண்டார்கள். வண்டி "பார்க்" வழியாக வெல்லாம் போனது. அது சமயமெல்லாம் லூசிக்கு நடந்து செல்லும் பாதசாரிகளைப் பற்றிய நினைப்பு வந்தது. அவள் கண்ணில்பட்ட அவர்களெல்லாம் இவர்களுக்கு வணங்கிவிட்டுப் போகிறார்கள். அவர்கள் அப்படிச் செய்வதில் அவர்கள் திடுக்கிட்டுப் போய் அப்படிச் செய்ய வேண்டும்; பின் அவர்களுக்கு இதில் பொறாமை ஏற்பட்டிருக்க வேண்டும். அவள் இப்படி நினைத்துக் கொண்டாள். 'குஸ்டாபும் நல்ல காரியம் செய்தான்' அவர்கள் நினைத்திருக்க வேண்டும், 'அவன் நல்ல ஓர் பணக்காரப் பெண்ணாகப் பார்த்து கல்யாணம் செய்துகொண்டு விட்டான். அந்த ஏழைப் பசங்கள் வழியில்லாதவர்கள், காலால் நடக்க வேண்டியதுதான். மிருதுவான மெத்தையில் உட்கார்ந்து சாய்ந்து கொண்டு, கொஞ்சமும் சிரமமின்றி வண்டியில் செல்வது எவ்வளவு இன்பமானது! அதுதான் மனமொத்த காதல் மணத்தின் அறிகுறி.

இரண்டு மாசங்கழித்து லூசிக்கு உடம்பு சரியில்லை. அவளுக்கு என்ன, ஜலதோஷமா? அல்லது ஒரு வேளை பாத்திரங்களில் ஏற்பட்ட கப்பினால் இருக்குமா? அவளை வந்து பார்க்கும்படி கூப்பிட்டு வந்த டாக்டர் அவள் உடம்பைப் பார்த்துச் சிரித்துவிட்டு "அந்த மங்கைக்கு ரொம்ப உடம்பு சரியா யில்லை, என்றால் அது நிச்சயம் ஓர் புது மாதிரி நோயாய் தான் இருக்க வேண்டும்." என்று சொல்லி விட்டான். ஒரு வேளை சுவற்றில் ஒட்டப்பட்ட காகிதத்தில் ஏதாகிலும் விஷபாஷண சம்பந்தமாக இருக்கலாமோ என்று பாக்குக்குத் தோன்றியது. உடனே அவளை ரஸாயனவாதி ஒருவனிடம் அழைத்துக்கொண்டு போய் உடம்பை நன்றாகப் பரீட்சித்துப் பார்க்கும்படி சொன்னாள். அதற்கு அந்த ரஸாயனவாதி பார்த்துவிட்டு அதனால் அப்படியெல்லாம் ஒன்றுமில்லை என்னதாகச் சொல்லிவிட்டான்.



அவன் மனைவியின் நோய் கொஞ்சமும் குணமடையவில்லை. குஸ்டாப்தானே பரீட்சித்து ஆராய்ந்து செய்து கொண்டான். வைத்திய நூல்களைப் புரட்டிப் பார்த்துப் பார்த்து அவள் நோய்க்கு சிகிச்சை கண்டு பிடிக்கலானான். அவளுக்குத் தினம் வெந்நீர் ஸ்நானம் செய்வித்தான். ஒரு மாத காலத்தில் அவள் நோய் இன்ன தென்று தெளிவாகத் தெரிந்தது. இது ரொம்ப திடீரென்று—அவர்கள் எதிர்பார்த்திராத அவ்வளவு சீக்கிரத்தில்! அவர்கள் அப்பா, அம்மா ஆகப் போகிறார்கள். அதுவும்—அது ஒரு ஆண் குழந்தையாக இருக்கப் கூடுமானால், அதில் சந்தேகமே இல்லை. அதற்கு என்ன பெயரிடுவது என்பது பற்றி இப்போதே நினைத்துப் பார்க்க வேண்டும். அதற்குள் லூசி, புருஷன் பக்கத்தில் உட்கார்ந்து அவனுக்கு ஞாபகம் படுத்தலானாள். அவன் கல்யாணம் ஆனதிலிருந்து இதர வேலைகள் ஒன்றுமே செய்யவில்லை. அந்த வகைகளில் வரவேண்டிய வருமானம் வராததால் செலவுக்கே ரொம்பவும் நெருக்கடியாக ஆகிவிட்டது. அதுவும் உண்மைதான். அவர்கள் ரொம்பவும் ஆடம்பரமாகத் தான் வாழ்ந்து வந்தார்கள். ஆனால் இனி அதெல்லாம் மாறியாக வேண்டும். அப்போதுதான் எல்லாம் திருப்தியாக இருக்க முடியும்.

மறுநாள் குஸ்டாப் தன் நெருங்கிய நண்பரான பாரிஸ்டரைப் போய்ப் பார்க்கச் சென்றான். அவரிடம் ஓர் பிராமிஸரி நோட்டு எழுதி தருவதாயும், அதன் பேரில் பணம் வேண்டும் என்றும் தவிர்க்க முடியாத சில செலவுகளுக்கு பணம் வேண்டியிருப்பதாயும் விஷயங்களைச் சொல்லிக் கேட்டான். அதற்கு அந்த சட்டம் படித்த மனுஷன் ஒரேயடியாய் சொல்லி விட்டான்: "கல்யாணம் செய்து கொண்டு குடும்ப பாரத்தை வகிப்பதில், செலவுகளை அதிகரித்து பளுவை உண்டு பண்ணும். இந்த ஒரு காரியத்திற்கு, என்னால் ஒருக்காலும் ஒன்றும் உதவி செய்வதற்கில்லை." என்பதாக.

பாக்குக்கு மீண்டும் வற்புறுத்த மனமில்லை. வெட்கத்தோடும், வெறுங்கையோடும் வீட்டுக்குத் திரும்பி வந்தான்.

வந்ததும் யாரோ இரண்டு பேர்வழிகள் அவனை வந்து தேடி விட்டுப் போனதாகச் சொன்னார்கள். அவர்கள் பட்டாளத்தைச் சேர்ந்த உத்தியோகஸ்தர்களாக இருக்ககூடுமோ என்று நினைத்தான். ஆனால் இல்லை. அவர்கள் சேனைத் தலைவர்களல்ல. ரொம்பவும் வயது முதிர்ந்தவர்களாகத் தெரிந்தது. நல்ல வேளை. பாக்குக்கு ஞாபகம் வந்தது. அவர்களுடன் உப்சலாவில் பழக்கம். அவர்கள் அவன் கல்யாணமான விஷயம் கேள்விப்பட்டு அவனைப் பார்ப்பதற்காக வந்திருக்க வேண்டும். வேலைக்காரன் உப்சலா என்று சொன்னான். ஆனால் ஸ்டாக் ஹோமிலிருந்து வந்தவர்கள் அற்புதமான "ஸ்டிக்கு"கள் கொண்டு வந்திருந்தார்கள். அவர்கள் திரும்பவும் வருவார்கள் என்பதில் கொஞ்சம்கூட சந்தேகமே இல்லை.

பின் அவன் கடைத்தெருவுக்குச் சென்றான். நல்ல வகையான "ஸ்டாபெர்ரி" போன்ற பழ தினுசுகள் எல்லாம் வாங்கிக்கொண்டு வந்தான். வீட்டுக்கு வந்ததும் தன் மனைவியிடம் அதைக் காட்டி, "பார்த்தாயா, இந்தக் காலத்தில்கூட இவ்வளவு பெரிய பழங்களை ஒரு "பிண்ட்" ஒன்னரை குரோனருக்கு வாங்கிக்கொண்டு வந்து விட்டேன்" என்றான்.

"ஆனால் அருமை குஸ்டாப், நாம் இதிலெல்லாம் பிரியப்படக்கூடாது. நம் கடன்கள் பிரச்னை என்ன ஆச்சு" என்றாள் லூசி.

"கடன்கள் தானே. ஏன் மொத்தமாய் ஒரு கடன் வாங்கி இந்தச் சில்லரைப் பிடுங்கல்களை யெல்லாம் ஒரே நாளில் தீர்த்து விடுவோம்" என்றான்.

"அப்படியா, ஆனால் இதுவும் ஓர் புதுக் கடன் அல்லவா?" என்றாள்.

"அப்படி யிருந்தாலும் பரவாயில்லை. அது நீண்ட காலத் தவணையாக இருக்கும். நீ ஏன் இந்த மாதிரி உபத்திரம் பிடித்த சமாச்சாரங்களைப் பேசுகிறாய். அந்தப் பழங்களைப் பார். ஆஹா! அதைச் சாப்பிட்டு விட்டு ஒரு கிளாஸ் ஒயின்



குடித்தால் எப்படி ஜோராக இருக்கும். இன்பத்தை துய்க்க வேண்டுமென்று உன் மனத்தில் படவே இல்லையாக்கும்.

உடனே வேலைக்காரனை அனுப்பி நல்ல உயர்ந்த ரக ஸ்பெயின் ஒயின் ஒரு பாட்டில் வாங்கி வரும்படி உத்தவிட்டான்.

அன்று மாலை பாக்கின் மனைவி, சற்று நேரம் சோபாவில் படுத்துத் தூங்கி எழுந்தாள். உடனே கடன் சமாச்சாரத்தைக் கேட்கலானாள். அவள் என்ன சொன்ன போதிலும் அவன் கோபித்துக் கொள்ள மாட்டானென்பது அவள் நினைப்பு. கோபமாவது! இல்லை. அதுதான் கிடையவே கிடையாதே. வேறென்ன? அவள் சொன்னாள்: "பலசரக்கு கடைக்காரனுக்கு பணம் கொடுக்க வேண்டும். கசாப்புக் கடைக்காரனும் நம்மைத் தொந்தரவு படுத்துகிறான்; குதிரை வண்டிக்காரன் பாக்கியை ஜாடாவாய் தீர்த்து விடவேண்டுமென்கிறான்."

இதற்குப் பாக் பதில் சொன்னான்: "இதுதானே! எல்லாவற்றையுமே—நாளைக்கே—ஒரு பைசா பாக்கியில்லாமல் கொடுத்துத் தீர்த்து விடுவோம். கடன் கிடக்கட்டும். நாம் வேறு விஷயத்தைப் பற்றி பேசுவோம்; நாம் கொஞ்ச நாழி ஜாலியாய்வெளியே போய்விட்டு வரலாம். நீ என்ன நினைக்கிறாய்? நீ வண்டியில் வந்தால்கூட தேவலாம். நல்லது அதுவும் சரிதான். டிராமிலேயே போய் பார்க்கில் இறங்கி விடலாம்."

அவர்கள் பார்க்கிற்குச் சென்றார்கள். அல்ஹாம்பரா ஹோட்டலில் ஓர் தனி அறை பிடித்து அதில் தங்கி சாப்பிட்டார்கள். அது அவர்களுக்கு ரொம்ப தமாஷாக இருந்தது. ஹோட்டலுக்கு வந்த சாதாரண ஜனங்கள் இவர்களைப் பற்றி இவர்கள் ஓர் உல்லாச இளம் காதல் தம்பதிகள் என நினைத்திருக்க வேண்டும். இந்த சமயத்திலே பில் வந்தது. அதைப் பார்க்க லூசிக்குத் தூக்கி வாரிப் போட்டது. ஆனால் குஸ்டாப்புக்கு வெகு ஜோர். வீட்டிற்குப் போய் அல்லவா இருக்கிறது அந்தப் பணச் சமாச்சாரம் எல்லாம்!

சில மாதங்கள் கழியவும் புதிய தேவைகளும் ஏற்படலாயிற்று. ஓர் தொட்டில், குழந்தைக்குத் துணி இன்னும் எல்லாம் தயார் செய்தாக வேண்டுமே!

பார்க்குக்கு இப்பொழுது வருவாயை விஸ்தரிப்பது சுலபமாக இல்லை. பல சரக்குக் கடைக்காரனும் கடன் கொடுக்க மறுத்து விட்டான். அவனுக்கு இஷ்டம்போல் கடன் கொடுத்து ஏட்டில் எழுதிக் கொண்டே போனால் அவர்கள் கதி என்ன ஆவது?

கடன் வாங்கவும் வகையில்லாதுபோன இந்த சமயத்திலே அவனுக்கு நெருக்கடி இன்னும் அதிகரித்தது. பிறக்கப் போகும் குழந்தையைத் தூக்கி வைத்துக் கொள்ள சம்பளத்திற்கு ஓர் தாதியை அமர்த்தியாக வேண்டும். இதோடு இன்னும் புதிய பொறுப்புக்களும், பளுவும் அதிகரித்தன. குடும்ப விவகாரங்களில் சிக்கி தொல்லைப்பட வேண்டியவனாய் இருந்தும் எப்படியும் சமாளிக்கத்தான் பார்க்கிறான். மொழி பெயர்த்தும் வருகிறான். இதெல்லாம் உண்மையே. ஆனாலும் அவனை அரித்துப் பிடுங்கித் தின்னும் கடன்காரர்களுக்கு அவன் என்ன செய்வது? ரொம்ப தாராள மனதுடன் தன் மாமனாரின் உதவியை நாடுவதென்று தீர்மானித்தான். அந்த வயோதிகரும் அவனை வரவேற்று ரொம்ப நாஸூக்காகச் சொன்னார்.

“இந்த ஒரு தடவை மட்டும் உனக்கு உதவி செய்கிறேன். இனிமேல் முடியாது. நீ ஒரு பிள்ளை மட்டுமல்ல எனக்கு, என் காரியங்கள் எவ்வளவோ கிடக்கிறது” என்பதாக.

பிரசவிக்கப் போகும் தன் மனைவிக்கு ஒயின், கோழி சூப்பு மற்றும் வேண்டிய விலையுயர்ந்த சாமான்களெல்லாம் வாங்கிக் கொடுத்தாக வேண்டும். மருத்துவச்சிக்கு பணம் கொடுத்தாக வேண்டும்.

அதிர்ஷ்ட வசமாக, அவன் மனைவிக்கு சுகப் பிரசவம். நாளடைவில் அவள் உடம்பு தேறியது. அவள் பிரசவித்த



பின்னர் இப்பொழுது முன்னரைவிட அதிக அழகாகக் காணப்பட்டாள். ஆனால் லூசியின் தகப்பனார் ரொம்பக் கடுமையாகத் தன் மருமகனிடம் பேசலானார்.

“எப்படியும், இனி கஷ்டம் அதிகரித்துவிடும். இனிமேல் குழந்தைகள் வேண்டாம்” என்பதாக.

கொஞ்ச காலம் பாக்கின் குடும்பம் காதலிலும், கடன் விஸ்தாரத்திலும் நடந்து வந்தது. ஒரு நாள் கஷ்டம் தலைவாசலுக்கே வந்து இடிக்கலாயிற்று. வீட்டையும் காலி பண்ண வேண்டிய நிலைமை ஏற்பட்டது. அந்தக் கிழ மனிதன் வந்து லூசியையும் அவள் குழந்தையையும் அழைத்துப் போகலானான். வண்டியில் போகும் போதே கிழவனுக்கு லூசியைப் பற்றிய கொடிய எண்ணங்கள் அவன் மனதில் தோன்றலாயின.

லூசி எப்போதும் குஸ்டாபுடனேயே தங்கியிருப்பாள். ஆனால் தங்க அங்கே இடத்திற்கும் வழியில்லாது போய் விட்டதே! அனுடைய கடன்காரர்கள் அமீனாசகிதம் வந்து வீட்டில் உள்ள மேஜை நாற்காலி முதல் சமையல் பாத்திரங்கள் வரை சகல சாமான்களையும் எடுத்துக்கொண்டு போய் விட்டார்கள்.

இப்பொழுதுதான் குஸ்டாபுக்கு நிஜ வாழ்க்கை ஆரம்பமாகிறது. எப்படியோ ஒரு [பத்திரிகை ஒன்றில் புரூப் ரீடர் வேலையை ஒப்புக் கொண்டான். அதுவும் காலையில் வெளியாகும் தினசரி செய்திப் பேப்பர். ஆகவே இரவில் ஒவ்வொரு நாளும் மேஜையண்டை இருந்து நீண்ட நேரம் வேலை பார்க்க வேண்டியவனானான். அவனுக்கு இந்தக் கடன் தொல்லைகள் மட்டும் இருந்திராவிடில் அவன் வேலையில் உயர்வு கிடைத்திருந்தாலும் சரி. உயர்வு கிடைக்கா விட்டாலும் சரி. அந்த சர்க்கார் உத்தியோகத்தை விட்டு விட்டு வந்தே இருக்க மாட்டான். என்ன செய்வது. அவன் மனைவியையும், குழந்தையையும் ஞாயிற்றுக்கிழமைகளில் மட்டும் போய் பார்ப்பதற்கு அவன் மாமனார் அனுமதித்தார். ஆனால் அதிலும் தொல்லை.

அவர்கள் இருவரும் ஒரு நிமிஷம்கூட தனியாக இருந்திட முடியாது.

மாலையில், அவன் பத்திரிகாலயத்திற்குப் புறப்பட்டதும் அவர்கள் வாசற்படி வரை வந்து வழியனுப்புவார்கள். அவன் மனம் புண்பட்டு, வேதனை தாளமாட்டாதவனாக கிளம்பிச் செல்வான். இன்னும் அவனுக்கு இருபது வருஷங்களாகிலும் செல்லும்; அவன் கஷ்டம் நீங்கி...அதன் பின்பு—ஆமாம் பின் என்ன? அவன் மனைவியையும், குழந்தையையும் வைத்துப் போஷிப்பானா? அவன் மாட்டவே மாட்டான். ஆனால் அதற்குள் அவன் மாமனாரும் இறந்து போய் விடுவாரானால் பாவம், அவர்களுக்கு ஒண்ட நிழலுக்கும் திண்டாட்டமாகிவிடும். அவ்வகையில், அவர்களைத் தனியே பிரித்து வைத்துவிட்ட அந்தக் கிழ மனிதர் எவ்வளவு தான் கொடியவராக இருந்த போதிலும் அவன் அவருக்கு நன்றி செலுத்தக் கடமைப் பட்டவன்தான்.

ஐயையோ! மனித வாழ்க்கை உண்மையில் எவ்வளவு கடுமையாவும் கஷ்டமாயுமிருக்கிறது! ஆமாம், இது ரொம்ப வெட்கக்கேடு. இவ்வுலகியே மிருகங்கள்கூட சிரமமின்றி நல்ல ஜீவனம் சுலபமாக நடத்துகின்றன. ஆனால் மனிதன் மட்டும், எல்லாவற்றிலுமே உழைத்து உழைத்து உழல வேண்டியவனாகின்றான். இது மகா மானக்கேடுதான். எல்லா மனிதர்களும் நன்றாக வாழ முடியாதபடி இருக்கிறது! எல்லா மனிதர்களும் வாழ்வின் சுக போகங்கள் கிடைக்க வசதியில்லாதிருக்கிறது.

# காதலுக்குப்பின்

## காதரைன் மான்ஸ்பீல்ட்

அத்தகைய அழகியதொரு காலை நேரத்தில் எவருக்குமே மகிழ்ச்சியில்லாதிருப்பதென்பது முடியாத விஷயம்தான். அவளைத் தவிர வேறு யாருமே இப்படி யிருக்கமாட்டார்கள். எட்னா அப்படித் தீர்மானித்தாள்: வீடுகளில் சன்னற்கதவுகள் விரியத் திறந்து கிடந்தன. அவற்றிலிருந்து பியானோ வாத்தியங்களின் ஓசையும் விரல்கள் மாறி மாறி வாசிக்கும் பொழுது ஏற்படும் சிறு சத்தமும் வந்து கொண்டிருந்தது. தோட்டத்திலுள்ள மரங்களில் வசந்த மலர்கள் பூத்துக் குலுங்கியிருந்தன. பையன்கள் தெருவில் கத்திக்கொண்டு ஓடினார்கள். சிறு நாய் ஒன்று குரைத்தது. ஜனங்கள் வேகமாயும், மெதுவாயும் போய்க் கொண்டிருந்தார்கள். அவள் இப்பொழுது தான் சற்று தூரத்திலே பெண்மணி ஒருத்தி சிறு குடை பிடித்துக் கொண்டுபோவதை—அந்த வருடத்தின் முதல் காட்சியாக அந்தச் சிறு குடையைக் கண்ணுற் கண்டாள்.

எட்னாவும் அவள் நினைத்தபடி அவ்வளவு துக்கத்துடனும் காணப்படவில்லை. அந்தப் பதினெட்டு வயதில் அழகிய கன்னங்களும், உதடுகளும், ஒளி பொருந்திய கண்களும் உடைய அவள் நல்ல ஆரோக்கியத்துடனிருக்கும்பொழுது அவ்வளவு துயரமாக அவளை எண்ணுவதென்பது எளிதானதல்ல. அதிலும் பிரெஞ்சு நீல வண்ண உடையும், பூச் செருகிய கோடை காலத்திய புதிய குல்லாயும் அணிந்திருக்கும்பொழுது! உண்மை, கறுப்பு தோல் பைண்டுள்ள புத்தகம் ஒன்றை அவள் கக்கத்தில் வைத்திருந்தாள். ஒருக்-

கால், அந்தப் புத்தகத்தில் ஏதேனும் துக்ககரமான சம்பவங்கள் விவரிக்கப்பட்டிருக்கலாம். அது சாதாரண நூல் நிலைய லெண்டிங்காகத்தான் இருந்தது. எட்னா வீட்டை விட்டு வெளியே போவதற்கு ஒரு சாக்கு நூல்நிலையத்திற்குப் போவதாகச் சொல்லிவிட்டுப் போவது! அவள் அப்படி சாக்கு சொல்லி விட்டுப்போய் நடந்ததைப் பற்றி, நினைவு கூர்ந்து இப்பொழுது நடக்க வேண்டியதைப் பற்றிச் சிந்திப்பதற்காகவே.

ஒரு பயங்கர சம்பவம் நிகழ்ந்து விட்டது. திடுதிப்பென்று நேற்றிரவு நாடகக் கொட்டகையில் அவரும் ஜிம்மியும் அக்கம் பக்கமாக உட்கார்ந்து கொண்டிருக்கையில் ஒரு கணப்பொழுது முன் எச்சரிக்கைகூட இல்லாதபடிக்கு, உண்மையில் அவள் அப்பொழுதுதான் பாதாம் சாக்லெட் சாப்பிட்டு டப்பாவைக் காலி செய்துவிட்டு அந்த டப்பாவை அவனிடம் மீண்டும் தந்தாள்—அவள் ஒரு நடிகனுடன் காதல் கொண்டு விட்டாள். ஆகவே—காதல்—கொண்டு...

அந்த உணர்ச்சி அவள் அதற்கு முன் என்றுமே கற்பனை கூட செய்து பார்த்திராத ஒரு புதிய உணர்ச்சியாக இருந்தது. அது கிஞ்சிற்றும் இன்பமானதாக இல்லை. அது திடுக்கிடச் செய்யக்கூடியதாக இருந்தது. அது அல்லவென்றால் வாழ்வையே அழிக்கக்கூடிய துக்கம், விரக்தி, வேதனை, சஞ்சலம், மயிர்க்கூச்செரியக்கூடிய பயம் இவற்றைச் சொல்லவேண்டும். ஜிம்மி அவர்கள் வண்டியைப் பிடித்துக் கொண்டிருக்கையில் அந்த நடிகன் மட்டும் நல்ல நம்பிக்கையுடன் நடைப்பாதையில் அவளைச் சந்தித்திருப்பானாகில் அவள் அவனது ஒரு சமிக்ஞையில், அவனது லேசான தலையசைப்பில், அவள் ஜிம்மியையோ, அவள் தாய் தந்தையாரையோ, அவளது இன்ப இல்லத்தையோ, அவளது எண்ணற்ற நண்பர்களையோ பற்றிய ஒரு எண்ணங்கூட இல்லாதபடி அவனைப் பின்பற்றி இந்த உலகின் கடைசிவரை போயிருப்பாள்.

அந்த நாடகம் மகிழ்ச்சிகரமாக ஆரம்பமானது. அது பாதாம் சாக்லெட் கட்டம். பின்னர் அந்தக் கதாநாயகன் கண் பார்வையை இழந்துவிட்டான். உள்ளத்தை உருக்கக்



கூடிய காட்சி! எட்னா அடக்க முடியாதபடி 'ஓ'வென்றலறி விட்டாள். மடித்து வைத்திருக்கும் ஜிம்மியினுடைய மென்மையான கைக்குட்டையைக்கூட அவள் இரவல் வாங்கிக்கொள்ள வேண்டியதாகி விட்டது. அவள் அழுததுகூட பிரதானமல்ல. அந்தக் கொட்டகையிலிருந்த அவ்வளவு பேர்களுமே கண்ணீர் விட்டனர். ஆண்கள்கூட மேடையைப் பார்க்க மனம் பொறாது நிகழ்ச்சி நிரலில் பார்வைத் திருப்பினர். ஜிம்மி ரொம்பவும் இளகிய மனமுடையவன். அவன் கண்ணீரே வற்றிப் போய்விட்டது. அவன் கைக்குட்டை யில்லாவிட்டால் அவள் என்ன செய்திருப்பாள்? அவள் கையைப் பிடித்துக் கொண்டு அவள் காதருகே, "எனது ஆசைப் பெண்ணே! தைரியமாக இரு" என்று அவளை தைரியப்படுத்தினான். அதன் பின்னர்தான் அவள் அவன் மனதை மகிழ்விப்பதற்காக கடைசி ஒரு பாதாம் சாக்லெட்டை யெடுத்துக்கொண்டு திரும்பவும் அந்தப் பெட்டியை அவனிடம் கொடுத்தாள். பின்னர் அந்த மங்கிய ஒளியில், யாருமில்லாத தனித்ததொரு அறையில், அந்தக் கதாநாயகன் இருக்கும் அந்தக் கொடிய காட்சி காணப்படுகிறது. வெளிப்புறத்தே பாண்டு வாத்தியங்களின் இன்னிசை ஒலிக்கிறது. தெருவிலிருந்து மகிழ்ச்சி ஆரவார சத்தம் கேட்கிறது, அவன் களைத்துப் போய்விட்டான். அந்தோ! எவ்வளவு துயரமாக! எவ்வளவு பரிதாபகரமாக! அவன் தட்டுத் தடுமாறிக்கொண்டு சாளரத் தண்டை போகிறான். கடைசியில் அவன் வெற்றியடைந்து விடுகிறான். அவன் திரையைப் பிடித்துக்கொண்டு அங்கே நிற்கும்பொழுது ஓர் ஒளிக்கீற்று—ஒரே ஒளிக்கீற்று—கண் பார்வையற்ற அந்த முகத்திலே விழுந்து பிரகாசித்தது. பாண்டு வாத்தியங்களின் சத்தம் மறைந்தது. அது—உண்மையில், அது பூரணமாய்—ஐயோ அதிகமான—அது (சாதாரணமான—உண்மையில் அந்த வினாடியிலிருந்து ஒருபோதும் வாழ்க்கை அந்தப்படி இருக்க முடியாதென்று எட்னா தனக்குள் உணர்ந்தாள். ஜிம்மியின் கழுத்தைச் சுற்றிப் போட்டிருந்த அவள் கையை இழுத்துக்கொண்டு அந்த சாக்லெட் பெட்டியை நிரந்தரமாக மூடிவிட்டாள். அது கடைசியில் காதலாகியது.

ஒன்றரை எட்னுவும் ஜிம்மியும் ஈடுபாடு கொண்டனர்.
ஆளாகியிருந்தாள். ஒரு
வருட காலம் அவள் உணர்ச்சிக்கு
வருட காலம் அவர்கள் பகிரங்கமாகவே சம்பந்தம் கொண்
டிருந்தனர். அவர்கள் தேநீர் அருந்துவதற்காக அவர்கள்
ஒவ்வொரும் ஒரு ஒயின் பிஸ்கட்டும், ஒரு துண்டு பார்வி—
சர்க்கரையும் எடுத்துக்கொண்டு அவர்கள் தாதிமார்களுடன்
பசுமரச் சோலைகளுக்குப் போய் புற்களின்மீது உட்கார்ந்ததி
விருந்து அவர்கள் ஒருவரை யொருவர் கல்யாணம் செய்து
கொண்டுவிடுவார்களென்பது அவர்களுக்குத் தெரியும். எட்னு
பள்ளிக்கூடத்தில் படித்த காலம் முழுவதற்கும் ஆச்சரியப்
படத்தக்க போலி கல்யாண மோதிரம் ஒன்றை அவள் அணிந்
திருந்தாள். இதுகாறுமே அவர்கள் ஒருவருக்கொருவர் அர்ப்
பணம் செய்து கொண்டிருந்தனர்.

ஆனுல் இப்பொழுது அதெல்லாம் கடந்து விட்டது.
ஜிம்மி அதைக்கூட நினைத்துப் பார்க்கவில்லை என்பதை எட்னு
வுக்கு நம்புவதுகூட கடினமாக இருந்தது. அது அப்படி எல்லா
முமே கடந்து போயிருந்தும் அவள் புனிதமான உள்ள கன்னி
மாடத்தின் தோட்டத்திற்குத் திரும்பி ஹில் தெருவுக்குப்
போகும் அந்தப் பாதையில் ஏறியதும் அவள் விநயமாக,
துக்கமாகச் சிரித்துக் கொண்டாள். அவர்கள் கல்யாணம்
செய்துகொண்ட பின்னர். அதுவரை பொறுத்திருந்து,
தெரிந்து கொள்வதைக் காட்டிலும் இப்பொழுதே தெரிந்து
கொள்வது எவ்வளவோ மேலானது. இப்பொழுது ஜிம்மி
அதை அடைவதென்பது சாத்தியமாக இருந்ததில்லை.
அவன் தன்னைத்தானே ஏமாற்றிக்கொள்வதால் ஒன்றும்
பிரயோஜனம் இல்லை. அவன் ஒருபோதும் அதை அடைய
மாட்டான். அவன் வாழ்க்கை மோதுண்டுவிட்டது; அழிந்து
விட்டது. அது தவிர்க்க முடியாதது. ஆனுல் அவன் இளை
ஞன்...காலம், மக்கள் எப்பொழுதுமே சொல்வர், காலம்
சிறிதளவே செய்யும். உண்மையில் ஒரு சிறு மாற்றத்தைத்
தான். நாற்பது ஆண்டுகளில் அவன் முதியவனுனதும் அவன்
ஒரு வேளை அவளைப்பற்றி நினைத்துப் பார்ப்பான். ஆனுல்
அவள்?—அவளுக்காக எதிர்காலம் என்ன வைத்திருக்கிறது.



எட்னு அந்தப் பாதையின் சிகரத்தை அடைந்தாள். அங்கே புதிதாகத் துளித்துத் தழைத்த ஒரு மரத்தில் வெண் மலர்கள் சிறு சிறு கொத்துகளாகத் தொங்கிக்கொண்டிருந் தன. அவள் பச்சைம் பலகை யொன்றில் உட்கார்ந்து அந்தக் கன்னிமாடத்தின் பூஞ்செடிப் பாத்திகளை கூர்ந்து கவனித் தாள். அவள் அருகில் இருந்த பூஞ்செடி ஒன்றில் அழகிய வண்ண மலர்கள் பூத்துக் குலுங்கிக் கொண்டிருந்தன. அந்தக் கனகாம்பரப் பூக்களின் அழகுப் அவற்றின் இதழ்களில் காணப்படும் நீலவண்ணக்கோடும் அவள் உள்ளத்தைக் கவர்ந் தன. அங்கே ஒரு மூலையில் குவளை மலர்கள்; சாமந்திப் பூக்கள்...கன்னி மாடப் புருக்கள் உயர வானவீதியாகப் பறந்துகொண்டிருந்தன. சகோதரி அக்கனெஸின் இன் குரலைத்தான் அவளால் கேட்க முடிந்தது. அவள் பாட் டொன்றை சொல்லிக்கொடுத்துக் கொண்டிருந்தாள். "ஆ என்னே!" அந்தச் சகோதரியின் ஆழ்ந்த குரல் ஒலித்தது. "ஆ, என்னே" மற்றவர்கள் அதையே எதிரொலித்தனர்.

அவள் ஜிம்மியைத் திருமணம் செய்துகொள்ளாவிடில் உண்மையில் வேறு யாரையுமே அவள் கல்யாணம் செய்து கொள்ளவே மாட்டாள். அவள் காதல் கொண்டுள்ள அந்த மனிதன்—அந்த பிரசித்திபெற்ற நடிகன். அப்படிக்கெல்லாம் ஒரு போதும் இராதென்று உணரக்கூடிய தெளிந்த அறிவு எட்னுவுக்கு இல்லை. அது ரொம்பவும் அதிகப்படியாக இருந் தது. அது எப்படி இருக்க வேண்டுமென்று அவள் அவாவுற்றது கூட இல்லை. அவள் காதல் அதற்கு ரொம்பவும் வலிமை பொருந்தியதாக இருந்தது. அது பேசாமல் அமைதியாக இருந்திருக்கலாம்; அது அவளை சித்திரவதை செய்தது. சாதா ரணமாக, அதுதான் அம்மாதிரியான காதலாக இருக்க வேண்டுமென்று அவள் அனுமானித்தாள்.

"ஆனுல், எட்னு!" ஜிம்மி கதறினுன். "நீ ஒருபோதும் மாறமாட்டாயா? நான் உன்னை மீண்டும் நினைக்கவே முடியாதா?"

ஐயோ, அதைச் சொல்வது எவ்வளவு துக்கமளிக்கக்
கூடியது. ஆனுல் அதை சொல்லித்தான் ஆகவேண்டும்.
"இல்லை ஜிம்மி, நான் ஒருபோதும் மாறமாட்டேன்."

எட்னு தன் தலையைத் தாழ்த்துகிருள். அவள் மடியின்
மீது ஒரு சிறு மலர் வீழ்ந்தது. சகோதரி அக்கனேஸின் குரல்
சடக்கென்று உரக்க தொனித்தது: "ஐயோ, மாட்டேன்."
எதிரொலி வந்தது, "ஐயோ, மாட்டேன்."

அந்தக் கணத்தில் எதிர்காலம் ஸ்பஷ்டமாகத் தெரிந்தது.
எட்னு அவற்றை யெல்லாம் பார்த்தாள். அவள் திகைப்
புற்ருள். முதலில் அவள் மூச்சு நின்றுவிடும்போல் இருந்தது.
ஆனுல் எல்லாவற்றிற்கும் பிறகு என்ன அதிக இயற்கையுடன்
இருக்கக்கூடும்? அவள் கன்னிமாடத்திற்குச் செல்வாள்...
அவளைத் தடுத்து நிறுத்த அவள் தாயும், தந்தையும் சகல
வகையிலும் முயற்சிப்பர். அதெல்லாம் ஒன்றும் பயன்படாது.
ஜிம்மியைப்பற்றியவரை அவள் மனநிலை அதைப் பொறுக்க
முடியாததாகும். அவர்கள் ஏன் அதைப் புரிந்து கொள்ளக்
கூடாது? அவர்கள் ஏன் அவளுக்கு கஷ்டத்திற்குமேல் கஷ்டம்
கொடுக்கிருர்கள். உலகம் கொடுமையானது! அவளுக்கு பயங்
கரக் கொடுமையானது! நகைநட்டுகளையும், அவள் இதர
பொருள்களையும் அவளது சிநேகிதர்களுக்குக் கொடுத்துவிட்டு
அவள் மன அமைதியுடனேகன்னி மாடத்திற்குப் போகிருள்.
அவர்கள் மனம் உடைந்து போகின்றனர். இல்லை, ஒரே
கணம். அவள் போகும் அந்த மாலைப் பொழுது போர்ட்
வில்லினங் கடைசி காட்சி அவளுக்கு முன்பின் அறிமுக
மில்லாத ஒரு மனிதனிடமிருந்து ஒரு பேழை கிடைக்கிறது.
அதில் வெண்மலர்கள் நிறைந்து காணப்படுகின்றது. ஆனுல்
அதில் ஒன்றும் பெயரில்லை; சீட்டில்லை; ஒன்றுமே இல்லையா?
ஆம் அந்த ரோஜா மலர்களுக்கடியே எட்னுவின் கடைசிப்
புகைப்படம் ஒரு வெள்ளைக் கைக்குட்டையில் சுற்றிவைப்
பட்டிருந்தது. அதில் அடியில் கண்ட வாசகம் எழுதப்பட்
டிருந்தது.

"உலகை மறப்பதால் உலகம் மறக்கும்"



எட்னு இன்னும் அந்த மரங்களின் கீழ் அப்படியே உட்
கார்ந்திருந்தாள். அவள் விரல்களால் அந்தப் புத்தகத்தை
இறுக்கிப் பிடித்துக்கொண்டிருந்தாள். சகோதரி அஞ்செலா
வின் பெயரை அவள் சூட்டிக்கொண்டாள். நறுக்கு! நறுக்கு!
அவள் அழகிய தலைமயிர் ஜடாவும் கத்தரிக்கப்பட்டது.
சுருண்ட கேசம் ஒன்றை எடுத்து ஜிம்மிக்கு அனுப்ப அவள்
அனுமதிப்பாளா? அது என்னவோ செய்யப்பட்டது. தலைக்கு
வெள்ளைத் துணியும், உடம்புக்கு நீல அங்கியும் அணிந்து
சகோதரி அஞ்செலா கன்னிமாடத்திலிருந்து திருச்சபைக்கும்,
திருச்சபையிலிந்து கன்னிமாடத்திற்குப் போகிருள். அவளது
துக்கம் நிறைந்த கண்களில், அவள் மோனப் பார்வையில்—
பிரம்ம ஞானம் ஒளிவிடுகிறது. அவள் அதரங்ாளில் சாந்தம்
நிறைந்த இளநகை அரும்பி மலர்ந்து. அவளிடம் ஓடிவரும்
சின்னஞ்சிறு குழந்தைகளை அது ஆசீர்வதிக்கும். ஒரு புனிதை!
அங்கே மெழுகுவர்த்திகள் மணக்கும் அந்தத் திருச்சபைக்
கூட்டத்திலிருந்து அந்த ஒரு சொல் முனமுனப்பது அவள்
காதுகளில் எட்டுகிறது. ஒரு புனிதை! இந்தத் திருச்பபைக்கு
விஜயம் செய்திருந்தவர்களிடம் அந்தக் கன்னித் துறவியைப்
பற்றி, அவளது இளமையைப் பற்றி, அவளது அழகைப்பற்றி
அவள் சோகக் காதலைப்பற்றி, அவள் சோக முடிவைப்பற்றி
சொல்லப்படுகிறது. அவள் குரல் அங்குள்ள மற்றவர்களின்
குரல்களுக்கும் மேலாக ஒலிக்கிறது. "இந் நகரத்தில் ஒரு
மனிதன் இருக்கிருன். அவன் வாழ்வு அழிந்துவிட்டது—"

ஒரு பெரிய தேனீ, பொன்னிற உறிஞ்சு குழலையுடைய
துடுக்குப் பயல், ஒரு பூவினுள் தவழ்து சென்ருன். அந்த
மென் மலர் துவண்டது; தொங்கியது; ஆடியது. அந்தத்
தேனீ பறந்து சென்றதும் அது சிரிப்பதைப்போன்று இதழ்
விரித்துக் கொண்டிருந்தது. இன்பம்! கவலையற்ற மலர்.

சகோதரி அஞ்செலா அதைப் பார்த்து விட்டுச் சொன்
ஞள்: "இப்பொழுது, இது கார்காலம்." ஒரு நாள் இரவு குளிர்
பொறுக்க மாட்டாது இவள் அறையில் படுத்துக் கொண்டிருக்
கும் பொழுது ஒரு கூக்குரல் அவள் காதில் விழுந்தது. அந்தத்

தோட்டத்திற்கும் வெளியே ஏதோ ஒரு பிராணியாக இருக்க வேண்டும். ஒரு ஆட்டுக்குட்டியோ அல்லது...நல்லது. அங்கே எந்தப் பிராணியாக வேண்டுமாலும் இருக்கட்டும். அந்தக் குரல் உறக்கமற்ற அந்தக் கன்னிப் பெண்ணை எழுப்புகிறது. வெள்ளைக் கலையுடுத்திக் கொண்டு குளிர் பொறுக்காது நடுக்கிக் கொண்டே கொஞ்சமும் பயமின்றி வெளியே போய் அதை உள்ளே கொண்டு வருகிறாள். ஆனால் மறுநாள் காலை பிரார்த்தனைக்கு மணியடித்தபோது அவளுக்கு சுரம் கடுமையாக இருந்தது. ஜன்னி கண்டு பிதற்ற ஆரம்பித்து விட்டாள். அவளுக்கு பிரக்ஞை மீண்டும் திரும்புவதாய் யில்லை. மூன்று நாட்களில் எல்லாம் முடிந்துவிட்டது. திருச்சபையில் பிரார்த்தனைகள் செய்யப்பட்டன. சின்ன சின்ன மரச்சிலுவைகள் நட்டிருக்கும் அந்தக் கல்லறை சதுக்கத்தில், கன்னிமாட பெண்களுக்காக ஒதுக்கப்பட்டிருக் கும்அந்த மூலையில், அவள் புதைக்கப்பட்டாள். சாந்தி அடை வாயாக, சகோதரி அஞ்செலா...

இப்பொழுது அது மாலைப்பொழுது. வயோதிகப் பருவத்தை யடைந்த இருவர் ஒருவர் மேல் ஒருவர் சாய்ந்து கொண்டு மெல்ல அந்தக் கல்லறைக்கு வருகின்றனர். மண்டி யிட்டு உட்கார்ந்து புலம்பிக் கண்ணீர் வடிக்கின்றனர். “எங் கள் மகளே! எங்கள் ஒரே மகளே!” இப்பொழுது அங்கு மற் றொருவன் வருகின்றான். அவன் முழுவதும் கருப்பு உடை அணிந்திருக்கிறான். அவன் மெதுவாக வருகிறான். ஆனால் அவன் அங்கே வந்து அவனது கருப்புத் தொப்பியை எடுத்த பொழுது, எட்னா அவனைப் பார்க்கிறாள். அவள் பயந்து நடுங்கும்படி அவன் தலைமயிர் வெள்ளை வெளேரென்று இருக் கிறது. ஜிம்மி! ரொம்பப் பிந்திவிட்டாய்! ரொம்பப் பிந்தி விட்டாய்! அவன் முகத்தில் கண்ணீர் வழிந்தோடுகிறது. அவன் இப்பொழுது கதறுகிறான். ரொம்பப் பிந்திவிட்டது! ரொம்பப் பிந்திவிட்டது! திருச்சபைக்கு வெளியே உள்ள இலைகள் உதிர்ந்த மரங்கள் காற்றில் அசைந்தாடுகின்றன.



உள்ளம் நெகிழும்படி அவன் பயங்கரமாக, கோரமாகக் கதறுகிறான்.

எட்னாவின் கறுப்புப் புத்தகம் அந்தத் தோட்டத்துப் பாதையில் மொத்துண்டு விழுகிறது. அவள் தாவிக் குதிக் கிறாள். அவள் இதயம் அடித்துக் கொள்கிறது. “என் காதலா, இல்லை. காலம் கடந்துவிடவில்லை. அவை எல் லாமுமே ஒரு தவறு, ஒரு பயங்கரக் கனவு. ஐயஹோ, அந்த வெள்ளை மயிர்! அதற்கு அவள் என்ன செய்ய முடியும்? அவள் அதை உண்டுபண்ணவில்லை. ஆ, பரமண்டலமே! ஆ, என்ன இன்பம்! அவள் இளமைப் பேரெழிலுடனும், சுதந்திரத் துடனும் இருக்கின்றாள். அவள் ரகசியம் யாருக்கும் தெரியாது இன்னும் அவளுக்கும், ஜிம்மிக்கும் எல்லாமுமே சாத்தியம்தான். அவர்கள் திட்டமிட்ட அந்த வீடு இனி கட்டப்படவேண்டும். பின்னால் திரும்பி அவர் களைப் பார்த்துக்கொண்டு அவன் கையால் பூஞ்செடி நட்டு வைக்கும் அந்த தவப்புதல்வன் இனி பிறக்க வேண்டும். அவனுக்கு இளைய தங்கை......ஆனால் எட்னாவுக்கு பெண் குழந்தை உண்டானதும், அந்தச் சின்ன காதல் காற்றிலே மிதந்து அவளிடம் வருவதைப்போன்று அவன் குழந்தைச் சகோதரியைத் தாவிப் பிடிக்க அவள் கைகளை நீட்டினாள்: அந்தத் தோட்டத்தை, அந்த மரத்தின் மீது விரிந்து கிடக்கும் வெண் பனித்திரையை நீலவானிப் பறந்து திரியும் மாடப் புறாக்களை, சிறிய சாளரங்களையுடைய அந்தக் கன்னி மாடத்தை, அவள் கூர்ந்து நோக்கினாள். இப்பொழுது கடைசியாக, அவள் வாழ்வில் முதன் முதலாக—அவள் அதற்கு முன்வரை அதைப்போன்று அப்படி ஒருபோதும் கற்பனை செய்து பார்த்ததே இல்லை.—அவள் காதலில் என்ன இருக்கும் என்பதை அவள் அறிந்தாள். ஆனால்—கா-த-லி-ல்!

# “நான் கேட்ட கதை”

மாக்ஸிம் கார்க்கி

அக்கொர்மானுக்கு அருகே, பெஸபேபியன் கடலோரத்தில் நான் இந்தக் கதையைக் கேட்டேன்.

ஒரு நாள் சாயங்காலம், நான் வேலை பார்த்துக்கொண்டிருந்த மொலடாவியர்களுடன் அன்றைய திராக்ஷை தோட்டத்து வேலையைச் செய்து முடித்தானதும், நான் கடற்கரைக்குச் சென்றேன். அங்கே ஓர் திராக்ஷை செடியின் நிழலில், அந்த வயோதிக இயர்ஜிலுக்குப் பின்னால், தரையில் சாய்ந்த வண்ணம் அந்த மாலையின் மங்கிய ஒளியில் கடலோரத்தோடு செல்லும் ஜனங்களின் நிழலுருவங்களை மௌனமாக கவனித்தபடி படுத்துக் கிடந்தேன்.

அவர்கள் சிரித்துக்கொண்டும் பாடிக்கொண்டும் மெல்ல உலாத்திக் கொண்டுமிருந்தார்கள். அந்த ஆண்களின் கறுத்தடர்ந்த மீசையும் தலை மயிரும் அவர்கள் தோள்பட்டையைத் தொட்டுக் கொண்டிருந்தன; அவர்களின் முகம் கொஞ்சம் கருத்துப் போயிருந்தது. பெரிய கால் சட்டையையும், சின்ன மேல் சட்டையும் போட்டிருந்தார்கள். சிறுமிகளும், பெண்களும் சந்தோஷமாயும், சாந்தமாயும் காணப்பட்டனர். அவர்கள் நீல விழிகள் அழகாக இருப்பினும், அவர்களின் முகம் கொஞ்சம் கருப்பாகவே காணப்பட்டது. அவர்களின் தலைமயிர் வாரி பின்னப்படாதபடி அப்படியே முதுகில் கிடந்தது. இவர்கள் கூந்தலின் வழியாக மெல்லிய இளங்காற்று வீசி அவர்கள் போட்டிருந்த நகைகளை கலகலவென்று ஒலிக்கச்



செய்தது. அந்தக் காற்று பரந்து எங்கும் வீசிக்கொண்டுதானிருந்தது. அவர்கள் தூரத்தில் போகப் போக அந்த இருட்டும் என் கற்பனையும் அவர்களின் அழகை இன்னும் அதிகரித்துக் காண்பித்துக் கொண்டிருந்தன,

யாரோ ஒருவன் பிடில் வாசித்துக் கொண்டிருந்தான். அதற்கேற்றுற்போன்று ஒரு பெண் இனிய குரலில் அழகாக பாடிக்கொண்டிருந்தாள். அதோடு சிரிப்பின் சப்தமும் கேட்டுக்கொண்டே யிருந்தது.

அஸ்தமனத்திற்கும் சற்று முன்பு பெய்த மழையில் நிரம்பப் பெற்ற அந்த கடலின் குளிரிலும் பூமியின் ஓதத்திலும் காற்று யிரண்டறக் கலந்து உறவாடிக் கொண்டிருந்தது. இன்னும்கூட சின்னஞ்சிறு மேகக் கூட்டங்கள் பல நிறத்துடன் விசித்திர உருவங்களைப் போன்று வான வெளியில் சஞ்சரித்துக் கொண்டிருந்தன. ஓர் இடத்தில் புகை தோரனங்களைப் போன்று, நீலமாயும், சாம்பல் நிறமாயும் காணப்பட்டன; இன்னொரு இடத்தில் கொஞ்சம் மங்கிய பழுப்பு நிறமாயும், கருமையாயும் காணப்பட்டன. அவற்றிற்கிடையே சிறு வெளியைப் போன்று நீல வானம்; அதிலே தங்க நட்சத்திரங்கள் பிரகாசமாக ஜ்வலித்துக் கொண்டிருந்தன. அந்த சத்தங்களும், வாடைகளும், மேகங்களும், ஜனங்களும் எல்லாமே விநோதக் கதைகளின் ஆரம்பத்தில் சொல்லப்படுவதைப் போன்று சௌந்தர்த்துடனும், துக்கத்துடனும் காணப்பட்டன. அவை எல்லாமே, இறந்துவிட்டதைப் போன்று காணப்பட்டன. குரல்களின் சப்தமும் வர வர குறைந்துகொண்டே வந்து, தூரப் போகப்போக அடங்கி, துக்கத்துடன் பெருமூச்சு விடுவதைப் போன்று கேட்டுக் கொண்டிருந்தது.

இஸர்ஜில் அந்த ஜனங்கள் போன பக்கம் தலையை ஆட்டி காண்பித்துவிட்டு, என்னிடம், “நீ என் அவர்களுடன் போகவில்லை?” என்று கேட்டாள்.

வயோதிகம் அவள் உடம்பை இரண்டாக வளைத்திருந்தது. ஒரு காலத்தில் பிரகாசத்துடன் விளங்கிய அவளது கரு

விழிகள், இப்பொழுது பஞ்சடர்ந்து பார்வை மங்கிப்போயிருந்தன. அவளது வரண்ட குரல்; ரொம்பவும் வித்யாசமாக எலும்புகள் உராய்வதைப் போன்று சப்தித்தது.

"நான் போக இஷ்டப்பட வில்லை," என்றேன் பதிலுக்கு.

"யேய்...நீங்கள் ரஷ்யன்தான் கிழடுதட்டி போய்விட்டீங்களே. நீங்களெல்லாம் பிசாசுகள் மாதிரி துக்கிறியாய்த்தான் இருக்கிறீர்கள்...எங்கள் பெண்கள் உங்களைப் பார்த்து பயப்படுகிறாங்கள்...ஆனால் நீ வாலிபனாகவும், பலசாலியாயுமிருக்கின்றாய்..."

அந்த சமவெளியின் அந்தக் கோடியிலிருந்து, பூரண சந்திரன் ரத்தம் போன்று சிவப்பாக உருண்டை வடிவுடன் புறப்பட்டது. அது, அதன் காலத்திற்குள் எவ்வளவோ மனிதர்களின் ரத்தத்தையும், மாமிசத்தையும் உறிஞ்சியிருக்கின்றது. ஆகவேதான் அது அவ்வளவு செழிப்புடனும், பிரகாசத்துடனும் இருப்பதற்கு காரணங்கள். அது கிளம்பியதும், ஈட்டி போன்ற திராக்ஷை இலைகளின் நிழல்கள் எங்கள்மேல் வந்து விழுந்தன. அந்த கிழ ஸ்திரியும். நானும் ஏதோ வலையால் இடப்பட்டதைப் போன்று இந்த நிழல் இருந்தது. எங்களுக்கு இடதுபுறத்தில் மேகங்களின் நிழல்கள் அந்த சமவெளியின் குறுக்கே படர்ந்தோடிக்கொண்டிருந்தன. சந்திரனின் நீலக் கிரணங்களைப் பெற்ற அந்த மேகங்கள் பிரகாசமாயும் தெளிவாயும் காணப்பட்டன.

"பார்த்தாயா! அதுதான் லாரா!" என்றாள்.

அந்த வயயோதிக ஸ்திரி நடுக்கும் அவள் கையால் சுட்டிக் காண்பித்த பக்கம் நான் கவனித்துப் பார்த்தேன். அங்கே .அநேகம் நிழல்கள் ஓடிக்கொண்டிருந்தன. ஆனால் ஒன்று இருட்டாயும், மற்றவைகளைக் காட்டிலும் கனமாயும் இருந்தது. அது மற்றவைகளைக் காட்டிலும் தாழ்ந்து விரைந்து ஓடியது. அது சமீபத்திலுள்ள மேகக் கூட்டங்கள் ஒன்றிலிருந்து விழும் நிழல்.



"யாரையும் அங்கே காணோமே," என்றேன் நான்.

"என் கண்களைக் காட்டிலும் உன் கண்கள் ரொம்ப மோசமாயிருக்கும் போல் இருக்கே! பாரு—அங்கே மேலே பாரு. அந்த சமவெளியின் குறுக்கேதான் ஒன்று ஓடுது—இருட்டா!"

நான் மீண்டும் மீண்டும் பார்த்தேன். நிழல்களைத் தவிர வேறொன்றும் எனக்குத் தெரியவில்லை.

"அது .ஒரு நிழல்! நீ அதை ஏன் லாரா என்று கூப்பிடுகிறாய்!" என்றேன்.

ஏனெனில் அதுதான் அவன். அவன் இப்போ நிழலைத் தவிர வேறொன்றும் இல்லை. இதில் ஆச்சர்ய மென்ன! அவன் ஆயிரக்கணக்கான ஆண்டுகள் வாழ்ந்தான்; சூரியன் அவன் ரத்தத்தையும், சரீரத்தையும், எலும்புகளையும் உலர்த்திவிட்டான். தூசல்களைப் போன்று, காற்று அவற்றை அடித்துக் கொண்டு போய்விட்டது. மனிதனின் கர்வத்தை அடக்குவதற்கு கடவுள் எப்படி ஆக்கிவிட்டார் பார்த்தாயா?

அவள் அதைப்பற்றி ஏதேனும் ஆச்சரியமான கதை சொல்லக்கூடும் என்று எண்ணி அது எப்படி நேரிட்டது என்பதை விளக்கிச் சொல்லும்படி அவளை நான் கெஞ்சிக் கேட்கலானேன்.

அவள் எனக்கு இந்த கீழ்க் கண்ட கதையைச் சொன்னாள்.

ஆயிரக் கணக்கான வருடங்களுக்கு முன்பு இது நடந்தது. சூரியன் உதிக்கின்றதே அந்த கடலுக்கும் வெகு தூரத்திற்கும் அப்பால் அங்கே ஒரு பெரிய ராஜ்யம் இருக்கிறது. அதில் ஒரு பெரிய நதி உண்டு. அந்த ராஜ்யத்தில் சூரிய வெப்பம் ரொம்ப அதிகம். ஆகவே அந்த வெய்யிலை மறைக்க அங்குள்ள ஒவ்வொரு மரத்தின் இலையும், ஒவ்வொரு செடியின் இலையும் ஒரு மனிதனுக்கு வேண்டிய அளவு நிழல் கொடுக்கும்.

அந்த ராஜ்யத்தில் ஒருவித சக்திபுடைய மலைவாசிகளிருந்தனர். அவர்கள் ஆடு மாடுகளை மேய்த்துக்கொண்டும்,

வேட்டையாடியும், வேட்டை முடிந்து விரதங்கள் அனுஷ்டித்தும், பாட்டுக்கள் பாடிக் கொண்டும், அவர்கள் பெண்களுடன் விளையாடிக்கொண்டும் இருந்தார்கள்.

ஒரு நாள் அவர்கள் விரத காலத்தின்போது அந்த பெண்களில் கருத்த கூந்தலையுடைய ஓர் அழகிய பெண்ணை ஓர் பருந்து வானத்திலிருந்து பறந்து வந்து தூக்கிக்கொண்டு போய்விட்டது. அவர்கள் உடனே அந்தப் பருந்தின்மேல் அம்பெய்யலானார்கள். ஆனால் அந்த அம்புகள் அதைப் போய்த் தாக்கத் தவறி கீழே வந்தது விழுந்தன. பின் அந்தப் பெண்ணை தேடி அவர்கள் எவ்வளவு முயன்றும் அவளைக் கண்டுபிடிக்க முடியவில்லை. அவளைக் கண்டுபிடிக்க அவர்கள் எடுத்துக்கொண்ட எல்லா முயற்சிகளும் வீணாய்ப் போயின. கடைசியில் அவளைப் பற்றிய நினைப்பைக் கூட அவர்கள் மறந்து போகலானார்கள்.''

இதைச் சொல்லி அந்த ஸ்திரி ஒரு பெரு மூச்சுவிட்டுவிட்டு ஓர் கணம் பேசாது இருந்தாள். அவள் ஹிருதயத்துள் மறைந்து கிடந்த பழய நினைவுகள் மீண்டும் உயிர் பெற்று அவளிடம் முறையிடுவதைப் போன்று அவள் குரல் தொனித்தது. கடல் அதன் கரையில் நடந்த அந்த புராதனக் கதைகளில் ஒன்றை ஆரம்பிப்பதைக் கண்டு மெதுவாக அடித்துக் கொண்டது.

அந்த ஸ்திரி தன் கதையை மீண்டும் தொடங்கினாள்.

“இருபது வடங்களுக்குப் பிறகு உருமாறி சோர்ந்து போய்த் திரும்ப வந்து சேர்ந்தாள். அவளுடன் பலம் பொருந்திய அழகிய ஒரு வாலிபனும் இருந்தான். அவர்கள் அவனை அவள் இவ்வளவு காலமாய் எங்கு இருந்தாள் என்று கேட்டதற்கு, அவள் அந்தப் பருந்து அவளை மலையுச்சியில் தூக்கிக்கொண்டு போய்விட்டதென்றும்; அவள் அதற்கு பெண்சாதியாக இருந்து காலங்கழித்து வந்தாளென்றும் சொன்னான். அந்த வாலிபன் அவளது புத்திரன். அவன் தகப்பனார் இறந்து போய்விட்டார். அவன் பலம் குன்றிப்



போனதும் கடைசியாக வானத்தில் வெகு உயரப் பறந்து போய் தன் இறக்கைகளை மடக்கிக்கொண்டு அந்த உச்சியிலிருந்து கீழே கருங்கற் பாறைகளில் விழுந்து செத்துப்போய் விட்டார்.

எல்லோரும் ஆச்சரியத்துடன் அந்த பருந்தின் பிள்ளையை பார்த்தார்கள். அவன் எந்த வகையிலும் மனிதர்களுக்கு மாறுபட்டவனாகத் தெரியவில்லை. அவன் கண்கள் மட்டும் தான் கொஞ்சம் வித்தியாசமாக, ராஜப் பறவையினுடையதைப் போன்று கம்பீரத்துடன் காணப்பட்டது. அந்த ஒரே வித்தியாசத்தைத் தவிர வேறொருமில்லை. அவனிடம் அவர்கள் எல்லோரும் வந்து பேசினார்கள். அந்த ஜனங்களில் வயதானவர்களும் கூட அவனிடம் வந்து பேசினார்கள். ஆனால் அவன் அவர்களுக்கு மரியாதை கொடுத்து பேசாதபடிக்கு சமமாக பாவித்தே அவர்களுடன் பேசினான். அவர்கள் அதை ஓர் மரியாதைக் குறைவான நடத்தையாக மதித்து அவனிடம், அவனைப் போன்ற எத்தனையோ ஆயிரக்கணகானவர்கள் அவர்களுக்கு மரியாதை செய்திருப்பதாகவும், அவன் அகம்பாவத்துடன் நடப்பது ரொம்பவும் மரியாதைக் குறைவான விஷயம் என்றும் அவனிடம் கடுமையாகச் சொன்னார்கள். அவன் அதற்கு அவர்களை அஞ்சாநெஞ்சத்துடன் பார்த்துவிட்டு அவர்கள் அவனுக்கு சமமானவர்கள் அல்லவென்றும், மற்றவர்கள் அவர்களுக்கு மரியாதை செய்திருப்பினும் தான் அப்படிச் செய்ய இஷ்டப்படவில்லை என்றும் பதில் சொன்னான். அதைக் கேட்க அவர்களுக்கு மிகுந்த ஆத்திரம் உண்டாகியது. ஆத்திரத்துடனேயே அவனிடம், “அவனுக்கு இனி நம்மிடம் இடம் கிடையாது! அவன் இஷ்டப்படி வேறு எங்கேயாகிலும் போகட்டும்!” என்று சொல்லலானார்கள்.

அவன் சிரித்துவிட்டு அவன் இஷ்டப்பட்ட இடத்திற்கு ஒரு அழகிய பெண்ணிடம் செல்லலானான். அவன் அவளிடம் சென்று அவளைக் கட்டிப் பிடித்தான். ஆனால் அவள் அந்த வயோதிகர்களில் ஒருவரின் மகளாவாள். அவன் அழகாயிருப்பினும்கூட அவள் தகப்பனாருக்குப் பயந்து அவனைத் திட்டி

விட்டு அவனைப் பிடித்து தள்ளலானாள். அவனைத் தள்ளிவிட்டு அப்பால் திரும்பியதுதான் தாமதம். உடனே அவன் அவளைப் பிடித்து கீழே தள்ளி அவள் மார்பில் ஏறி மிதித்துக்கொண்டு நின்றான். அவள்வாயிலிருந்து ரத்தம்பீறிட்டது.

அதைப் பார்த்துக் கொண்டிருந்த ஜனங்கள் அவ்வளவு பேரும் பயத்தால் அப்படியே ஸ்தம்பித்துப் போய் விட்டார் கள்: அவர்கள் வகையிலேயே ஒரு பெண் இவ்விதம் கொல்லப் பட்டது இதுதான் முதல் தடவை. அவர்கள் நெடுநேரம் வரை அப்படியே அசைவற்று நின்றபடி, தரையில் கண்கள் முழித்த முழி முழித்தபடி: வாயில் ரத்தம் வடிய இறந்து கிடக்கும் அந்தப் பெண்ணையும் அவள் அருகே அவர்களை அகம்பாவத்துடன் தலை குனியாது நிமிர்ந்து நின்று வெறித்த படியே நின்று கொண்டிருக்கும் அந்த இளைஞனையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அவர்களால் அதற்கு மேல் இருப்புக் கொள்ளவில்லை. அவனை உடனேயே பிடித்து அதே இடத்தில் கட்டிப் போட்டார்கள். அவர்கள் கையால் அவனைக் கொல்வது ரொம்பக் கேவலமானது தவிர அது அவர்களுக்கு திருப்தியளிக்கக் கூடியதல்ல வென்றும் எண்ண லானார்கள்.

இரவு ஒரே மையிருட்டாயினும், மெலிந்த குரல்களின் சத்தம் கேட்டுக் கொண்டிருந்தது. சில மிருகங்கள் அந்த வெளியில் கத்திக் கொண்டிருந்தன. திராக்ஷை இலைகளில் தத்துக் கிளிகள் தத்தியோடி விளையாடிக் கொண்டிருந்தன. அந்த இலைகள் ஒன்றோடொன்று மனதில் கொண்டு பெரு மூச்சு விடுவதைப் போன்று காணப் பட்டது. சற்று முன் ரத்தம் போன்று தகதகவென்று சிவப்பாக இருந்த பூரண சந்திரன் வர வர மங்கிக் கொண்டிருந்தான். மூடு பனி அந்த சமவெளியை மூடிக்கொண்டிருந்தது...

அவர்கள் எல்லோருமாய் ஒன்று கூடி அவனுக்குத் தக்க தண்டனை விதிப்பதைப் பற்றி ஆலோசிக்கலானார்கள். சிலர் அவனை குதிரையின் கால்களில் போட்டு மிதிக்கச் சொல்லலா



மென்றார்கள். ஆனால் அது அவ்வளவு கொடுமையானதல்ல வென்றுஅது வேண்டாமென்றார்கள். மற்றும்சிலர், அவனை நிறுத்தி எல்லோருமாய் ஆளுக்கு ஓர் அம்பால் அடித்துஅவனைக் கொல்லலாம் என்றார்கள். அந்த யோசனையும் அவர்களுக்குப் பிடிக்கவில்லை. சிலர் அவனை ஓர் சின்னக் கூடாரத்திற்குள் கட்டி வைத்து அப்படியே நெருப்பிட்டுக் கொழுத்தி விடலா மென்றார்கள். ஆனால் அவன் வதை படுவதை அவர்கள் பார்க்க முடியாதபடி புகை வந்து கண்களை மறைத்துவிடும் என்பதற்காக அந்த தண்டனையும் அவர்களுக்குப் பிடிக்க வில்லை. இன்னும் எத்தனையோ தண்டனைகள் சொல்லப் பட் டன. ஆனால் ஒன்றுமே அவர்களுக்கு திருப்தியாக இருக்க வில்லை. அவர்கள் இதைப்பற்றி விவாதித்துக் கொண்டிருக்கும் பொழுது அவன் தாய் அவர்களிடம் காலில் விழுந்து கருணை காட்டும்படி மன்றாடிக் கேட்டாள். கருணையாவது? அவர்கள் அதைப் பற்றியே மணிக் கணக்காக பேசிக் கொண்டே இருந் தார்கள். கடைசியில், ஒருவன் நீண்ட நேரம் யோசித்துக் கொண்டிருந்து விட்டு சொன்னான்.

"அவன் ஏன் அப்படிச் செய்தானென்று அவனையே கேட் போமே!"

அவர்கள் அவனைக் கேட்டார்கள். அவன் அதற்கு பதில் சொன்னான்:

"என் கட்டுக்களை எடுத்து விடுங்கள். கட்டுப் பட்டிருக்கும் போது நான் பேசமாட்டேன்."

அவர்கள் அவன் கட்டுக்களை அவிழ்த்துவிட்டதும், அவன் அடிமைகளைப் பார்த்துக் கேட்கின்ற தோரணையில்,

"நீங்கள் ஏன் அதைக் கேட்கிறீர்கள்?" என்றான்.

அந்த முதியவர் பதிலுக்கு "நீ சொல்லேன். என்றார்.

"நான் என் நடத்தையைப் பற்றி உங்களிடம் ஏன் சொல்ல வேண்டும்?"

"கர்வம் பிடித்தவனே நாங்கள் தெரிந்து கொள்வதற் காகத்தான்டா. உன் உயிர் நிற்காது...நீ செய்ததைப் பற்றி

எங்களிடம் சொல்லிவிடு. நாங்கள் இப்பொழுது தெரிந்து கொண்டிருக்கிறதைவிட இன்னும்கொஞ்சம் தெரிந்து கொள் கிறோம்.''

''அப்படியானல் சரி. எனக்கே என்ன நடந்ததுதென்று தெரியா விட்டாலும், நான் உங்களுக்கு சொல்லி விடுகிறேன் நான் அவள் மீது ஆசைப்பட்டேன். அவள் என்னே மறுத்து விட்டாள். அவளேக் கொன்று விட்டேன்.''

''அவள் உனக்கு சொந்தமானவளா?''

''உங்களுக்குச்சொந்தமானவற்றைத்தான்நீங்கள் அநுபவி வக்கின்றீர்களா? மனிதனுக்கு காலும். கையும், பேச்சும்தான் சொந்தம். ஆனுல் அவனுக்கு நிலம், நீச்சு, ஆடு, மாடு, மனேவி மக்கள் எல்லாம் இருக்கின்றதே!''

இதற்குப் பதிலாக, மனிதன் பாடுபட்டு இவற்றை யெல்லாம் தேடிக் கொள்கிறுன். இவற்றிற்காக அவன் பணம் புத்தி எல்லாவற்றையும் செலவிட்டே தேடுகின்றுன். சில சமயங்களில் அவற்றிற்காக தன் வாழ்வைக் கூட இழந்து சம்பாதிக்கின்றுன்'' என்றனர். ஆனுல் அவன் பதிலுக்கு அவன் எல்லா வற்றையுமே விரும்பி விட்டதாக சொல்லலானுன்.

அவர்கள் அவனிடம் நெடு நேரம் வரை அப்படியே பேசிக் கொண்டிருந்தார்கள். ஆனுல் கடைசியில், அவன் யாரையும் லக்ஷியம் செய்யவில்லே என்பது அவர்களுக்குத் தெரியவந்தது. அவன் ஒருவனுயினும், இவ்வளவு கர்வத்துடன் இருப்பது பற்றி அவர்களுக்குப் பயமாகவும் இருந்தது. அவனுக்கு தாயோ 'மனேவியோ, சொத்தோ ஒன்றுமில்லே. அவன் எந்த ஒரு ஜாதியை சேர்ந்தவனுகவுமில்லே. தவிரவும் அவன் அந்த வகைகளே எல்லாம் விரும்புவதாகவும் தெரியவில்லே.

அவர்கள் அவனுக்கு என்ன தண்டனே விதிக்கலாம் என் பது பற்றி மீண்டும் பேசத் தொடங்கினுர்கள். ஆனுல் அந்தத் தடவை அவர்கள் அதைப்பற்றி நீண்டநேரம் விவாதிக்க வில்லே. அதுவரை மௌனமாக கேட்டுக் கொண்டிருந்த முதி யவர் எழுந்து சொல்ல ஆரம்தத்தார்:



''சற்று பொறுங்கள்! நான் ஒரு தண்டனே சொல்கிறேன். ரொம்ப பயங்கரமான தண்டனே. உங்கள் வம்சப் பரம்பரை யிலேயே இது போன்ற ஓர் தண் டனேயை நீங்கள் நினேத்தே இருக்கமாட்டீர்கள். அந்த தண்டனே அவனிடமே இருக் கிறது. அவன் இஷ்டப்படிபோகட்டும்! அதுதான் அவனுக்குத் தண்டனே.''

இந்த சந்தர்ப்பத்தில் ஓர் அதிசயம் நிகழ்ந்தது. வானத் தில் மேகங்கள் ஒன்று கூட காணப்படவில்லே. ஒரு பலத்த இடி முழக்கம் வானத்தில் முழங்கிற்று. கடவுள், அந்த கிழ மனிதனின் யோசனேயை அங்கீகரித்து விட்டாற் போன்றே அது காணப்பட்டது. எல்லோரும் தாழ்ந்து வணங்கி விட்டு, உடனே கலேந்து போய் விட்டனர். ஆனுல் அந்த இளேஞன் லாரா என்று இப்போ சொல்லப்படும் அவன், அவனே விட்டுப் போகும் ஜனங்களேப் பார்த்து உரக்கச் சிரிக்கலானுன். அவன் நின்ற அதே இடத்திலேயே அப்படியே நின்றுகொண்டு அவன் தகப்பனேப்போல் அப்படிச் சிரித்தான். அவன் மனித உருவு டன்தான் இருந்தான். ஆனுல் அவன் தகப்பனுர் அப்படி யில்லே. ஆகவே பறவைகளேப்போன்று அவன் சுதந்திரமாக வாழ ஆரம்பித்தான்.

அவன் அங்குள்ள ஜனங்களின் வீடுகளுக்குவந்து அவர்கள் பெண்களேயும் ஆடுமாடுகளேயும், இன்னும் அவனுக்கு வேண் டிய பொருள்கள் என்னவோ அவைகளேயும் திருடிக் கொண்டு போய்விடுவான். அவர்கள் அவனே அம்பால் அடிப்பார்கள். ஆனுல் அவன் அதனுலெல்லாம் செத்துப் போய்விட மாட் டான். அவன் திடகாத்திர முடையவன்; கொடுங்குணம் கொண்டவன்; சுறுசுறுப்பாகவே காணப் படுவான். கொள்ளே யடிப்பதில் ரொம்ப கெட்டிக்காரன். அவன் மனிதர்களே நேருக்கு நேரே சந்திப்பதே கிடையாது. ஆகவே அவனே எட்டத்தில் தான் பார்க்க முடியும். அவன் அநேக வருடங்கள் அங்கேயே சுற்றிச் சுற்றி வட்டமிட்டுக் கொண்டே இருந்தான்.

ஒருநாள், அவன் அவர்கள் வீட்டுப் பக்கம் அருகாமையி லேயே வந்து விட்டான். அவனைக் கண்டதுதான் தாமதம் அவனைப் பிடிக்க அவர்கள் ஓடலானார்கள். ஆனால் அவன் தன்னைப் பாதுகாத்துக்கொள்ள எதுவும் செய்யாமல் அப் படியே நின்று விட்டான். அவன் அப்படி நிற்பது என்ன காரணமோ வென்றெண்ணியவராய், அவர்களில் ஒருவன்,

"அவனைத் தொடாதீர்கள்! அவன் சாகப்பார்க்கிறான்!" என கத்தினான்.

எல்லோரும் அப்படியே நின்றுவிட்டார்கள். அவனை நெருங்க யாருக்குமே மனம் துணியவில்லை. ஆனால் அப்படியே நின்றவண்ணம் அவனைப்பார்த்துப்பரிகசிக்கலானார்கள். அவன் அந்தஇகழ்ச்சிகளை எல்லாம் கேட்டுக்கொண்டே நடுக்கத்துட னேயே அப்படியே நின்றுகொண்டே இருந்தான். சட்டென்று ஒரு பாய்ச்சல் பாய்ந்து அங்கு இருந்த ஓர் பெருங்கல்லைத் தூக்கி அவர்கள்மீது வீசலானான். அவர்கள் அதனின்றும் தப் பித்துக் கொண்டார்கள். ஆனாலும் அவனை அவர்கள் பதிலுக்கு அடிக்க வரவில்லை. கடைசியில் அவன் துயரமாக அலறிக்கொண்டே தரையில் விழுந்து விட்டான். அவர்கள் அவன் பக்கம் நின்ற படியே கவனித்தார்கள். அவன் மீண்டும் எழுந்து ஓர் கத்தியை எடுத்து தன் மார்பில் ஓங்கிக் குத்திக் கொண்டான். ஆனால் அந்தக் கத்தி கல்லில் குத்துண்டதைப் போன்று முறிந்து போனது. அவன் மீண்டும் கீழே விழுந்து தலையைப் போட்டு தரையில் அடித்துக் கொண்டான். தரை பள்ளமாயிற்றே யொழிய வேறொன்றும் ஆகவில்லை.

அந்த ஜனங்கள் எல்லோரும், "அவன் சாகக் கூடாது அப்படியே இருக்கட்டும்." என விந்தையாகச் சொல்லிக் கொண்டே அதை விட்டுக் கலையலானார்கள். அவன் முகம் உயர நோக்கியபடி இருந்தது. வான வெளியில் வரும் கழுகு கள் பறப்பது அந்த உயரத்திலே ஏதோ சின்னஞ்சிறு புள்ளி களைப் போன்று காணப்பட்டன. அவன் கண்கள் கோபத்தால் சிவந்து போயின. அதன் பின் அவன் சாவை எதிர் பார்த்த படி தனியனாகவே இருக்கிறான். ஆகவே தான் அவன் எங்கு



பார்த்தாலும் சுற்றி சுற்றி அலைகின்றான்...உனக்குத் தெரி கிறதா அவன் முன்னமேயே நிழல் மாதிரிதான். அவன் எப் பொழுதும் அப்படித்தான் இருப்பான். ஜனங்களின் பேச்சோ செய்கையோ ஒன்றும் அவனுக்குப் புரியாது. அவனுக்கு ஒன் றும் தெரிவதுமில்லை. அவன் எதையும் விரும்புவதில்லை. அவன் எதையோ தேடிக் கொண்டு சதா அலைந்துகொண்டே யிருக் கிறான்...அவனுக்கு வாழவும் தெரியாது; சாவும் வருவதில்லை.

அவனுக்கு ஜனங்களிடம் இடம் கிடையாது. எப்படிப் பார்த்தாயா? கர்வத்திற்காக ஒருவன் அடைந்த தண்ட னையை! அந்த ஸ்திரி ஒரு பெரு மூச்சு விட்டு விட்டு, பேச்சை நிறுத்திக் கொண்டாள். அவள் தலை ஒரு விதமாக அப்படியும் இப்படியுமாய்பல முறை ஆடியது.

நான் அவளை பார்த்தபடி இருந்தேன். அவளுக்கு தூக்கம் வந்து விட்டதைப் போன்று அவள் காணப் பட்டாள்: நான் ஏதோ எண்ணியவனாய் வருத்த மடைந்தேன். அவள் தன் கதையை அதியற்புதமாகச் சொல்லிமுடித்தாள். ஆயினும் அதில் ஏதோ ஒரு மறை பொருள் இருப்பதாகவே எனக்குத் தோன்றிற்று.

அந்த கடலோரத்தே ஜனங்கள் அழகாக பாட ஆரம்பித் தார்கள். உச்ச ஸ்தாயிலே பாடப் பெற்ற அந்த பாடலின் இனிய கானம் கடலின் ஓயாத ஆரவாரத்தையும் அமிழ்த்தி வைத்துக் கொண்டிருந்தது.

# அல்லி ராணி

பியு. சங். லிங்

வெகு காலத்திற்கு முன்பு சியாயோ—சோ என்ற நகரில் அவ்ஹஸன் என்ற பெயருள்ள ஒருவன் வசித்து வந்தான். ஒரு நாள் பகலில் தூங்கிக் கொண்டிருந்த பொழுது திடீரென்று அவன் பக்கத்தில் செய்தி கொண்டு வந்துள்ள தூதுவனைப் போன்று நல்லாடை யணிந்த ஒருவன் நிற்பதைக் கண்டான். திடுக்கிட்டுப்போய், “உன் எஜமானர் யார்?” என்று கேட்டான் அவ்.

அந்தத் தூதுவன் அதற்கு நேரிடையாகப் பதில் சொல்ல வில்லை. மிக்கப் பணிவுடன் நீட்டி வளைத்துக்கொண்டு “அவர் வெகு தூரத்தில் இல்லை.” என்றான்.

உடனே அவர்கள் இருவரும் புறப்பட்டனர். கொஞ்ச தூரம் சென்றதும் எண்ணற்ற மாளிகைகள் ஒன்றைவிட ஒன்று உயர்ந்து அழகாக வானளாவி நிற்பதை அவ் கண்டான். அந்தத் தூதுவன் அவனை ஒரு பெரிய மாளிகைக்குள் அழைத்துச் சென்றான். எண்ணற்ற வாசல்களைக் கடந்து உள்ளே செல்லவும் அங்கே அரசனது மண்டபம் இருப்பதைக் கண்டான். அவர்களைக் கண்ணுற்ற அங்குள்ள அதிகாரிகளும், மாதர்களும் அந்தத் தூதுவனைப் பார்த்து “அவ்ஹஸன் வந்து விட்டாரா?” என்று வினவினர். தூதுவன் அவர்களுக்கு பதிலளிக்கும் முறையில் புன்முறுவலுடன் அவ்-ஹஸனைப் பார்த்து தலையை யசைத்தான்.

கடைசியாக அந்தத் தூதுவன் சீனப் பிரபு இருக்குமிடத்திற்கு அவ்வை அழைத்துச் சென்றான். அப் பிரபு அவன்



வருவதைக் கண்டதும், எதிர் சென்று அவனை வாழ்த்தி வரவேற்று, அழகிய வேலைப்பாடமைந்த அற்புதமானதோர் அரண்மனைக்குள் அவனை அழைத்துச் செல்லலானான்.

அவ்-ஹஸனுக்கு வெட வெடத்துப்போனது. ஒன்றும் புரியதாபடி தயங்கி நின்று அப்பிரபுவைப் பார்த்துச் சொன்னான். “தாங்கள் எனக்களித்துள்ள கௌரவத்தையும், வரவேற்பையும் மனப்பூர்வமாகப் பாராட்டுகிறேன். ஆனால் தாங்கள் யார் என்பதை நான் தெரிந்து கொள்ள முடியாதவனாக இருக்கிறேன்.”

அப்பிரபு பதிலுக்கு “நம் இளவரசர் தங்கள் குடிப்பெருமையையும், உயரிய குணங்களையும் பற்றிக் கேள்விப்பட்டதிலிருந்து தங்களைப் பார்க்க வேண்டுமென்று நீண்ட காலமாக ஆசைப்பட்டு வருகிறார்,” என்றார்.

“அப்படியானால் தங்கள் மன்னர் யார்?” என்று மீண்டும் வினவினான் அவ்-ஹஸன்:

“இன்னும் கொஞ்ச நேரத்தில் நீங்களே தெரிந்துகொள்வீர்கள்” என்றார் அந்தப் பிரபு. அவன் அதைச் சொல்லி முடிப்பதற்குள் அங்கே இரு அழகிய பெண்கள் கொடிகள் காணப்பட்டனர். அவர்கள் அவ்வை வரவேற்று அழைத்துக் கொண்டு பல வாயில்களையும் கூடங்களையும் கடந்து கடைசியாக அந்த மன்னன் வீற்றிருக்கும் சிம்மாதனத்தருகே வரலாயினர்.

அவ் வருவதைக் கண்ட மன்னன் சிம்மாதனத்தைவிட்டு எழுந்து வந்து வரவேற்று உயரிய ஆசனமளித்து அவனை அமரச் செய்தான். அவ் ஆசனத்தில் அமரவும் மன்னன் அவனுக்கு விருந்து பரிமாறும்படி கட்டளையிட்டான். மிக்கச் சுவை பொருந்திய உணவு வகைகளும், திராக்ஷரஸமும் அவன் முன் கொண்டுவந்து வைக்கப்பட்டன.

அவ் ஆச்சரியத்தால் ஒன்றும் புரியாதவனாக அப்படியே உட்கார்ந்திருந்தான். அவன் பார்வை நாற்புறமும் சுழன்றது.

அங்கு அரசனது சபாமண்டபத்தில் "காசியா சபாமண்டபம்" என்ற சொற்கள் பொறிக்கப்பட்டிருப்பதைக் கண்டான். அவனுக்குத் தன்னை வரவேற்று உபசரித்தது யாரென்று தெரியாததால் அது அவனுக்கு ஒன்றும் அதிசயத்தை உணர்த்தவில்லை. மன்னன் அவனது கலங்கிய முகத்தைக் கவனித்துவிட்டுச் சொன்னான்:

"தாங்கள் இங்கு விஜயம் செய்து எங்களைக் கௌரவித்ததிலிருந்து நமது உறவு இன்னும் இறுகப் பிணைந்துவிட்டது. ஆகவே நாம் சந்தோஷமாக விருந்துண்டு, கூடி மகிழ்ந்து நம் முள்ளத்தேயுள்ள சந்தேகத்தையும் பீதியையும் போக்கிக் கொள்வோம்."

இதைக் கேட்ட பிறகு அவ் அந்தப் புதிய இடத்தைப் பற்றியும், அந்தச் சூழ்நிலையைப் பற்றியும் ஒன்றும் மனதை அலட்டிக்கொள்ள வேண்டியதில்லை என்றும், விருந்துண்டு மகிழ்வதென்றும் தீர்மானித்தான். மது பலமுறை அவனுக்கு ஊற்றப்பட்டது. அவன் அதைக் குடித்துக் கொண்டிருந்த பொழுது அவன் காதுகளில் இன்னிசை கானம் ஒலிப்பதைக் கேட்டான். கொஞ்ச தூரத்திற்கு அப்பால் பலவித வாத்தியங்களினூடே கந்தர்வ கானக் குரலுடன் இன்பரசப் பாடல்கள் பாடப்பட்டன. ஆனால் அதில் சங்கீதக் கச்சேரிக்கு வழக்கமாக வாசிக்கப்படும் மிருதங்கத்தைக் காணோம். பின் அந்த மன்னன் சொன்னான்: "தங்களுக்கு நாங்கள் புகழ்மொழி ஒன்று அளிக்கப் போகின்றோம்." "மேதை காசியா மண்டபத்தை தேடுகிறான்" என்று.

அங்கு அவையில் வீற்றிருந்த பிரபுக்கள் எல்லோரும் அதற்குத் தக்க எதிர்மொழி என்ன சொல்லலாம் என்பது பற்றி சிந்தித்துக் கொண்டிருந்த பொழுது அவ் சடக் சென்று "செம்மை, அல்லி மலரை விரும்பும்," என்று சொன்னான்.

அதைக் கேட்ட பிரபுக்கள் எல்லோரும் மகிழ்ச்சிப் பெருக்கால் கைதட்டி கரகோஷம் செய்யலாயினர். அந்தக் கரகோஷத்தினிடையே அந்த மன்னன் சொன்னான். "உங்கள்



வாயினின்றும் இந்த வார்த்தைகள் வருவது உண்மையில் போற்றத்தக்க ஒரு விஷயந்தான். என் மகள் பெயர் அல்லி. அவளை இங்கே இன்னும் சில விநாடிகளில் பார்ப்பீர்கள்."

மன்னன் மறுகணமே உத்திரவிட்டான். சில விநாடிகளில் பதினாறு அல்லது பதினெட்டு வயதுடைய தேவகன்னிபோன்ற அழகணங்கு ஒருவள் தாதிகள் புடை சூழ அங்கே காட்சியளித்தாள். அவளது இணையற்ற பேரழகைக் கண்டு அவ் பிரமித்துப் போனான். அவனுக்கு வணக்கம் செலுத்துமாறு மன்னன் அவளிடம் சைகை காண்பிக்கவே அவள் அவ்விதமே அவனை வணங்கிவிட்டு நாணத்துடன் நின்றாள்.

அவ் தன் மகள்மீது மையலுற்றிருப்பதைக் கண்ட மன்னன் தன் மகளுக்குத் தக்க கணவனை தேர்ந்தெடுக்க தான் எப்படி யெல்லாம் முயற்சித்தானென்பதை சொல்ல ஆரம்பித்தான். ஆனால் அவ் அவள் காதலில் கட்டுண்டுபோய் சுற்றிலும் என்ன நடக்கிறதென்றே உணர்வே இல்லாதபடி ஸ்தம்பித்துப் போயிருந்தான். அம் மன்னன் சொன்ன வார்த்தைகள் ஒன்றுகூட அவன் காதில் விழவில்லை. மன்னன் பேசுகிறானென்று சொல்லவுந்தான், அவ் நினைவுலதிற்குத் திரும்பினான். தன் உடைகளைச் சரி செய்துகொண்டு மன்னனிடம் திரும்பி மன்னிப்புக் கோரிவிட்டு தனக்கு விடையளிக்குமாறு கேட்கலானான்.

மன்னன் பதிலுக்கு "என் அத்தாணி மண்டபத்திற்குத் தங்களை வரவேற்றுள்ளதைக் குறித்து நான் பெரிதும் இன்புற்றேன். தாங்கள் இவ்வளவு விரைவில் புறப்படுவது எங்களுக்கு மிக்க வருத்தத்தை உண்டுபண்ணுகிறது. தாங்கள் எங்களைப் பற்றியெல்லாம் மறந்து விடவேண்டும். இல்லாவிடில் தாங்கள் மீண்டும் எங்களிடமே திரும்பவும் வந்துவிடக் கூடும் என்று நினைக்கிறேன்."

எனச் சொல்லிவிட்டு அவ்வை அவன் வீட்டில் கொண்டு போய் விட்டுவிடுமாறு தன் ஊழியர்களுக்கு உத்திரவிட்டான் அவன். பாதுகாவலாளனாக அவனுடன் வந்தவன் அவனை

மன்னன் தன் மகள் அல்லியைத் திருமணம் செய்துகொள்ளும் படி சொன்னதற்கு ஏன் அவன் ஒன்றுமே பதிலளிக்கவில்லை என்று கேட்டான். அந்த இளைஞன் அப்பொழுதுதான் எப்பேர்ப்பட்ட அரிய சந்தர்ப்பதை இழந்துவிட்டோம் என்பதைக் குறித்து எண்ணி தனக்குள் வருதப்பட்டுக் கொண்டான். அவன் வீட்டை நெருங்கிய பொழுது அவன் விழித்துக் கொண்டுவிட்டான்.

மாலையும் மறைந்து விட்டது. அவ் எழுந்து உட்கார்ந்த படியே அந்த இளவரசியைப் பற்றியும் இழந்த சந்தர்ப்பத்தைப் பற்றியும் எண்ணி வருந்தலானான். அன்று இரவு படுக்கச் சென்றபொழுது அதே கனவை மீண்டும் காணலாமென்ற ஆசையுடன் கண்களை மூடினான்.

ஆனால் சில தினங்கள் கழித்து அவன் தன் நண்பன் ஒருவன் வீட்டில் தூங்கிக்கொண் டிருந்தபொழுது அரசாங்க அதிகாரி ஒருவன் அவன் முன் தோன்றி அவனை மன்னன் அழைத்துவரச் சொன்னதாகச் சொல்லி அழைத்துச் சென்றான்.

அவ் மீண்டும் அந்த அற்புத மண்டபங்களையும், எண்ணற்ற வாயில்களையும் கண்டான். அவனை அன்புடனும் சகல மரியாதைகளுடனும் மீண்டும் வரவேற்ற அந்த மன்னன் முன் அவன் தலைவணங்கி நின்றான்.

மகிழ்ச்சியுடனிருந்து அவ் யிடம், அவன் அல்லி இளவரசியின் மீது அளவற்ற காதல் கொண்டிருப்பது அவனுக்குத் தெரிய வந்துள்ளது என்றும்; அவன் சம்மதிப்பானாயின் உடனேயே திருமணத்திற்கு ஏற்பாடு செய்வதாயும் மன்னன் தெரிவித்தான். இளைஞன் இயற்கையாகவே அதற்கு ஒன்றும் ஆட்சேபனை தெரிவிக்கவில்லை. அதன் மறுகணமே அவர்கள் முன் விருந்து பரிமாறப்பட்டது.

கடைசியாக அந்த இளவரசி தன் அலங்காரங்களை எல்லாம் முடித்துக்கொண்டு சேடிகள் புடைசூழ தலையில்



முக்காடிட்டுக் கொண்டு அன்னம்போல் அழகாக நடந்து நடந்து வந்தாள்.

அவ் அவளை வணங்கிவிட்டுச் சொன்னான்: இளவரசி, தங்கள் முன்னிலையில் மரணம் பற்றிய எண்ணங்கூட ஏற்படச் சாத்தியமில்லை. ஆனால் இதெல்லாம் கனவல்லவே! கனவா? நினைவா? என்பதை எனக்குச் சொல்லுங்கள்."

"என் காதலரே! நீங்களும் நானும் இங்கு ஒன்று சேர்ந்திருக்கும்பொழுது இதெல்லாம் எப்படிக் கனவாகும்?' என்றாள் பதிலுக்கு இளவரசி மெல்லிய குரலில்.

மறுநாட் காலை இளவரசி சித்திரம் தீட்டிக்கொண்டிருந்த பொழுது, சம்பிரதாயங்களுக்கிணங்க அவ் அவளுக்குத் துணை புரிந்தான். அவள் சித்திரம் வரைந்துகொர்ண்டிருக்கும் பொழுதே அவள் இடையில் தரித்திருந்த ஒட்டியாணத்தைப் பிடித்திழுத்து அவள் பாதத்தையும், அவள் மணிக்கட்டையும் விரல்களையும் அளந்து பார்க்க ஆரம்பித்தான்.

அதைக் கண்டு, "உனக்கென்ன பைத்தியம் பிடித்து விட்டதா?' என்று சொல்லிச் சிரித்தாள் இளவரசி.

"அப்படியல்ல. நான் பல முறை ஏமாற்றமடைந்து விட்டேன். அதனால்தான் சரியாக ஊர்ஜிதம் செய்துவிட எண்ணினேன். இதெல்லாம் உண்மையில் கனவாகி விட்டாலும் உன்னைப்பற்றி ஞாபகங்களை எண்ணி உள்ளம் உவகையடையுமல்லவா?" என்றான் அவ்.

அவர்கள் இருவரும் அவ்விதம் பேசிக்கொண்டிருந்த பொழுது, பணிப் பெண்களில் ஒருத்தி, "ஐயோ! ஐயோ! ஒரு பெரும் பூதம் அரண்மனைக்குள் வந்துவிட்டது. மன்னர் சுரங்க அறைக்குள் போய் புகுந்துவிடுவார். நாம் எல்லாம் அழியப்போகிறோம்!" என்று சொல்லி உரக்கக் கத்தி கொண்டே ஓடிவந்தாள்.

அவ் இளவரசியை நோக்கினான். இளவரசி கண்ணீர் வடித்தவாறு தன்னை இந்த ஆபத்து வேளையில் விட்டுப் பிரிய

வேண்டாமென்று கெஞ்சிய வண்ணம், "இந்த தெய்வாதீனமான ஆபத்து வேளையில் நம் பந்தவ்யம் குலையாது உறுதியுடனிருக்க வேண்டும். இப்பொழுது என் இராஜாங்கம் எல்லாம் அழிந்துவிடுமே. நான் என்ன செய்வேன்?" என்று சொல்லிக் கதறினாள்.

விஷயம் என்னவென்று அவ் கேட்கவே, மன்னன் மேஜை மீதிருந்த ஓர் லிகிதத்தை எடுத்துக்கொடுத்து, அதைப்பிரித்து அதில் என்ன எழுதியிருக்கிறதென்று படித்துச் சொல்லும்படி அவ்விடம் சொன்னான். அந்த லிகிதம் கீழ்க்கண்டவாறு இருந்தது:

"மாட்சிமை பொருந்திய மன்னர் சர்க்காரின் பிரதம காரியதரிசி, ஒரு பெரும் பூதம் வந்திருப்பதனால் இந்த சாம்ராஜ்யத்தின் உயிரைப் பாதுகாக்கும் பொருட்டு அரச சபையை உடனடியாக வேறிடத்திற்கு மாற்றும்படி அறிவித்துக்கொள்கிறார். 5-வது மாதம் 6-ந் தேதியிலிருந்து சுமார் 10000 அடி உயரமுள்ள பிரமாண்டமான பூதம் ஒன்று அரண்மனை வாசலுக்கு வெளியே சுருட்டிக்கொண்டு கிடப்பதாகவும் இதுவரை நம் சாம்ராஜ்யப் பிரஜைகளில் 13800 பேர்களுக்குமேல் அதற்கு இரையாகிவிட்டதாகவும், எங்கும் அழிவின் சின்னங்கள் காணப்படுவதாகவும். மஞ்சள் வாசலின் அதிகாரியிடமிருந்து தகவல் கிடைக்கவும், தங்கள் ஊழியன் உடனே அந்த இடங்களுக்குச் சென்று சோதித்துப் பார்க்க அங்கே பிரமாண்டமான ஓர் உருவம் இருப்பதைக் கண்டான்; அதன் தலை ஓர் மாபெரும் மலையைப் போன்று இருக்கிறது; அதன் கண்கள் ஏரிநீரைப் போன்று இருக்கின்றன. அது தலையை நிமிர்த்தும் ஒவ்வொரு தடவையும் கட்டங்கள் எல்லாம் அதன் வயிற்றுக்குள் போய்விடுகின்றன; அது அவற்றை ஜீரணித்து விட்டு வீடுகளையும், சுவர்களையும் வெளியே கக்கிவிடுகின்றது. எங்கும் வீடுகளும், சுவர்களும் நாசமடைந்து கிடைக்கின்றன. தொன்றுதொட்டு இந்நாள் வரை சரித்திரம் இப்படிப்பட்ட ஓர் அழிவைக் கண்டதே இல்லை. நம் புராதனப் பெருமை வாய்ந்த அழகிய மண்டபங்களும், கோவில்களும் அழியப் போவது



இப்பொழுதோ, இன்னும் கொஞ்சநேரம் கழித்தோ என்றுதான் சொல்லவேண்டிய அபாயத்தை நெருங்கிக்கொண்டிருக்கிறது. எனவே மாட்சிமை பொருந்திய தங்களை இதே க்ஷணமே அரச குடும்பத்துடன் புறப்பட்டு, வேறெங்கேனும் வசதியான ஓர் இடத்தில் போய் தங்கியிருக்குமாறு பிரார்த்திக்கின்றோம்.

அவ் அந்த லிகிதத்தைப் படித்து முடித்ததுதான் தாமதம் "பூதம்" என்று உரக்கக் கத்திக்கொண்டே ஓர் தூதுவன் ஓட்டோட்டமாக உள்ளே ஓடி வந்தான்.

அதைக் கேட்டு அங்கிருந்தவர்கள் அனைவரும் பரபரப்படைந்தனர். நாற்புறங்களிலும் அழுகுரலும், ஓலமும் அவ்வின் காதுகளுக்கு எட்டியது. அவ் நடுநடுங்கினான்.

மன்னன் ஆத்திரத்துடனும், துக்கத்துடனும் அவ்வைப் பார்த்து அவனிடம் இத்தகைய துரதிர்ஷ்ட நிலைக்கு உள்ளாக்கிய மனைவியைப் பற்றி நினையாது தன் உயிரைக் காப்பாற்றிக் கொள்ளும்படி கூறினான். ஆனால் கண்ணீருடன் கைகளைப் பிசைந்துகொண்டு நின்ற இளவரசி அவன் காலடியில்விழுந்து இந்த அபாய வேளையில் தந்நந்தனியே கைவிட்டுப்பிரியலாகாதென்று மன்றாட ஆரம்பித்தாள்.

காலில் விழுந்து மன்றாடும் இளவரசியை அவ் பெருந்தன்மையுடன் தூக்கிவிட்டு மன்னனிடம் திரும்பி அவரை வணங்கி, அவர்கள் வந்து தங்க சம்மதிப்பதனால் தன் எளிய இல்லத்தில் இடமளிப்பதாகச் சொன்னான்.

"சம்மதம் கேட்கக்கூடிய நேரம் இதுவல்ல. தாமதம் செய்யாது இப்பொழுதே எங்களை உங்களிடத்திற்கு அழைத்துக்கொண்டு போய்விடுங்கள்" என்றாள் இளவரசி இடைமறித்து.

உடனே அவ் வெகு சீக்கிரமாகவே அவளைத் தன் சொந்த வீட்டிற்கு அழைத்துக்கொண்டு வரலானான். இளவரசி மகிழ்ச்சியுற்றவளாய் "தான் வாழ்ந்த அரண்மனையைக் காட்டிலும் இந்தச் சிறிய இல்லம் எவ்வளவோ சிறந்தது.

இப்பொழுதே என் தந்தையையும், தாயையும், அரண்மனை ஏவலாட்களையும், மத்திரி பிரதானிகள் முதலியோரையும் இங்கே அழைத்துக்கொண்டு வந்துவிடுங்கள் என்றாள்."

இதைக் கேட்ட அவ் இடியோசை கேட்ட நாகம் போன்றாகிவிட்டான். அவள் தந்தையின் பரிவாரங்களுக்கெல்லாம் எப்படி அவனால் இட வசதி செய்து கொடுத்து அவற்றை வைத்து காப்பாற்ற முடியும். ஆகவே அவன் முதலில் ஆட்சேபித்தான். இளவரசிக்கு கோபம் வந்துவிட்டது. உதவி வேண்டிய தருணத்தில் அவளுக்கு உதவி செய்ய முடியாத ஒருவர் கணவன் என்று சொல்ல எள்ளளவும் தகுதியில்லை என்பதாகச் சொல்லி அழ ஆரம்பித்துவிட்டாள். அவளது அழுகையும், விம்மலும் வரவர அதிகமாகியது. கலங்கிப் போயிருந்த அவ் அவளுக்கு எவ்வளவோ சமாதானம் சொல்லி, அவளை சாந்தப்படுத்த முயற்சித்துக்கொண்டிருக்கும் வேளையில், அவன் துரதிர்ஷ்ட வசமாக கண் விழித்துக் கொள்ளவும் அவை அனைத்தையும் கனவாக இருப்பதைக் கண்டு ஏமாற்றமடைந்தான்.

அவன் காதுகளில் 'நோய்' என்ற ரீங்கார சத்தம் மட்டும் இன்னும் ஒலித்துக்கொண்டேயிருந்தது. சுற்றிலும் கவனித்தான். இரண்டு மூன்று தேனீக்கள் அவன் தலையணையிலிருந்தன. அவன் அவற்றை விரட்டியடித்தும் கூட அவைகள் அவன் கட்டளைக்குக் கீழ்ப்பணியாதுஅசையாமல் அப்படியே இருந்து மறியல் செய்யலாயின.

அவன் உடனே தன் நண்பனைக் கூப்பிட்டான். நண்பன் வரவும் அவர்கள் உடைகளிலும் இன்னும் ஏராளமான தேனீக்கள் இருப்பதைக் காணலாயினர். அவ் ஆச்சரியத்தால் பிரமித்துப் போனான். ஆனால் அவன் நண்பன் உடனே ஓர் தேன்கூடு கொண்டு வந்து வைக்கும்படி அவனுக்கு யோசனை கூறினான். அவ் அவ்விதமே செய்தான். அந்த அறையிலிருந்த தேனீக்கள் மட்டுமின்றி, தோட்டத்திலிருந்த தேனீக்கள் பூராவும் கூட்டம் கூட்டமாக பறந்துவந்து அந்தக் கூட்டுக்குள் அடையலாயின.



அவ்வும் அவனது நண்பனும் அந்தக் கூட்டம் எல்லாம் எங்கிருந்து வருகின்றன என்பதை ஆராய்ந்து பார்க்கலானார்கள். அது பக்கத்தில் வசித்து வரும் ஓர் வயோதிகர் வீட்டின் தேன் கூட்டிலிருந்து வருவதைக் கண்டனர். அந்தக் கூடு திறக்கப்பட்டு கிடந்தது. அதில் அவ் கனவில் கண்ட பூதத்தைப் போன்ற பிரமாண்டமான மலைப்பாம்பு ஒன்று இருப்பதையும் அவர்கள் கண்டனர்.

அந்தத் தேனீக்களைப் பொறுத்தவரை, அவைகள் ஆண்டுதோறும் சந்ததிகளைப் பெருக்கிக்கொண்டு பெருத்த அளவில் அவ்வுடன் தங்கியிருந்தன.

# பிராயச் சித்தம்

### பால்ஸாக்

ஓர் இளைஞனுக்கு அவன் உள்ளத்தில் தோன்றும் கற்பனைக் கனவுகளை மெய்யாக்கும் ஆற்றல் இருக்கக்கூடுமாயின், அவன் உலகையே வென்றுவிடுவான். அவன் செயல்பட முற்படும் அன்று முதலே உலகம் அவன் காலடியில் கிடக்கும். ஆனால் இருபத்தி இரண்டிலிருந்து இருபத்தெட்டு வயதிற்குட்பட்ட இளைஞர்களே வெற்றிபெறுகின்றனர். அதிலும் அவர்கள் சிந்திப்பதில் தயங்குவார்களாயினும் அல்லது தாமதிப்பார்களாயினும், அவர்களுக்கு வெற்றி கிடைப்பது அரிது. வெற்றி துடிப்பு பலத்தினால் பெறக் கூடியது.

இளைஞர்களிலும் இரு சாரார். கற்பனையாளர்கள்; காரியவாதிகள். அந்த இரண்டுமே பொருந்தியிருக்கக் கூடுமாயின் நம்மிடையே ஒரு சீஸரையோ, ஒரு நியூட்டனையோ அல்லது நெப்போலியனையோ பார்க்கலாம்.

ஒரு நாள் நான் கடலோரத்தே நின்றுகொண்டு மனித முன்னேற்றத்திற்கு எவ்வளவு காலம் பிடித்ததென்றும், என் எதிர்காலம் பற்றியும் 'பிளான்' வரைய ஒரு வெறும் காகிதத்தில் அளந்து பார்க்கும் ஒரு என்ஜினியரைப் போன்று என் மனத்திற்குள் அளந்து பார்த்துக்கொண்டிருந்தேன். நான் அப்பொழுதுதான் குளித்து முடித்து உடையுடுத்திக்கொண்டு மடுவில் ஸ்நானம் செய்துகொண்டிருக்கும் என்னை வாழ்



விக்கும் தேவையான போலினுக்காக நான் காத்துக்கொண்டிருந்தபோது. அந்த இடம் கருங்கற்களால் அமையப்பெற்றதெனினும் அடியில் நல்ல மணலாக இருந்தது. இந்த மடு கடற்கன்னிகள் ஸ்நானம் செய்வதற்கென்றே இயற்கை அதியற்புதமாக அமைந்துள்ள ஓர் இடம் என்பதில் சந்தேகமில்லை.

நான் அத்தகைய எண்ணங்களில் மூழ்கியிருக்கையில், அந்த ஏகாந்தத்திற்கும் அமைதிக்கும் இடையே ஒப்பற்ற அலைகளின் ஆரவாரங்களையும் மீறிக்கொண்டு என்னைக் கூப்பிடுவது போன்ற ஒரு மங்கையின் இன் குரல் என் காதுகளில் ஒலித்தது. அது என் எண்ணங்களை உறுதிப் படுத்தும் ஒரு தேவதையின் குரலைப்போன்று இருந்தது நான் விரைந்து கீழே இறங்கிச் சென்றேன்.

போலின் உள்ளூரச் சிரித்துக்கொண்டே, "நீ என்னத்தைப் பற்றிச் சிந்தித்துக்கொண்டேயிருக்கிறாய்?" என்று கேட்டாள்.

அவள் எப்பொழுதுமே என் சுக துக்கங்களை யுணர்ந்து என் மனதை நல்வழிப் படுத்திக்கொண்டிருப்பாள். அதுதான் எனது ஒவ்வொரு மாறுதலுக்கும் காரணம். அன்று சாயங்காலம் நாங்கள் அதற்கு முன் என்றுமில்லாதவாறு அவ்வளவு மனமொத்துப் போயிருந்தோம். வானம் மேக சஞ்சாரமற்றிருந்தது. கடலில் ஒரு சிறு அலைகூட இல்லை. இரு குழந்தைகள் கை கோர்த்துக்கொண்டு நெடுக ஓடுவதைப் போன்று நாங்களும் ஒருவர் கையை ஒருவர் அழுத்திப் பிடித்துக்கொண்டு மௌனமாக உல்லாசத்துடன் நடந்தோம்.

எங்கள் எதிரே குருவாளிக்குத் திரும்பி வந்துகொண்டிருக்கும் வயோதிக செம்படவன் ஒருவனைக் கண்டோம் அவன் கால்களில் ஒன்றும் அணிந்திருக்கவில்லை. அவன் கால் சட்டை கந்தரக் கோலமாய்க் கிழிந்துபோய் ஒட்டுப் போட்டுத் தைக்கப்பட்டிருந்தது. அவனது சேவலத்

தோற்றம் எங்கள் மன நிலையையே கெடுத்துவிட்டது. அந்தச் சந்தர்ப்பத்தில் நாங்கள் பெருஞ் செல்வர்களைப்போல் எங்களை நினைத்துக்கொண்டு ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டோம்.

அந்தச் செம்படவன் இடதுகையில் நண்டொன்றை கயிற்றில் கட்டிப் பிடித்துக்கொண்டிருந்தான். அவனது வலதுகையில் தூண்டிற் கயிறு இருந்தது. நாங்கள் இருவரும் சேர்ந்தார்ப்போல் அவன் மீனில் கொஞ்சம் நாங்கள் வாங்கிக் கொள்ளலாமா? என்று கேட்டோம். அந்த எண்ணம் ஒரே சமயத்தில் எங்கள் இருவர் உள்ளத்திலும் உதித்தது. அத்தகைய சிறு சம்பவங்கள் ஒன்றிலிருந்துதான் அந்த நினைவு பின்னனிட்டுக் கவிதைகளைப் புனைகிறது.

ஏனென்றால் நினைவும், தோற்றமும்தான் ஒரு இடத்தை அழகுள்ளதாகச் செய்கின்றது. ஒரு மனிதனின் உள்ளத்தில் ஆல்ப்ஸ் மலைத் தொடர் சூரிய உதயத்தின் போதோ அல்லது அஸ்தமனத்தின்போதோ காட்சியளிக்கும் அழகைக் காட்டிலும் இந்த பூமியின் ஏதேனும் ஒரு சிறிய இடம் அவனுக்குப் பிரமாதமாகக் காட்சியளிக்கலாம். நான் அந்த செம்படவனிடம் சொன்னேன்:

"அங்கே உனக்கு நல்ல மீன் கிடைத்திருக்கிறது."

"ஆம், ஐயா; "அவன் அருகில் வந்து நின்றுகொண்டு பதிலளித்தான். அவன் முகம் வெய்யில், பனி தாக்குதல்களுக்குள்ளாகி களையிழந்திருந்தது. செம்படவர்களின் எளிய வாழ்க்கை முறைகளைப் பற்றியும், மீன் பிடிக்கும் தொழில் பற்றியும் அவன் அமரிக்கையாகச் சொன்ருன். அவன் குரல் கடுமையின்றி சாந்தமாகந் தொனித்தது. அவன் நடத்தையில் அன்பு காணப்பட்டது. அவனைப் பார்க்கும்பொழுது அவன் ஆபாசங்களற்றவனுய், பட்டினிகிடந்து உடல் வளர்ச்சிக் குன்றிப்போயிருப்பதிலிருந்து அவனிடம் ஏதோ ஒரு துயரம் குடிகொண்டிருக்க வேண்டுமென்றே நினைக்கத் தோன்றும்.



நான் கேட்டேன்: "நீ அந்த மீனை எங்கு கொண்டு போய் விற்பாய்?"

"பட்டணத்தில்."

"அந்த மீனுக்கு என்ன கொடுப்பார்கள்?"

"சுமார் ஏழணு."

போலின் அதற்குள், "அது எனக்கு வேண்டும். நான் அதற்கு ஒன்றரை ரூபாய் தருகிறேன்," என்ருள்.

நான், "எனக்கு வேண்டும். நான் மூன்று ரூபாய் தருகிறேன்," என்றேன்.

"ஆறு ரூபாய்," என்ருள் போலின்.

"பத்து."

"பதினைந்து."

நான் அவளுக்கு இணங்கினேன். அதைவிட இன்னும் அதிகம் கேட்பதற்கு நாங்கள் அவ்வளவு பணக்காரர்களல்ல. அந்த செம்படவனுக்கு தெரியாத நிலையில் அவன் எங்களைக் கோபித்துக்கொள்ளவோ அல்லது திருப்திபடவோ முடியாதவனுக இருந்தான். ஆனல் நாங்கள் கௌரவமான முறையில் நாங்கள் யார்; எங்கே யிருக்கின்ருேமென்கின்ற விவரங்களை உடனேயே அவனிடம் சொல்லிவிட்டு அந்த மீனை எங்கள் வீட்டு சொந்தக்காரிக்குக் கொடுக்கும்படி அவனைக் கேட்டோம். அவன் மீன் பிடித்து விற்று அந்த வழியில்தான் அவன் காலட்சேபம் நடத்துகின்ருன் என்று நான் அவனைக் கேட்டேன்.

அவன் பதிலளித்தான்: "ஆமாம். அது கஷ்டமான வாழ்க்கையும்கூட, மீன் பிடித்தல் ஒரு ஆபத்தான தொழில். என்ருல் படகோ அல்லது வலைகளோ வாங்க முடியாத காரணத்தால் நான் கடலோரத்தேதான் மீன் பிடிக்கின்றேன். தூண்டிலையும், கயிற்றையும் நம்பித்தான் நான் வாழ வேண்டும். சில சமயங்களில் நாட்கணக்கில் சேர்ந்தாற்போல் ஒன்றுமே கிடைக்காது, சில சமயங்களில் அலைகளால் ஒதுக்கப்

பட்டு திரும்ப முடியாது முட்டாள்தனமாய் உறங்கிக்கொண்டிருக்கும் மீன்கள் எனக்குக் கிடைத்துவிடும். அல்லது கடலில் எட்டயிருந்து வரும் மீன்கள் பாறைகளருகே வரும்பொழுது பிடித்துவிடுவேன்.''

"மொத்தத்தில் நீ ஒரு நாளைக்கு எவ்வளவு சம்பாதிப்பாய்?''

"சுமார் எட்டணு...அதைக் கொண்டுதான் காலந்தள்ள வேண்டும். நான் ஒருத்தனுக மட்டும் இருந்தாலும் சரிகட்டிக் கொண்டுவிடலாம். ஆனுல் வயதான என் தந்தையையும் வைத்து நான் காப்பாற்ற வேண்டியிருக்கிறது. அவரோ குருடு.''

அவன் இந்த வார்த்தைகளை மிக்க எளிமையுடன் சொன்னுன். போலினும், நானும் ஒருவரை யொருவர் பார்த்தோம்.

"உனக்கு இல்லாள் இருக்கின்ருளா?'' என்று வினவினுள் அவள்.

அவன் பரிதாபமான முறையில் எங்களை ஏறிட்டுப் பார்த்தான். நான் அதற்கு முன் அம்மாதிரியான முகத் தோற்றத்தை ஒருபோதும் கண்டதில்லை.

"எனக்கு ஒரு மனைவி இருப்பாளானுல் முடியாத நிலையிலுள்ள என் தந்தையை நான் திக்கற்றுப் போகும்படி செய்திருக்க வேண்டியிருந்திருக்கும். பெண்டாட்டியையோ அல்லது பிள்ளையையோ வைத்து என்னுல் பராமரிக்க முடியாது.''

"நீ வேறு வேலை பார்க்கவேண்டும். வேறு ஏதேனும் ஒரு நல்ல வேலையில் நீ ஈடுபட்டால் உனக்கு இன்னும் அதிகம் வருவாய் கிடைக்கும். உதாரணமாய் உப்பளம் போன்ற வேறு வேலைகளில் நீ ஏன் ஈடுபடக் கூடாது?



"எனக்கு பூஞ்சையான உடலம்பு. போதிய பல மிருக்குமானுல் நான் அந்த வேலைக்குப் போயிருப்பேன். ரொம்ப சாவதானமாகவும் கொஞ்சம் யோசனையோடும் செய்யக்கூடிய ஏதாச்சும் வேலைகள்தான் என்னுல் செய்ய முடிகிறது.''

"உன் ஆகாராதிகள் எப்படி?''

"மட்ட கோதுமையில் தட்டுகிறது அடை, நத்தை ஆகியவையே.''

"உனக்கு என்ன வயதாகிறது?''

"முப்பத்தி ஏழு.''

பரிதாபத்திற்குரிய அம் மனிதனது ஏழ்மை நிலையினைக் கண்ட எங்கள் உள்ளம் வேதனையடையவும். போலினும், நானும் அவனுடன் நகர்ந்தோம். கள்ளங் கபடமற்ற அம்மனிதனின் தியாகத்தை எங்களால் அளவிட்டுப்பார்க்க முடியவில்லை. ஆயினும் அவனது தியாகத்தின் பெருந்தகைமையை நாங்கள் மனதாரப் போற்றினேம். பிரதிபலன் கருதாத அவனது பரோபகார குணம் எங்களை வெட்கி தலை குனியச் செய்தது. ஒரு நாளைய வயிற்றுப் பாட்டிற்காக அந்த சந்தர்ப்பத்தைச் சார்ந்து நிற்கும் அம் மனிதனை நாங்கள் பார்த்தோம், கடல் தயவுசெய்தால்தான் அன்று இரவு அவன் வயிற்றுப்பசியை தணிக்க முடியும். இல்லாவிட்டால் இல்லை என்பது தெரிந்திருந்தும் நடுங்கிக்கொண்டு அந்த குடிசைக்குள் முடங்கிக்கிடக்கும் கபோதியான அவனது வயோதிகத் தந்தையை நாங்கள் பார்த்தோம். நான் அவனிடம் சொன்னேன்:

"உன்னை சந்திக்க நேரிட்டதில் நாங்கள் பெருமகிழ்ச்சியடைகின்ருேம். ஒரு பாட்டில் ஒயினும், ரொட்டியும் உனக்கு நாங்கள் கொடுக்கின்ருேம். பெற்றுக் கொள்கின்ருயா?''

ஒரு பிச்சைக்காரனுக்கு அரண்மனையிலே ராஜ விருந்தென்ருல் எப்படியிருக்குமோ அப்படியிருந்திருக்கும் போலிருக்கிறது அந்த மனிதனுக்கு நான் சொன்ன அந்த வார்த்தைகள்.

“ஒரு நாளைக்கு அப்படிச் செய்தால் அவன் ஒருக்கால் பின்னிட்டு பல நாட்கள் ஏங்கி கஷ்டப்பட வேண்டியதாகி விட்டால்...” என்றாள் போலின்.

நான் அந்த மனிதனிடம் அவன் மீனை விற்று முடித்துக் கொண்டு பாட்ஸுக்கு வந்து எங்களைச் சந்திக்கும்படி சொன்னேன். அவன் மிகக் ஆசையுடன் சம்மதம் தெரிவித்து விட்டு நகரை நோக்கி விரைந்து நடந்தான்.

போலின் சொன்னாள்: “இது ஒரு துக்கரமான உலகம். அதிலும் குறிப்பாக இந்தப் பகுதி. கவிஞர்களும், நத்தைகளும்தான் இங்கே வசிக்க முடியும்! இங்கே என்னதான் இருக்கிறது. கடலையும், மணலையும், ஆகாயத்தையும் தவிர வேறொன்றுமே கிடையாது. மரங்கள்கூட கிடையாது. மரத்திற்கு பதிலாக பழைய படகுகளைத்தான் உடைத்துக் கொள்வர்களென்று நினைக்கிறேன். தக தகக்கும் இந்த மண்ணில் நாம் இரண்டு மைல்களுக்குமேல் நடந்து விட்டோம். அந்தக் குன்றுகளெல்லாம் உயிரற்ற பூதங்களைப்போன்று மணற் குன்றுகளிடையே தவழ்ந்து காணப்படுகின்றன.

அந்தக் கரையோரத்தேயுள்ள கற்பாதைகளில் அலைகள் பாய்ந்து மோதி அதன் வெண்ணிறத் திவலைகளை அந்த பொன் மணலின் மீது விசிறிக் கொண்டிருந்தன. அந்த அலைகள் மீதெழும் நீர் நுரைகளை வெள்ளை ரோஜா மலர்களை யொக்க காட்சி யளித்தன. தூரத்தே வானை முட்டிநிற்கும் பாட்னின் கோபுரம் ஏதோ அழிந்துகிடக்கும் மேற்கத்திய நகரம் ஒன்றன் நினைவின் சின்னம்போல் அவ்வளவு அழகாக் காணப்பட்டது.

“நாம் இப்படியே போகலாம்,” என்று சொன்னாள் போலின். நிழல்கள் எங்கள் காலடியே கிட்ட கிட்ட வந்து பின் எல்லாமாய் மறைந்து கொண்டிருந்தன. அந்த மோனம் எவ்வளவு அழகாக இருக்கின்றது. கடற்கரையை எதிர்த்து இந்தக் கடலின் முணகல் அநேகமாக அதை ஆழமாக்கியே விடுகிறது.



நான் சொன்னேன்: “இந்தக் காற்று, கடல், மணல் யாவும் இயைந்து பேதமில்லாதிருப்பதைப் போலத்தான் காணப்படுகின்றன. அவை ஏதோ ஒரு பெரிய விஷயத்தைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருப்பதைப்போலவும், நம்மால் அதனைக் தெரிந்து கொள்ள கூடுமானால் அவை நம்மை அழித்துவிடும் போலவுமே நினைக்கத் தோன்றுகிறது. நேற்று சூரிய அஸ்தமனத்திற்குப் பிறகு உண்மையில் எனக்கு அத்தகையே உணர்வே உண்டானது. ஆனால்......அந்த மணலின் பொன்னிறத்திலும், கடலின் பச்சையிலும், நீல வானிலும் நான் வேறுபாட்டை கண்டேன்.

அந்த மணற் குன்றுகள் துறவராசிரமங்களைப் போன்று இருக்கின்றன. அவற்றைப் பார்த்து துறவற வாழ்க்கை எப்படியிருக்கக் கூடுமென்று ஒருவர் கற்பனை செய்து கொள்ள முடியும்,” என்றாள் போலின்.

“அந்த மணல் ஒரு பாலைவத்தைப் போன்றிருக்கின்றது. அதனின்றும் நிராசையை ஒருவர் கற்பனை செய்துகொள்ள முடியும்.

“அதில் வேறுபாடுகளுண்டு,” என்றாள் போலின்.

சடக்கென்று எங்கள் பின்னால் அந்தச் செம்படவன் ஓடி வரும் காலடியோசை எங்களுக்குக் கேட்டது. அவன் ‘நல்ல விதமாக’ உடையணிந்துகொண்டு முன்னர் நாங்கள் பார்த்ததைக் காட்டிலும் இப்பொழுது மிக்க உற்சாகத்துடன் காணப்பட்டான். நாங்கள் சுமார் அரைமணி அவகாசம் பேசாமலேயே நடந்து சென்றோம். மணலின் சூடு கால் பொறுக்காததாலோ அல்லது நடையின் சிரமத்திலே எங்கள் மனம் ஒன்றியிருந்ததாலோ நாங்கள் மௌனமாகவேதான் சென்றோம். சிறு குழந்தைகளைப்போன்று ஒருவர் கையை ஒருவர் பற்றிக்கொண்டு நடந்து சென்றோம். நாங்கள் தோள் மேல் கைபோட்டுக்கொண்டு போயிருப்போமானால் எங்களால் ஒரு அடிகூட பெயர்த்து வைத்திருக்க முடியாது. அது உச்சி வேளை. நாங்கள் பாதி வழிதான் நடந்திருந்தோம்.

தரை முனையில் உயரமான குன்றுகள் உள்ள ஒரு இடத்தை சுட்டிக்காட்டி அங்கே குகை இருக்கலாம் என்றும் அங்குபோய் சற்று தங்கி இளைப்பாறலாம் என்றும் நான் சொன்னேன்.

அந்த செம்படவன் நான் சுட்டிக்காட்டும் பக்கத்தைப் பார்த்துவிட்டு வேண்டாமென்பதைப்போல் ஒரு தினுசாக தலையை ஆட்டிவிட்டு "அங்கே ஒருவர் இருக்கிறார். பாட்ஸ்' சந்தைக்குப் போய்விட்டு வருபவர்கள் அந்தப் பக்கம் போகாமல் ஒதுங்கி சுற்றிக்கொண்டு வேறு வழியாகத்தான் போவது வழக்கம்," என்றான். அவன் தாழ்ந்த ஒரு தினுசான குரலில் அப்படிச் சொன்னான். அதில் ஏதோ பயங்கரம் இருப்பதைப்போல் அந்தக் குரல் தொனித்தது.

"அப்படியானால் அந்தப் பக்கம் திருடர்கள் இருக்கின்றார்களா?" என்றேன் நான்.

எங்கள் வழிகாட்டி ஒரு பெருமூச் செறிந்தானே யொழிய வேறொன்றும் சொல்லவில்லை.

"நாம் அந்தப் பக்கம் போவோமானால் நமக்கு ஏதேனும் கெடுதல் வருமா?"

"ஊ ஹூம், இல்லை."

"நீ என்னுடன் வருவாயா?"

"வேண்டாம், பிரபு."

"எங்களுக்கு ஒன்றும் அபாயம் ஏற்பட்டு விடாதென்று நீ நிச்சயமாய் சொல்லக் கூடுமானால் நாங்கள் மட்டும் போகிறோம்."

அந்த செம்படவன் சடக்கென்று பதிலளித்தான்: "அதை நான் சொல்ல மாட்டேன்: ஆனால் அங்கிருப்பவன் உங்களை ஒன்றும் சொல்லவும் மாட்டான் உங்களுக்கு கெடுதல் எதுவும் செய்துவிடவும் மாட்டான். அவன் குகையிலிருந்து அவன் உசும்பக்கூட மாட்டான்."

"அப்படியானால் அது யார்?"



"ஒரு மனிதன்:"

"ஈரசைகள் ஒருபோதும் அதிக ஆபத்துடையதாக இருந்ததில்லை..."

எங்கள் வழிகாட்டி எங்களைப் பின் பற்றி வந்தான். அவன் முகம் கவலையில் தோய்ந்திருந்தது. நான் பேரார்வத்துடன் நேரே நடந்தேன். ஆனால் போலின் என் கையைப் பற்றிக் கொண்டாள். நாங்கள் அந்த மனிதனைப் பார்த்ததும் நாங்கள் இடத்தை விட்டே போய்விட்டால் போதுமென்று சொல்லி விடுவோமென்றே அந்த செம்படவன் நினைத்திருப்பான் என்பதில் சந்தேகமில்லை. எங்கள் ஆர்வம் அவ்வளவு அதிகரித்தது. மின்சாரம் பாய்ந்தாற்போன்று ஒரு பயம், எங்களை உலுக்கி எங்கள் இதயம் வேகமாக அடிக்கலாயின.

கடல் மட்டத்திற்கும் பல நூறடி உயரத்தே அந்தக் குகை இருந்தது. நாங்கள் அந்தக் குகைக்கு முன்னிலுள்ள அந்தத் தரையில் நாங்கள் காலடி வைத்தோமோ இல்லையோ நல்ல தூக்கத்தினின்றும் ஏதோ ஒரு சக்தி எங்களை திடுக்கென்று விழிக்க வைத்தால் எப்படியிருக்குமோ அப்படி ஒரு திக்பிரமை எங்களுக்கு ஏற்பட்டது.

ஒரு கருங்கல்லின்மீது ஒரு மனிதன் உட்கார்ந்திருப்பதை நாங்கள் இருவரும் பார்த்தோம். அவனும் எங்களை நோக்கினான்.

இரத்தம் தெறிப்பதைப் போன்று அந்த இரு கண்களினின்றும் வந்த பார்வை பீரங்கி வெடிக்கும் பொழுது உண்டாகும் ஒரு ஒளியைப் போன்றிருந்தது. அது மெல்ல எங்களை நோக்கித் திரும்பியது. ஆனால் அவன் உடம்பு கல்லாய் சமைந்து விட்டாற்போன்று ஆடாமல் அசையாமல் அப்படியேதான் இருந்தது. பின் அவன் பருந்துப் பார்வை கண்கூசாது சூரியனைப் பார்ப்பதைப் போன்று கடலின்மீது திரிந்தது. அந்த அலைகளின் மீதுள்ள அவன் பார்வையை அவன் திருப்பவில்லை.

சாலை ஓரத்தே பெரிய கருவாலி மரம் ஒன்று கொப்பு கிளைகள் வெட்டப்பட்டு மொட்டையாக நிற்கிறது. நல்ல ஒரு நடுநிசியில் அது திடுமென்று பூதமாக மாறி தலையைத் திருப்பக் கூடுமானுல் எப்படி யிருக்கு மென்பதை நீங்கள் கற்பனை செய்து பார்த்துக் கொள்ளுங்கள். அப்பொழுதுதான் அம்மனிதன் எப்படியிருந்தானென்பது உங்களுக்குத் தெரியும். அவன் வயது முதிர்ந்த ஹெர்குலஸைப் போன்றும் ஒலிம்பிய ஜோவைப் போன்று காணப்பட்டான். அந்தக் குகையின் ஒரு மூலையில் பாசி பெருங் குவியலாகக் குவித்துவைக்கப் பட்டிருப்பதை நான் கண்டேன். தட்டையான கருங்கல் ஒன்றை ஒரு மேசை போன்று அங்கே போடப்பட்டிருந்தது. அதன்மீது வட்டமான வெள்ளாப்பம் ஒன்று இருப்பதைக் கண்டேன்.

புராதன காலத்து கிறிஸ்தவ துறவிகளைப்போன்று அவன் பயங்கர கடூரமான துறவற வாழ்வை மேற்கொண்டிருக்க வேண்டும். ஒருக்கால் அவன் ஏதேனும் அவன் செய்த கொலை பாதகத்திற்காக பிராயச்சித்தம் செய்து கொள்ளும் வகையில் அப்படியாக இருக்க வேண்டும். அந்தக் கண்களிலே எப்பொழுதேனும் நீர் வடிந்திருக்கக் கூடுமோ? அந்த கரங்கள் எப்பொழுதேனும் ஒரு குத்து விட்டிருக்கக்கூடுமா ? உண்மை பலத்தினின்றும் வேறுபடுத்த முடியாத அவன் முக கம்பீரத்திலே கோரத்தின் சாயலும் கலந்திருந்தது. அந்தக் குன்றுகளிடையே வசிப்பதற்கு அம் மனிதன் எப்படி வந்தான்? அவன் உடம்பு எப்படி கருங்கல் போன்ருகியது?... எங்கள் வழிகாட்டி எதிர்பார்த்ததைப் போன்று நாங்கள் வாய்திறவாது சீக்கிரமே அவ்விடத்தைவிட்டு நகர்ந்தோம்.

"அந்த மனிதன் யார்?" என்று நான் கேட்டேன்.

அந்த செம்படவன் பதிலளித்தான்: "விரதம் கொண்டவன்' என்று அவனை சொல்கிருர்கள். முன்னர் நெடுங்காலத்திற்கு முன்பு காம்பிரிமார் (அதுதான் அவன் பெயர், அம்மா!) ஏதோ கொடுங் குற்றம் செய்துவிட்டான். அதற்காக நான் டீனிலுள்ள ஒரு மதகுரு கடும் பிராயச்சித்தத்



திற்கு அவனை உள்ளாக்கிவிட்டார். அவனிடமிருந்து வரும் காற்று மேலே பட்டால்கூட பெரும்பாவம் என்பதாகச் சொல்லப்படுகிறது. ஆகவே அந்தப் பக்கமாகப் போகும் ஜனங்கள் நின்று காற்று எந்தப் பக்கமிருந்து வீசுகிறதென்று கவனித்து விட்டுத்தான் போவார்கள்: வடமேற்கிலிருந்து வீசக்கூடுமானுல் தேவாலயத்திற்குப் போகக்கூடியவர்களாக இருப்பினும் சரியே, திரும்பி வேறு வழிதான் போவார்கள்.

அவன் பேசுவதே இல்லை. சில சமயங்களில் அவன் தம்பி மகளான ஒரு சிறு பெண் அவனுக்கு சாப்பாடு கொண்டு வந்து கொடுப்பாள். அவளிடம்தான் அவனுக்குப் பிரியம் அதிகம். அவளிடம் மட்டும்தான் அவன் சிரிப்பான்."

"ஆனுல் அவன் செய்த குற்றம் என்னவென்று நீ இன்னும் எங்களிடம் சொல்லவில்லையே? எங்கள் ஆவலைத் தூண்டிவிட்டு அதைத் தணிக்காமல் இருக்கிருயே." என்றேன்.

"நல்லது, ஐயா. என் தாயாரிடமிருந்துதான் நான் கேள்விப்பட்டேன். அந்தக் கதையை நான் உங்களுக்குச் சொல்வதாயின் என் உடம்பெல்லாம் மயிர்க் கூச்செறியும்: இந்த அம்மாள் அதைக்கேட்டு பயந்தாலும் பயந்துபோய் விடுவார்கள்."

"பயப்படமாட்டேன்: நீ சொல்," என்ருள் போலின்.

அந்தக் கதையை அவன் நினைவுக்கு கொண்டு வருபவனைப்போன்று எங்கள் வழிகாட்டி ஒரு கணம் மௌனமாக இருந்தான். பின் அந்தக் கதையைக் கீழ்க்கண்டவாறு சொன்ஞன்:

"காம்பிரிமார்கள் எல்லோருமே மீன் பிடிக்கும் தொழிலையுடையவர்கள். நீங்கள் இப்பொழுது பார்த்த அம்மனிதன் பியர்காம்பிரிமாருக்கு சொந்தத்தில் மீன்பிடிக்கும் படகு இருந்தது. மீன் பிடிப்பதுதான் அவன் தொழில். அவன்

ஒரு பெரும்படகு வாங்கி கடலில் இன்னும் எட்டபோய் கோலா மீன்கள் பிடிப்பதில் மும்முரமாக இருந்திருப்பான். ஆனால் அவன் குடும்பத்தில் அவனுக்கு ஒரு மனைவி இருந்தாள். அவன் அவளை நேசித்தான்.

"அவள் நல்ல கட்டழகி. இரக்க மனம் உடையவள். அவளுக்கும் பியர் மீது அளவுகடந்த ஆசை. அவனைவிட்டு அவள் பிரிந்திருக்கவே சகியாள். அந்த மணற் குன்றுகளிடையே அப்பால் பள்ளத்தே அவர்கள் வீடு மறைவில் இருக்கிறது. அதில் அவர்கள் வாழ்ந்தனர்.

"அவர்களுக்கு ஒரே ஒரு பிள்ளை. அந்த பிள்ளையை ஊரைப் போலில்லாமல் ரொம்பவும் செல்வமாக வளர்த்தார்கள். அவர்கள் செல்லங்கொடுத்து அந்தப் பிள்ளையை வீணாக்கிவிட்டதாக ஜனங்கள் அவர்களிடமே சொன்னார்கள். அந்தச் சிறு வயதிலேயே ஜெக்யூஸ் காம்பிரிமார் மனம்போன போக்கில் நடக்க ஆரம்பித்துவிட்டான். அடங்காப்பிடாரி என்றே அவனை சொல்லவேண்டும். யாராகிலும் அவன் தகப்பனாரிடம் வந்து, "கேள்விப்பட்டீர்களா, உங்கள் பையன் என் பையனை அடித்துக்கொன்றுவிடப் பார்த்தான்," என்று சொன்னால் அவன் அகந்தையுடண் "என் மகன் கெட்டிக்காரப் பயல்," என்று பதில் சொல்லுவான். யாராகினும் "உங்களுக்குத் தெரியுமா, உங்கள் மகன் என் பெண்ணின் கண்ணில் குத்தி கண்ணையே பாழ்படுத்திவிடப் பார்த்தான்" என்று சொன்னால், அதற்கி அவன், "ஆகா, அவன் அந்தப் பெண்களெல்லாம் ஆசைபடக்கூடிய அழகிய மணாளனாக இருப்பான்," என்று சொல்வான்.

அங்ஙனம் ஜெக்யூஸ் காம்பிரிமார் கட்டுப்பாடற்ற முறையில் அவிழ்த்துவிடப்பட்டான். பதினைந்து பதினாறு வயதிற்கெல்லாம் அவன் பக்கா ரௌடியாகவே ஆகிவிட்டான்: பெற்ற அவன் தாயிடமிருந்தே திருடத் தொடங்கினான். அவள் மகனின் அந்தச் செய்கையை



அவள் கணவனிடம் தெரிவிக்க பயந்தாள். ஒரு நாள் பியர் மீன் பிடிக்கப் போயிருந்த சமயம் மகன் வீட்டிலிருந்த பொருள்கள் எல்லாவற்றையும் திருடிக்கொண்டு போய் விற்று நான்டீஸில் செலவு செய்துகொண்டு கும்மாளமடித்தான்.

அவள் கணவன் திரும்பிவந்ததும் அவள் வாழ்வில் அன்றுதான் முதன் முறையாக நடுங்கினாள். அவன் வந்ததும் வீட்டில் இருப்பதெல்லாம் அக்கம் பக்கம் வீடுகளிலிருந்து வாங்கிவந்து வைக்கப்பட்டிருக்கும் இரவல் சாமான்கள் என்பதை கவனித்துவிட்டு அவன் கேட்டான்:

"இதன் அர்த்தமென்ன?"

அவள் தழுதழுத்த குரலில், "நாம் திருடப்பட்டுவிட்டோம்," என்று பதிலளித்தாள்.

"ஜெக்யூஸ் எங்கே?"

"அவன் எங்கோ நான்டீஸில் இருக்கிறான்."

"அவன் கேளிக் கூத்தில்தான் நிரம்பப் பிரியமாக இருக்கிறான். நான் போய் அவனைப் பார்க்க வேண்டும்," என்றார் அவன் தகப்பனார்.

காம்பிரிமார் போய் தன் மகனைப் பார்த்தான். எதுவும் கேட்கவில்லை, அவனை வீட்டுக்கு அழைத்துக்கொண்டு வந்தான். அவனிடம் சொன்னான்: "இரண்டு வருடத்திற்கு நீ ஒழுங்குமுறையாக இங்கேயே இருக்கவேண்டும். இலலாவிட்டால் உன்னை நான் என்ன செய்வேனென்பது எனக்குத் தெரியாது." ஆனால் அந்த இளைஞன் தந்தையின் வாஞ்சையை அலட்சியப்படுத்தி அவனை மிரட்டுவதைப் போன்று வெறித்துப் பார்த்தான். பியர் கோபமுற்று அவன் முகத்தில் ஓங்கி ஒரு அறைவிட்டான். அந்த அறை அவனை ஆறுமாதங்கள் படுக்கையிலே கிடத்திவைத்திருந்தது.

ஒருநாள் இரவு அவன்தாய் படுத்துத் தூங்கிக்கொண்டிருக்கும்பொழுது—அவள் மகனும் தூங்கிக்கொண்டுதான்

இருப்பான் என்ற நிம்மதி அவனுக்குக் கிடையாது—அவள் ஒரு சத்தத்தைக் கேட்டாள். சட்டென படுக்கையை விட்டெழுந்தாள். அவள் புயத்தில் ஒரு கத்திக்குத்து விழுந்தது. அறைக்குள் திருடர்கள் புகுந்துவிட்டார்களென்று அவள் வீரிட்டுக் கத்தினாள். ஆனால் அங்கே யாரும் காணப் படவில்லை. மறுநாள் காலை ஜெக்யூஸைக் கண்டதும் அவனைக் கேட்டதற்கு அவன் பாட்ஸில் இருந்ததாகச் சொன்னான்.

ஜெக்யூஸ் வாங்கும் கடன்களைத் திரும்பக் கொடுப்பதிலேயே அவன் பெற்றோர்களின் குடும்பம் அழிந்தது. அவர்கள் செல்வநிலைமாறி வறுமையில் உழலத் தொடங்கியது.

ஒருநாள் சாயங்காலம் பியர் காம்பிரிமாருக்கு என்னவோ ஒரு சந்தேகம் தட்டியது. உடனே வீட்டுக்குள் ஒளிந்திருந்து அவனும் அவன் மனைவியும் காலமெல்லாம் பாடுபட்டுச் சம்பாதித்து மிச்சப்படுத்தி வைத்திருந்த பணத்தை அவன் மகன் திருடிக்கொண்டு போவதைப் பார்த்துவிட்டான். அவனை ஒன்றும் சொல்லவில்லை. ஒருநாள் சாயங்கால நேரத்தில் அவன் மனைவியைக் கூப்பிட்டு, அறைகளைச் சுத்தம் செய்து நெருப்புண்டாக்கி, மெழுகுவர்த்திகள் கொளுத்தி வைத்து அழகுபடுத்திவைக்கும்படிக்கும். அதோடு அவளது திருமண ஆடைகளை அணிந்துகொண்டிருக்கும்படிக்கும் அவளிடம் சொன்னான். பின்னர் அவன் தம்பி ஜோசப்பை கூப்பிட்டு, "வீட்டிற்கும் வெளியே எட்டியிருந்து கவனமாகப் பார்த்துக்கொள். உப்பளம்கள் பக்கமோ அல்லது கடற்கரையிலோ ஏதாகிலும் சத்தம் கேட்டால் உடனே எனக்குத் தெரிவி," என்று கட்டளையிட்டான். அதன்மேல் அவனது துப்பாக்கு ரவைகள் அடைத்து அதனை அடுப்பங்கரை ஒரு மூலையில் கொண்டுபோய் வைத்தான்.

இரவு நெடுநேரத்திற்குப் பின்னர் ஜெக்யூஸ் வீட்டிற்குத் திரும்பி வந்தான். அவன் சூதாடி குடித்து அட்டகாசம் செய்துவிட்டு வந்திருந்தான். அவன் சிற்றப்பன் அவன் வரும்



சத்தத்தைக் கேட்டும் அவனை ஒன்றும் சொல்லாமல் அந்த இடத்தினின்றும் வந்துவிட்டான்.

ஜெக்யூஸ் வீட்டிற்குள் நுழைந்ததும் அவன் தகப்பனார் அவனிடம் சொன்னார்:

"நீ உன் தாய் தந்தையர் முன்னால் இருக்கின்றாய். நீ அவர்களுக்குத் தீங்கு செய்துவிட்டாய். அவர்கள்தான் உனக்கு நீதிபதிகளாக இருக்கவேண்டும். அப்படி இப்படி அசையாதபடி மரம்போல் அப்படியே உட்கார்ந்திருக்க வேண்டும். நீ அந்த இடத்தைவிட்டு நகர்வாயானால், நாயை சுடுவதைப் போன்று உன்னை சுட்டுக்கொன்று விடுவேன்."

காம்பிரிமாரின் மகன் செத்த மீனைப்போன்று அப்படியே பேசாதிருந்தான். அவ்வளவுக்கும் அவன்தாய் ஒரு வார்த்தை கூட சொல்லவில்லை.

காம்பிரிமார் கேட்டான்: "ஜெக்யூஸ், நீ எங்கள் பணத்தை திருடவில்லை என்று சத்தியம் செய்வாயா?"

அந்த இளைஞன் தன் கையை தூக்கினான்.

"என் உயிரின் மீது ஆணை........" அவன் ஆரம்பித்தான்.

ஆனால் அவன்தாய் சடக்கென்று சொன்னான்: "அதல்ல ஜெக்யூஸ், அதல்ல, நீ பாவம் செய்திருப்பாயானால் திருந்திக் கொள்ள அவகாசம் இருக்கிறது."

"நீ தான் பாவி...நீ என்னை கெடுத்துவிட்டாய்!" அவன் கத்தினான்.

வயோதிக பியரின் முகம் வெளிரிவிட்டது. அவன் விரல்கள் பதறின. தழுதழுத்த குரலில் சொன்னான்:

"அதைப்பற்றி நான் கவலைப்படமாட்டேன். என்னை சொல்பவன் பகிரங்கமான இடத்தில் தூக்கிலிடப்படுவான். ஆகவே நான் நீதியைத்தான் எதிர்நோக்குகிறேன். உனது பாவங்களை நீ ஒப்புக்கொள்வதைக் கேட்க ஒரு மதகுரு வந்துகொண்டிருக்கிறார். நீ தயாராக இரு."

காம்பிரிமாரின் மனைவி எழுந்து அவ்வறையை விட்டுப் போய்விட்டாள். அவள் போனதும் அந்த மதகுரு உள்ளே வந்தார்.

ஆனால் ஜெக்யூஸ் பேச மறுத்துவிட்டான். அவன் சூக்ஷ்ம புத்தியுள்ள ஒரு வாலிபன். அவன் குற்றங்களை அவன் ஒப்புக்கொள்ளும்வரை அவன் தகப்பனார் அவனைக் கொல்ல மாட்டார் என்பது அவனுக்குத் தெரியும். பின்னர் வயோதிக பியர் சொன்னான்:

"என் மகனே, உனக்கொரு பாடம் கற்பிக்கவேண்டி இது செய்யப்பட்டது. ஆயின் நீ உன் போக்கைத் திருத்திக் கொள்ளாவிடில், நான் உனக்கு ஒரு முடிவு கட்டிவிட்டேன்- உன் கடைசி பிரார்த்தனைக்கு அவகாசம் இருந்தாலும் சரி- இல்லாவிட்டாலும் சரி. படுக்கச் செல்."

அதைக் கேட்கவும் அவனுக்கு மூச்சுத்திணறியது. பயந்து போய் அவன் சொன்னபடி செய்தான். அவன் ஒரு வன்நெஞ்ச துன்மார்க்க வாலிபனாதலால், அவனுக்கு மனக் கவலை உண்டாகவில்லை. அவன் படுத்ததுமே அயர்ந்து தூங்கிப்போனான்.

அவன் வாயும், அவன் கைகால்களும் இறுகக் கட்டப் படுவதைக் கண்டு அவன் திடுக்கிட்டு விழித்தான்........... புரண்டான், துவண்டான்......அவன் தாய் அவன் தந்தையின் காலில் விழுந்தாள். ஆனால் காம்பிரிமார் சொன்னான்:

"அவனைப் படகுக்கு கொண்டுபோக எனக்கு உதவி செய்."

ஆனால் அவள் அவனுக்கு உதவிசெய்ய மாட்டாளல்லவா? அவனாகவே அதைச் செய்ய வேண்டியிருந்தது. அவனை மலைகளுக்கு அப்பால் நேரே கடலுக்குகொண்டு சென்றான். அங்கே போனதும் அவன் மகனின் கழுத்தில் ஒரு கருங்கல்லைக் கட்டினான். கரையிலிருந்து தாயின் கதறல் சத்தம் வந்தது. அந்த நிலவொளியிலே அவன் மகனை—அவன் கடலில் மூழ்குவதைப் பார்த்தாள்...... அவள் மனம் படாதபாடு பட்டது.



காம்பிரிமார் திரும்பிவந்து அவளைப் பார்த்தபொழுது உயிரற்ற பிணம்போல் அவள் படுத்துக்கிடந்தாள். அவர்கள் அவள் மகனைக் கொண்டு சென்ற அதே படகில் அவளையும் அழைத்துக்கொண்டு போய் குருவாசிக்கும் திரும்ப அவளைக் கொண்டு வந்து சேர்ந்தனர்.

அதன் பின்னர் அவள் ஒருவாரம்கூட உயிருடன் இருக்க வில்லை. அந்தப் படகை தீவைத்துக் கொளுத்திவிடுமாறு அவள் கணவனிடம் மன்றாடிக் கேட்டுக் கொண்டே அவள் உயிர் துறந்தாள்........... அதை அவன் மகிழ்ச்சியுடன் செய்தான்.

பின் பத்து நாட்கள் வரை அவன் என்ன செய்தா னென்றோ, எங்கு போனானென்றோ எங்களுக்குத் தெரியாது. குடிகாரனைப் போல் தட்டுத் தடுமாறிக்கொண்டு சாலையில் போனதை பார்த்ததாக யாரோ ஒருவர் சொன்னார்... பின்னர் அவன் இங்கே, இந்த மலைக்கு வந்துவிட்டான். அதிலிருந்து அவன் ஒரு வார்த்தைகூட பேசவே இல்லை.

எங்கள் எல்லோருக்குமே நெடு நேரம்வரை பேச நாவெழவில்லை. மேலும் கொஞ்சம்கூட நடப்பதற்கே எங்களுக்கு முடியாதபடி ஆகிவிட்டது. இந்த உலகத்தில் துயரமான சம்பவங்களே நிறைய இருக்கின்றன. நாங்கள் மகிழ்ச்சியுடன் இருப்பதற்குக்கூட உரிமை இல்லை என்றே நாங்கள் பெரிதும் உணர்ந்தோம்:

"நமது நண்பர் அவருக்கு வேண்டிய ரொட்டிக்கும், சிவப்பு ஒயினுக்கும் காத்துக்கொண்டிருப்பதாக நினைக் கிறேன். எனக்கு என்னவோபோல் ஒரே களைப்பாய் இருக் கிறது. இனி நான் பாட்ஸுக்குப்போக இஷ்டப்படவில்லை," என்றாள் போலிஸ்.

"இனி நம் வருங்காலத்தில் இந்தப் பக்கம் இந்த இடம் வரைக்கும் நாம் நடந்து வருவதை வைத்துக்கொள்ளலாம் என்று நான் நினைக்கிறேன்," என்றேன் நான் மெதுவாக.

# உருளை

## பியோடர் சொலோகப்

நகர்புற தெருவொன்றில் ஓர் ஸ்திரி காலை] நேரத்தில் உலாவிக்கொண்டிருந்தாள்; நான்கு வயதுள்ள குழந்தையொன்று அவளுடன் இருந்தது. அவள் யௌவனமாயும், சுறுசுறுப்பாகவும் காணப்பட்டாள். அவள் உதடுகளில் புன்னகை தவழ்ந்து நின்றது. ஆனந்தத்தில் பிரகாசமடைந்த அந்தக் குழந்தையின் சிவந்த கன்னங்களை அவள் கனிந்த பார்வையுடன் பார்த்தாள். அந்தச் சிறுவர் ஓர் புதிய அழகான, மஞ்சள் நிற உருளை ஒன்றை உருட்டிக் கொண்டிருந்தான். உருளை உருண்டோட, அதன் பின்னே கால்கள் தடுமாற ஓடி விளையாடினான். அந்த விளையாட்டின் இன்பத்தை உள்ளுக்கு அடக்க முடியாதபடி வாய்விட்டுக் கல கலவென்று சிரித்தான்.

என்ன சந்தோஷம்! அவனுக்கு அதற்கு முன் என்றுமே ஓர் உருளை கிடைத்ததில்லை: அது அவனை எப்படி துள்ளிக் குதித்து விளையாடச் செய்துவிட்டது!

அவனுக்கு முன்னால் தடங்கல் செய்ய எதுவும் இல்லை அவனுக்கு எல்லாமே நூதனமாய்த் தென்பட்டது. தூரத்திலுள்ள நகரின் ஆரவாரம், சூரிய உதயத்தின் புன்னகை, காலைக் காட்சியுடன் விளங்கும் தெருக்கள்;— யாவும் அந்தக் குழந்தைக்குத் தூய்மையாயும், புதுமையாயும், சந்தோஷமாயும் காணப்பட்டன.



அழுக்குப் பிடித்துக் கிழிந்துபோன உடைகளை அணிந்த ஓர் வயோதிக மனிதன் அந்தத் தெருவின் மத்தியில் நின்று கொண்டிருந்தான். அவன் அந்த ஸ்திரியும், குழந்தையும் போவதற்குப் பாதை விட்டுவிட்டு விலகி சுவரோடு ஒன்றி நின்றான். மங்கிய கண்களால் அந்தக் குழந்தையை ஒரு முறை வெறித்துப் பார்த்துவிட்டு ஓர் மந்தகாசமானச் சிரிப்பு சிரித்து விட்டு நின்றான். குழம்பிய, வரண்ட பல எண்ணங்கள் அவன் மண்டைக்குள் போராடலாயின.

"ஓர் சின்னக் குழந்தை!" அவன் தனக்குள் சொல்லிக் கொண்டான். "ரொம்பச் சிறுவன். சந்தோஷத்தால் பூரித்துப் போகிறான். அடிமேலடிப் போட்டு நடக்கும் அவனைப் பாருங்களேன்!"

அதை அவனால் முற்றிலும் கிரகிக்க முடியவில்லை. அது எப்படியோ அவனுக்கு விரோதமாகத்தான் தோன்றியது.

அங்கே ஒரு சின்ன குழந்தை—தலைமயிரில் ஏதோ ஒன்று கட்டியிருக்கவேண்டியது! விளையாட்டு விஷமத்தனமானது. ஒவ்வொரு குழந்தைகளும் விஷமக்காரர்கள் என்பது எல்லோருக்கும் தெரியும்.

அங்கே தாய் நின்றாள் — அவள் அதட்டவும் இல்லை, கண்டிக்கவும் இல்லை. சப்தம் போடவும், அவள் சாவதானமாயும், சந்தோஷமாகவுமே இருந்தாள். அவர்கள் அன்பு ததும்ப மகிழ்ந்தார்ப்பரித்தார்கள்:

மற்றோர் புறம் அவன்—அந்த வயோதிக மனிதன் அவன் சிறுவனாக இருந்த பொழுது ஒரு நாயைப் போன்றிருந்தான்! அவன் வாழ்கையிலே விசேஷமான தெதுவும் அன்றும் இல்லை, இன்றும் இல்லை. இருப்பினும் அது நிச்சயம். அவன் இனி ; கஷ்டப்பட வேண்டியதில்லை. அவனுக்குச் சாப்பிடுவதற்கு ஏதோ இருக்கிறது. உருளையோ அல்லது வேறு எந்த விளையாட்டுச் சாமானோ அவனுக்குக் கிடைத்ததில்லை. அவன் வாழ் காலத்தை வறுமையிலும்,

ஏழ்மையிலும், கவலையிலும்தான் கழித்தான். அவன் வாழ்க்கையில் அவன் ஓர் இன்பம் கூடக் கண்டதே இல்லை; அவன் ஒன்றையும் அநுபவித்ததே இல்லை. பொக்கை வாயால் அந்தக் குழந்தையைப் பார்த்துச் சிரித்தான். அவன் மீது பொருமையுடன் சொன்னான்.

"என்ன கேவல விளையாட்டு!"

ஆனால் அந்தப் பொருமை அவனையே சித்திரவதை செய்யலாயிற்று. அவன் வேலைக்குச் சென்றான். அவன் வேலைப் பார்த்த அந்த தொழிற்சாலைக்கு. அவன் சிறு பிராயம் முதல் குடு குடு கிழவனாகும் வரையில் வேலைப் பார்த்த அந்தச் தொழிற்சாலைக்கு. அன்று நாள் பூராவும் அந்தக் குழந்தையைப் பற்றியே எண்ணிக் கொண்டிருந்தான்.

அது அவன் தீர்க்கமான நெஞ்சத்திலே ஆழமாகப்பதிந்த எண்ணம். அவன் மனத்திலிருந்த அந்தக் குழந்தையை அவனால் போக்க முடியவில்லை. அவன் பார்க்கின்றான், சிரித்துக்கொண்டும், ஓடிக்கொண்டும், விளையாடிக்கொண்டும், இருக்கும் அந்தக் குழந்தையை. எவ்வளவு அழகான கால்கள் அவனுக்கு இருக்கின்றன.........!

அன்று நாள் பூராவும், தொழிற்சாலையின் சப்தத்திலும் அந்தக் குழந்தை உருளையுடன் தோன்றி அவன் முன்னே காட்சியளித்துக்கொண்டிருந்தது. அன்று இரவிலும் அந்தக் குழந்தையை அவன் கனவில் கண்டான்.

மறுநாட்காலை. அதே காட்சி மீண்டும் அந்த வயோதிகன் உள்ளத்திலே உருவெடுத்தது.

யந்திரங்கள் சப்தித்தன; வேலைகள் நடந்துகொண்டிருந்தது; கைகள் தத்தம் வேலைகளில் ஈடுபட்டிருந்தன' பொக்கை வாய் கற்பனையில் லயித்துச் சிரித்துக்கொண்டிருந்தது. எண்ணற்ற சக்கரங்கள் சுற்றவும், அதில் மாட்டப்பட்ட 'பெல்ட்கள்' ஓடவும், கனத்த காற்று தூசலுடன் விசிறி எழும்பி, புகையுடனும் உள்ளங்கெனும் சூழ்ந்து



நின்றது. சுவர்கள்கூட கண்ணுக்குத் தெரியாமலிருந்தன. தொழிலாளர்கள் யந்திரம் போன்று உழைத்துக் கொண்டிருந்தார்கள். அந்த யந்திரங்களின் அமளியான சப்தத்திலே மனிதக் குரல் கேட்கவில்லை.

அந்த வயோதிகனின் கற்பனை காட்சியாக மாறலாயிற்று அவன் அதே க்ஷணம் ஓர் சிறு குழந்தையாகிவிட்டான்; அவன் தாய் ஓர் சீமாட்டி. அவனிடம் உருளை இருக்கின்றனது. அவனிடம் 'ஸ்டிக்' இருக்கின்றது. அந்த ஸ்டிக்கினால் உருளையைத் தள்ளிக்கொண்டு......... அவன் ஓர் வெள்ளைக் கால்சிராய்த் தரித்திருக்கிறான். அவன் கால்கள் பருமனாக இருக்கின்றன. அவன் முழங்கால்கள் திறந்தபடி இருக்கின்றன.

நாட்கள் ஓடின; வேலை நடந்து சென்றது; அவன் கனவு நிலை பெற்றது.

ஒரு நாள் சாயங்காலம் அந்த வயோதிக மனிதன் வேலை விட்டுத் திரும்பி வந்தபொழுது வழியில் பழைய பீப்பாய் ஒன்றின் வளையம் ஒன்று ரஸ்தாவில் கிடைப்பதைக் கண்டான்: அது துருப்பிடித்துப்போன உதவாக்கரையான ஒன்று: அவனுக்கு சந்தோஷத்தால் மெய் சிலிர்த்தது; அவன் மங்கிய கண்களில் நீர் மல்கியது. அதே க்னம் தவிர்க்க முடியாத ஒரு அபிலாஷை அவன் உள்ளத்தில் திமிறி எழுந்தது. அவன் தன்னைச் சுற்றிலும் ஓர் முறைப் பார்த்துக்கொண்டான். பின் கீழே குனிந்தான். நடுநடுங்கும் அவன் கரங்களால் அந்த வளையத்தை எடுத்தான். சங்கோசத்துடனும், சந்தோஷத்துடனும் அதை அவனுடன் அவன் வீட்டிற்குக் கொண்டுவந்தான். அவனை யாரும் பார்க்கவில்லை அவனை எவரும் கேட்கவில்லை. அது யாருடைய பொருள்? கந்தலை உடுத்திய அந்தக் கிழவன் ஓர் பழைய, உபயோக மற்ற கெட்டிப்போன அந்த வளையத்தை எடுத்துக்கொண்டு போகிறான்—யாருக் கென்ன?

அவன் அதை யாரும் பார்த்தால் எள்ளி நகையாடுவார்களே என்று திருட்டுத் தனமாகவே எடுத்துச் சென்றான்.

அவன் ஏன் அதை எடுத்தான்? அவன் ஏன் அதைக் கொண்டு வந்தான்? அது அவனுக்கும் சொல்ல முடியாது. எனினும் அது அந்தச் சிறுவனின் உருளையைப் போன்றே இருந்தது. அது போதுமானது. அதில் ஒன்றும் பிசகில்லை.

அவன் அதைப் பார்ப்பான்; அவன் அதைத் தொடுவான் அது அவன் சிந்தனைகளைக் கிளறிவிட்டு விடும்.

எத்தனையோ எண்ணங்கள் அவன் சிந்தனையில் சுழலும். அதில் அவன் லயித்து மெய்மறந்திருப்பான்.

அநேக நாட்கள் வரையில் அந்த உருளை அந்தக் கிழவனின் சின்னக் குச்சிக்குள்ளே அவன் படுக்கையண்டை இருந்தது. அவன் சில சமயங்களில் அதை அந்த இடத்திலிருந்து எடுப்பான்; அதைப் பார்ப்பான் அது அவனது வயோதிக உள்ளத்திற்கு ஓர் ஆறுதலை அளிக்கும்; அந்த சந்தோஷகரமான சின்னக் குழந்தையைப் பற்றிய எண்ணங்களுக்குக் கொண்டு வந்துவிடும்.

ஒருநாள் அழகிய காலை நேரத்தில் என்றுமில்லாத பரவசத்துடன் பறவைகள் மரங்களிலிருந்து கீச்சென்று கத்திக் கொண்டு பறந்தோடின. அந்தக் கிழவன் அதிகாலையில் துயில் எழுந்தான். அந்த உருளையை எடுத்துக்கொண்டு நகருக்கும் அப்பால் கொஞ்ச தூரம் சென்றான். சருகுகள் உதிர்ந்து பட்டை உரிந்து, கன்னங் கரேலென்றிருந்த அந்த மரங்களின் மோனம் அவனுக்கு கிரகிக்க முடியாதபடி இருந்தது. அங்கே தூசலுமில்லை; சந்தடியும் இல்லை. அழகிய காலைப் பனி மரங்களின் பின்னே உரங்கிக் கொண்டிருந்தது. அந்த வயோதிகன் கால்கள் சருகுகளை மிதித்துக்கொண்டு தள்ளாடி கரடு முரடான பாதைகளின் பக்கம் இழுத்துச் சென்றன.

அந்த மனிதன் பட்டுப்போன ஓர் மரக்கிளையை ஒடித்து அதில் தன் உருளையை மாட்டிக்கொண்டான். பின் திறந்த வெளிக்கு வெளிச்சமும், அமைதியும் நிறைந்த ஓர் இடத்திற்கு வரலானான். எண்ணற்ற பனித்துளிகளிலிருந்து பிரதி



பலிக்கும் வெண்ணிற கிரணங்கள் புல்களில் பாய்ந்து புதிய புல் இதழ்களை பொலிவுறச் செய்தன.

கடக்கென்று அந்த வயோதிக மனிதன் அந்த வளையத்தை உருள விட்டான். அந்த ஸ்டிக்கைக் கொண்டு அதைத் தள்ளினான். புல்தரையின் மீது அது உருண்டு கொண்டு ஓடியது. அவன் கெ......க்......கெக்......கென்று வாய்விட்டுச் சிரித்தான். அந்த சின்னக் குழந்தையைப் போன்று அந்த உருளையைப் பின்தொடர்ந்து சென்றான். அந்த சின்னக் குழந்தை செய்தது மாதிரி அந்த உருளையைக் காலால் தள்ளிவிட்டு ஸ்டிக்கால் உருட்டிக்கொண்டு சென்றான்.

அது அவனுக்கு அவன் சிறு குழந்தையாயும் அழகாயும் சந்தோஷமாயும் இருப்பதுபோல் தோன்றியது. அது அவனுக்கு அவன் தாயார் பின்னில் இருந்து அவன் பின்னால் வந்து சிரித்துக் கொண்டிருப்பதைப்போல் தோன்றியது. சிறு குழந்தையின் முதல் விளையாட்டைப் போன்று அந்த விளையாட்டும், பசும்புல் தரையும், அந்த சதுப்பு நிலமும் அவனுக்கு ஓர் புத்துணர்வு அளித்தது.

அவன் ஒரேயடியாய்ச் சிரிக்கலானான். அவன் பொக்கை வாயால் சிரிக்கும்பொழுது அவன் சிரிப்பு சத்தத்துடன், இருமல் சத்தமும் ஒன்றாகச் சேர்ந்துகொண்டு ஒரே சத்தமாக இருந்தது. அந்த சத்தத்திலே வெள்ளாட்டு மயிர்போன்ற அவன் தாடி மயிர், மஞ்சள் நிறமுள்ள முதிர்ந்த முகத்திலே துடிக்கலாயின.

காட்டில் காலை நேரங்களில் அந்தக் கிழ மனிதன் உருளையுடன் விளையாடுவான்.

சில சமயங்களில் நினைப்பான். அவனை யாரேனும் பார்த்துவிட்டால்—அவனைப் பார்த்துச் சிரிப்பார்கள். அது அவனுக்கு ஓர் வெட்க உணர்ச்சியை உண்டு பண்ணியது. அந்த வெட்கம் அவனுக்கு ஓர் பயமாகத் தோன்றியது.

உணர்வற்றுப் போவான்; திகிலுடனுடன், சஞ்சலத்துட னுடன் தன்னைச் சுற்றிலும் பார்த்துக்கொள்வான்.

ஆனால் அதைப் பார்க்க அங்கே யாரும் இரார்........ கேட்க யாரும் இரார்.........

அவன் தனக்குள் திருப்தி செய்துகொண்டு குஷியுடன் சிரித்துக்கொண்டே நகருக்குத் திரும்புவான்.

அவனை யாருமே பார்த்ததில்லை; அவனுக்கு என்றும், எதுவும் நேரிட்டதுமில்லை. அந்த வயோதிக மனிதன் அமைதியுடன் அநேக நாட்கள் விளையாடினான். ஒரு நாள் காலைப் பனியில் அவனுக்கு ஜலதோஷம் ஏற்பட்டது. ஆஸ்பத்திரிக்கு சென்றான்; உடனே இறந்து போய்விட்டான். தொழிற்சாலையின் வைத்திய சாலையில் பலதரப்பட்ட மக்களின் மத்தியிலே அவன் சாகும்பொழுது அவன் அமைதி யாகச் சிரித்தான்.

அவன் ஞாபகங்கள் அவனுக்கு சாந்தி செய்வித்தது. அவனும்கூட — அவனும் ஒரு குழந்தையாக இருந்திருக் கின்றான்; அவனும்கூட— இருண்ட மரங்களின் ஊடே பசும் புல் தரையின்மீது சிரித்துக்கொண்டு ஓடியிருக்கின்றான். அவன் தாயும் அவனைப் பின் தொடர்ந்து வந்திருக் கின்றாள்.

# சிரஞ்சீவி ராணிகள்

டிரான் — வான் — டங்

சின்-டே என்று சொல்லப்படும் ஓர் சிறிய டான்கின் கிராமத்தில் அவர்கள் இருவரும் இரு தாமரை மலர்களைப் போன்று வளர்ந்து வந்தார்கள். அவர்களில் மூத்தவன் பெயர் டிரங்—டிராக் இளையவனின் பெயர் டிரங் டிரங்க்-டிராக் அதிக அழகுடையவள். அவள் கண்கள் தீப்பொறி களைப் போன்று ஒவ்வொருவர் இதயத்திலும் காதல் தீ மூட்டிவிடும்; அவள் புன்முறுவல் காற்றில் விரியும் செவ்விய ரோஜா இதழ்களைப் போன்று ஒவ்வொருவர் உள்ளத்திலும் ஓர் புயலை எழுப்பிவிடும்: அவள் மிருதுவான இனிய குரல் மலைகளையும், கற்களையும், நடனமாடச் செய்துவிடும் மனிதர். களும், மிருகங்களும் பறவைகளும், பக்ஷிகளும் அவளை சதா சூழ்ந்து சுற்றிக்கொண்டே இருக்கும். சுருங்கக்கூறின் அவளை உலகம் அனைத்தும் நேசித்தது; பணிந்து நின்றது; இருப்பி னும் அவளது இன்ப ஆத்மாவில் மின்னும் நட்சத்திரங்களைப் போன்று தேசபக்தியும், தெய்வபக்தியும், இல்லற பக்தியும் பிரகாசித்து நின்றன.

அவளைப் போலவே அவள் சகோதரி டிரங்க்—நிகியும் ரோஜாச் செடியிலிருக்கும் ரோஜாவின் மறு மலரைப் போன்றும் நட்சத்திரத்தோடிருக்கும் நட்சத்திரம் போன்றும் இருந்தாள். அவர்கள் இருவரும் அழகிலும் நிறத்திலும் மணத்திலும் ஒன்றான இருமலர்களைப் போன்றே இருந்தனர்.

தன் நாட்டிலும் தந்தையிடமும் இருமலர்களைப் போன்றே கமழ்ந்துகொண்டிருந்தனர்.

அந்தப் பழைய மன்னனான ஹங்வியோங்க் தன் ஜன்மப் பகைவனான கொடுங்கோலன் சீன கவர்னர் டா-டின் என்பவனைப் பற்றி மனத்திற்குள் நினைத்தபடியே தன் முன்னோர்களின் கல்லறைகளுக்கும் முன்னே மண்டியிட்டு இருப்பார். தன் பிதுர்களை தியானித்துவிட்டு, மந்திரவாதிகளையும், மதக் குருக்களையும் சோதிடர்களையும் கலந்தாலோசித்து விட்டு அவர் அநேகந்தரம் இந்த கல்லறைகளை மாற்றி மாற்றி கட்டியிருக்கின்றார்.

சோதிடன் ஒருநாள் அவ்வரசனிடம் சொன்னான். "அரசே! கீர்த்தியுற்ற தங்கள் தந்தையரின் கல்லறை இப்பொழுது ஓர் ரத்தின சர்ப்பத்தின்மீது கட்டப்பட்டிருக்கின்றது. இளவரசிகள் தங்கள் பழிக்குபழி வாங்குவார்கள் நம் புனித பூமியை ஆக்ரமித்திருக்கும் சீனர்களை வேட்டையாடி அவர்கள் பட்டத்திற்கு இளவரசிகளாக வருவார்கள்."

அதற்கு அந்த அரசன், "நான் இந்த ராஜ வம்சத்தின் கதியையே. புத்த பெருமானின் சக்தி மிகுந்த திருக்கரங்களில் ஒப்படைத்துவிட்டேன்" என்றான்.

மீண்டும் அச்சோதிடன் "மன்னவ! கடவுள் அருளிய திவ்ய சாஸ்திரத்திலே இவைகளெல்லாம் நீலக்கற்களால் பொறிக்கப்பட்டிருக்கின்றன. இந்த இரு இளவரசிகளும் நாம் வியட்டின் அரசிகளாக வருவர் என்பது திண்ணம். அப்படி வராவிட்டால் நீங்கள் எனக்கு என்ன ஆக்கினை வேண்டுமானாலும் செய்யுங்கள். என்னை சிரசாக்கினை வேண்டுமானாலும் செய்துவிடுங்கள்! எல்லாம் பெரிய வீரர்களுடையதைக் காட்டிலும், அவர்களது வாட்கள் அதிக சக்தி கொண்டவைகள்! அவர்கள் சீனர்களை வென்று வெற்றிமாலை அணிவார்கள் என்பது நிச்சயம்!" என்றான்.



டிரங்—டிராக்கும், டிரங்—நிகியும் சிறுவயது முதலே குதிரைச் சண்டையும், ஈட்டிச் சண்டையும், கற்று வந்தார்கள். உறங்—வியோங்க் மன்னன் அவர்களுக்கு அந்த வித்தைகளைச் சொல்லித்தர அவனிடம் அதிக விஸ்வாசமுள்ள ஓர் படைத் தலைவனிடம் ஒப்படைத்துவைத்தான். அவர்கள் இதயங்களில் நாளுக்கு நாள் பகைக் குணம் ஊன்றி வளர்ந்து வந்தது.

உறங்—வியோங்க் பட்டந்துறந்த அன்று முதலே, டா-டினே சகல அதிகாரங்களையும் கைப்பற்றிக்கொண்டு, அனாம் ராஜ்யத்தின்மீது கொடுங்கோல் செலுத்திவரலானான். எல்லா சீன அதிகாரிகளும் சிரச்சேதம் செய்யப்பட்டார்கள். கிராமங்களும், நகரங்களும் சூறையாடப்பட்டு கொளுத்தி தீக்கிரையாக்கப்பட்டன. ஜனங்கள் படுகொலை செய்யப்பட்டார்கள். அனாமிய ஏழைக் குடியான மக்களின்மீது அக்கிரம வரிகள் விதிக்கப்பட்டன. தேசபக்தர்கள் அதி யயங்கர, கொடிய சித்திரவதைகளுக்கும் ஆளானார்கள். எங்கும் சூறையும். கொள்ளையும் பஞ்சமும் சாவுந்தான். உதிரமர்காளி கோர நிர்த்தியம் புரிந்ததைப் போன்று நாடு பூராவும் காணப்பட்டது நாம்—வியட் மக்கள் எதிரிகளை பழிவாங்க மனதிற்குள்ளே திட்டமிட்டு வரலானார்கள்.

டிரங்க்—டிராக் உயர்தரமான ராணுவப் பயிற்சி பெற்றிருப்பினும், காதலின் விஷ வீச்சுக்களுடன் அவளால் எதிர்த்துப் போராட முடியவில்லை. அழகிய எல்லாப் பெண்களையும் போன்று, அவளும் காதலின் இன்பசேட்டைக்கு இலக்காக வேண்டியவளானாள்.

அன்று உன்—டே கிராமம் உற்சவத்தை சிறப்பாகக் கொண்டாடிக் கொண்டிருந்தது. சீனச் சித்திரங்களும், சர்பம் பொறித்த கொடிகளும் இளங்காற்றில் பட்டொளி வீசிப் பறந்தன. சரத் காலத்தில் மலரும் தாமரை மலர்களைப் போன்று, பொற் குடைகள் விரிக்கப்பட்டிருந்தன, வானத்தில் இடிமுழக்கம் செய்வதைப் போன்று டமாரச் சத்தம் எங்கும் எதிரொலித்துக்கொண்டிருந்துது.

தட்டில் அரிசி, மாமிச வறுவல் கோழிக்குஞ்சுப் பொறியல், வாழைப் பழங்கள், வாழ்த்து மலர்கள் சாம்பிராணி தூபங்கள் ஆகியவற்றை கையில் ஏந்திக்கொண்டு, அழகிய ஆடையாபரணங்களை யணிந்து எல்லா ஆண்களும் பெண்களும், கோவிலுக்குச் சென்றார்கள். டிரங்க்—டிராக்கும் டிரங்க்—நிகியும்கூட தங்கப் பல்லக்கில் ஏறிக்கொண்டு பணியாளர்கள் சூழ அங்கு செல்லலானார்கள், புத்தரை ஸ்தோத்தரித்து, கைகூப்பி வணங்கிவிட்டு தங்களை ரஷிக்குமாறு அப்பெருமானிடம் பிரார்த்தித்தார்கள்.

அந்த புத்த விஹாரத்திற்கு முன்னால், அவர்கள் நான்கு முறை வணங்கினார்கள். அவர்கள் உள்ளத்தில் ஏதோ பிரகாசம் உண்டாகியதைப் போல் அவர்கள் உணர்ந்து கொண்டு கிளம்பி தங்கள் பல்லக்கிற்கு வரலானார்கள்.

அவர்கள் வரும் சமயம் தை—சாக் என்ற ஓர் இளைஞன் டிரங்—டிராக்கை வணங்கியபடி சொன்னான் "இளவரசி! மேன்மைதங்கிய இளவரசியே! தங்கள் இராஜ குடும்பத்தின் பேரில் யான்கொண்டுள்ள விசுவாசத்திற்கும், ராஜபக்திக்கும் காணிக்கையாக இந்த தாமரை மலர்களை தங்களுக்கு சமர்ப்பிக்க என்னை அனுமதிப்பீர்களா!"

அவள் கொஞ்சம் தாமதத்துடன், "அழகாக இருக்கின்றன. மலர்கள் மீது நான் அதிக பிரியம்கொண்டவள், அவற்றை மறுக்கும் தைரியம் எனக்கு இல்லை."

அந்தச் சீன இளைஞன் கொஞ்சம் தைரியம் பெற்றவனாய்: "மஹாராணி! தங்களை நெருங்கி தங்கள் இனியக் குரலைக் கேட்கும் தங்கள் தெய்வ மணத்தை ஸ்பரிசிக்கும் பாக்கியம் என் பெரும் பாக்கியம் ஆகும்! அரசியே தங்கள் புகழ் உலகில் நாலா திசைகளிலும் வியாபித்து நிற்கின்றது. என் ஆத்மதாகமோ வானை நோக்கி பறந்து செல்லும் சிட்டுக் குருவியைப் போன்று தங்களிடம் பறந்து செல்கின்றன. என் இதயமோ மாடப் புறாவைப் போன்று சிறகடித்துத் தங்களை நோக்கி பறந்தோடுகின்றது. என் நினைவுகளோ



தங்களைச் சுற்றிலும் ஆயிரக் கணக்கான இன்பக் கனவுகளை சமைக்கின்றன. நான் தூங்குகின்றேனோ, விழித்துக் கொண்டு தான் இருக்கின்றேனோ, தெரியவில்லை. தாங்கள் உண்மையில் இங்கு இருக்கின்றீர்களா, அல்லது என் கனவின் காட்சியா என்பதும் தெரியவில்லை. அந்த என் கனவிற்கும் நிஜ வாழ்விற்குமிடையே, உண்மைக்கும் கற்பனைக்குமிடையே என்றால் சிறிது வித்தியாசந்தான் காணமுடிகிறது." என்றான்.

அவள் பதிலுக்கு, "ஐய, தங்கள் சொற்கள் சுவர்க்கத்திலிருந்து விழும் அமுதத் துளிகளைப் போன்று என் ஆத்மாவில் சொட்டுகின்றன. தங்கள் மதுரத் தோனி காதலின் தழுவலைப் போன்று என் காதுகளில் தழுவிச் செல்லுகின்றது. தங்கள் அழகிய நாமதேயம், ரோஜாவின் மணத்தைப் போன்று என் இதயப் பூங்காவிலே பதிந்து கமழ்கின்றது" என்றாள்.

"இளவரசி! தங்கள் மொழிகள் என் வறண்ட இதயத்திலே ஓர் நம்பிக்கையையும், சந்தோஷத்தையும் விதைக்கலாயின. தங்கள் பூங்காவைப் பாதுகாக்கும் ஓர் காவலனாக நான் இருத்தல் கூடாதா? தங்கள் விரலில் அணியும் ஓர் நீலக் கல் மோதிரமாக நான் இருத்தல் கூடாதா?"

"ஐயா! தங்கள் புகழ் மொழிகள் என்னை வெட்கமடையச் செய்கின்றன. ஆனால் என் கதியோ, ஓர் பட்டுத் துண்டைப் போன்று என் வயோதிகத் தந்தையின் கையிலே இருந்து வருகின்றது. அவர் என்னை ஓர் மலையைத் தாண்டச் சொல்லினும் நான் தாண்டுவேன். என்னை கடலில் குதிக்கச் சொன்னாலும், அப்படியே குதிப்பேன். எனக்கு நேரமாகிறது. என் சகோதரி எனக்காகக் காத்துக்கொண்டிருப்பாள். போக அனுமதியுங்கள்!"

இதயத்தில் ஆயிரக்கணக்கான மனோ சலனங்கள் தெறித்துக்கொண்டிருக்க டிரங்க்-டிராக் தை-சாக்கை வணங்கிவிட்டு, விரைந்து சென்று பல்லக்கில் ஏறி புன்னகையுடன் மறைந்து விட்டாள்.

தை-சாக் அவள் அழகிலும், அவளைப்பற்றிய இன்பக் கனவுகளிலும் மயங்கிப் போனான். லாகிரி கொண்டு, அப்படியே ஆணி அறைந்தாற்போல் வெகுநேரம் நின்றுகொண்டிருந்தான். கோயிலில் உற்சவமும் நடந்து முடிந்தது.

அதன் சில வாரங்களுக்குப்பின் தை-சாக் நீண்ட ராஜ அங்கி அணிந்து குடும்பத்தவரும் பணியாளர்களும் சூழ: மன்னன் ஹங்-வியோங்கினிடம் வந்து தன்னையே சமர்ப்பணம் செய்தான். அவன் கொண்டுவந்த கல்யாண சீதனங்களெல்லாம், அரசன் சிம்மாதனத்தின் முன் வைக்கப்பட்டன. அவற்றுள் நாலு பாட்டில் நல்ல ஒயினும். இருபது ஜோடி யானைத் தந்தங்களும், நூறு ரோல் சீனப் பட்டும், தங்கப் பாளங்கள் ஆயிரமும், முத்துக்கள் இழைத்த தாம்பூலப் பெட்டிகள் நூறும், தங்கச் சங்கிலி ஒன்றும் இன்னும் அனேக விலையுயர்ந்த சாமான்களும் இருந்தன. தை-சாக்கின் கல்வியையும் அவனது ராணுவ பயிற்சியையும், அவன் திறமையையும் கண்டு' ஹங்-வியோங் தன் மகள் டிரங்க்-டிராக்கை அவனுக்கு விவாகம் செய்து வைத்தான்.

தை-சாக் அந்த ராஜ குடும்பத்தின் தலைவனாக வரவே அவன் நரம்புகளில் ஓடும் வீர ரத்தம், சீனர்களை துரத்தியடித்து, ராஜ்யத்தை திரும்பிக் கைப்பற்றுமாறு, அவனைத் தூண்டி தீர்மானிக்கச் செய்தது. அவன் தன் மனைவியுடனும் மைத்துனி டிரங்க்-நிகியுடனும் கலந்துகொண்டு, படை திரட்டி மக்களை போருக்கு தயாரிக்கலானான். டா-டின் ஒற்றர்களும் அவர்களும் சும்மா இல்லை. வியாபாரிகளைப் போன்றும், வைத்தியர்களைப் போன்றும், பிச்சைக்காரர்கள் சமையற்காரர்களைப் போன்றும் வேஷம் போட்டுக்கொண்டு வந்து தை-சாக்கின் ஒவ்வொரு விஷயங்களையும், ஒவ்வொரு செய்கைகளையும் உளவறிந்து செல்லலாயினர். டா-டின் இவற்றை அறியவும் தை-சாக்கை கொன்றுவிட முடிவு கட்டலானான். உடனே கபட வேடந் தரித்து, தன் அரண்மனையில் பெரிய விருந்தொன்றிற்கு ஏற்பாடு செய்தான்; டிரங்க்-டிராக்கின் புருஷனை விருந்துக்கு அழைத்தான். சூதறியா தை-சாக்



கொஞ்சமும் சந்தேகமின்றி, நிராயுதபாணியாயும் தனியனாயும் விருந்துக்குச் சென்றான். டா-டின் மிக்க மரியாதைகளுடனும், உபசாரங்களுடனும் தை-சாக்குக்கு நல்ல வரவேற்பளித்தான். ஓர் பெரிய அதிகாரிக்கு செய்யக்கூடிய மரியாதைகள் யாவும் வழுவாது முறைப்படி செய்தான்.

உத்தரவிட்டான்: "கொஞ்சம் ஒயின் ஊற்றுங்கள். தை-சாக் குடிக்க கொஞ்சம் ஒயின் ஊற்றுங்கள்."

தங்கக் கிண்ணங்களில் நிறைய நிறைய ஊற்றி அவன் எதிரே வைக்கப்பட்டன' தை-சாக் ஒவ்வொன்றாக எடுத்து காலி செய்யலானான்.

''பாடுங்கள்! எனது ராஜ விருந்தினருக்கு ஓர் இனிய காதற் கீதம் பாடுங்கள்,''—டா-டின் கட்டளை இட்டான்.

இனிய மதுரமான வீணை, யாழ், தம்புரா போன்ற வாத்தியங்களினூடே, பாடல்கள் 'நட்சத்திரங்களை'ப் பற்றிய கானாமிர்த பாடல்களைப் பாடி தை-சாக்கின் இதயத்தை இனிய சங்கீதத்தால் நிரப்பினார்கள், பாடகர்கள், வாத்தியங்களின் இன்னிசைகளாலும், காதற் கீதங்களாலும் அவனை மயக்கச் செய்தபோது, பணிப் பெண்கள் மேலும் மேலும் ஒயினை ஊற்றிக் கொடுத்துக்கொண்டே இருக்கலானார்கள். தை-சாக் அந்த கொஞ்ச நேரத்திலே மூன்று பாட்டில் ஒயினையும், குடித்துத் தீர்த்துவிட்டான்:

"கொஞ்சம் நாட்டியம் ஆடுங்கள்! அந்த மன்னருக்கு கௌரவம் அளிப்பதற்கு. ஓர் நாடக நடனம் செய்யுங்கள்.' டா-டின் கட்டளை இட்டான்.

இசையும், தாளமும், வாத்தியங்களும் முழங்க நாட்டியப் பெண்கள் மேகங்களினின்றும் பறந்து வருவதைப் போன்று கைகளையும், கால்களையும், தலையையும் நீட்டி நெளித்து அலங்கிர்தமாக தேவ நடனம் அபிநயிக்கலானார்கள். அந்த மது போதையும் ஆடலும் பாடலும் பெண்களின் ஸ்பரிசமும் தை-சாக்கை ஓர் ஆழ்ந்த சிந்தனைக்குள் அமிழ்த்திப்போடலாயிற்று.

அவனது நாட்டைப்பற்றிய நினைவுகளும், குடும்பத்தைப் பற்றிய நினைவுகளும் அவன் நெஞ்சத்தில் தீப்பொறிகளைப்போன்று சிதறி எழலாயின. அப்பொழுது, அதே டா-டின் இரத்த வெறி பிடித்த டா-டின் மட்டுமே அங்கு இருந்தான். அவன் இதயத்தில் புயல் எழுவதைப் போன்று ஆத்திரம் பொங்கி எழுந்தது. நெஞ்சத்தில் பகைமை தீப்பற்றி எரிந்தது. அவனை அச்சுறுத்தும் அந்த அபாயங்களெல்லாம் மறந்து, தை-சாக் அவன் முகத்தில் காரி துப்பிவிட்டான். அவன் மேல் பாய்ந்து நன்றாய் அவனைக் குத்தியும் விட்டான். வஞ்சக டா-டின் உடனே தை-சாக்கை கைது செய்தான்; ராஜத் துவேஷ குற்றஞ் சாட்டி, அவனுக்கு மரண தண்டனை விதித்தான். நிரந்தரமான தை-சாக் கொலைஞர்களிடம் ஒப்புவிக்கப்பட்டான். கொலைஞர்கள் அவன் வாயையும், கையையும் கால்களையும் கட்டி அவனை ஜாடிக்குள் திணித்தனர். அவன் உடல் பூராவும் கொதிக்கும் வெந்நீரை ஊற்றினர். இரண்டு மணி நேரம் டா-டின் கட்டளைப்படிக்கு தை-சாக் சித்ரவதை செய்யப்பட்டான். அவனை வெளியே எடுத்த பொழுது அவன் உடல் அவித்தெடுத்த கோழிக்குஞ்சு போன்று இருந்தது. டா-டின் அவனது சரீரத்தை அரண்மனையில் இடது புறத்தில் புதைத்துவிடும்படி உத்தரவிட்டான்.

இதைக் கேள்வியுற்ற டிரங்க்—டிராக் இதயம் உடைந்து போய், மனம் தளராது மலையடிக்குச் செல்லலானாள். அங்கிருந்த ஜனங்களுக்கு ஓர் பிரகடனம் வெளியிட்டாள். வீரம் மிகுந்த நூற்றுக்கணக்கான ஆயிரக்கணக்கான அனாம் தேச பக்தர்கள் அவர்கள் கட்டளைக்குப் பணிந்து அங்கே மலையடிக்குச் சென்றனர். டிரங்க்-நிகியையும் மற்றும் பல உண்மையுள்ள சேனைத் தலைவர்களையும் கலந்தாலோசித்து, அவர்கள் சம்மதத்துடன் ஓர் படை திரட்ட முனையலானாள். அந்த இரு இளவரசிகளின் ஓர் வருட தீவிர பிரயாசையின் பலனாய், ஆயிரம் பேர் கொண்ட ஓர் சிறந்த யுத்தப் படை ஒன்று திரட்டப்பட்டது. டிரங்க்-டிராக்கும், டிரங்-நிகியும் ஓர் நாழியும்



வீணாக்க நினைக்கவில்லை. வாளும் ஆயுதங்களும் ஏந்தி வெள்ளைக் குதிரைகளில் ஏறிக்கொண்டு, டா-டினை எதிர்த்து படையெடுக்கலானார்கள்: அந்த அனாம் நாட்டு தேச சரித்திரத்திலேயே குறிப்பிடத்தக்க ஓர் பெரும் யுத்தம் அந்த இரு ராணி படைகளுக்கும், சீனப் படைகளுக்கும் இடையே நடக்கலாயிற்று. வீரர்கள் வாள்களாலும், ஈட்டிகளாலும் போரிட்டு டா-டின் கோட்டையை தகர்க்க ஆரம்பித்தார்கள். இரு படைகளுக்கும் வியக்கத்தக்க ஓர் வெஞ்சமர் நடக்கலாயிற்று.

அந்த இரு இளவரசிகளின் வீரமிகுந்த நாட்டுப் பற்றை யுணர்ந்த அனாமிய வீர சிப்பாய்கள் சிங்கங்கள் போன்று ஆவேசத்துடன் சண்டையிட்டார்கள். டா-டின் தோற்று போய் கைதியாக பிடிபட்டான். அந்த ஒரே மாதத்திலேயே டிரங்-டிராக்கும் டிரங்-நிகியும் சுமார் அறுபது நகரங்களுக்கு மேல் சண்டையிட்டுக் கைப்பற்றலானார்கள்.

தை-சாக்கின் பழிக்குப் பழி வாங்கிய பின்னர் தன் தேச மக்களின் அபகீர்த்தியைப் போக்கும் பொருட்டு நாம்—வியாட்டின் இளவரசிகளாக தங்களைப் பிரகடனம் செய்துகொண்டார்கள்.

அந்த இரு இளவரசிகளின் வீரத்தையும், புகழையும் கேள்விப்பட்டு, சீன சக்கரவர்த்தியான க்வாங்-வூ அவர்களுடன் சமாதானம் செய்துகொள்ள மூன்று வருடமாய் முயற்சித்து வந்தான். தன் ஸ்தானிகர்கள் மூலம் ஒவ்வோர் வருடமும் வாழ்த்துக்களுடன் பல அரிய விலையுயர்ந்த பொருள்களையும் அனுப்பி வந்தான். நாட்டின் சமாதானத்தையும், சுபிக்ஷத்தையும் பாதுகாக்கும் நோக்கத்துடன், டிரங்-டிராக்கும், டிரங்-நிகியும் தங்கள் ஸ்தானிகர்களையும் சீன சக்கரவர்த்திடம் அனுப்பிக்கொண்டு வந்தார்கள். சமாதானம் நடந்து கொண்டிருக்கும்பொழுதே, மா-வியன் என்ற பெரிய சேனாதிபதியின் தலைமையில் சீனப் படைகள் நாம்-வியாட்டின் எல்லையைக் கடந்து வரலாயிற்று.

மா-வியனின் அக்ரமப் படையெடுப்புக்குப் பணிய வேண்டும், அல்லது எதிர்த்து வீரச் சமர் செய்தாக வேண்டும்.

டிரங்-டிராக்கும், டிரங்-நிகியும் போர் முரசு கொட்டலானார்கள். அவர்களும் வெள்ளைக் குதிரைகளில் ஏறி எதிர்த்துப் போராடலானார்கள். போர் மும்முரமாகி இரு தரப்பு சேனைகளிலும் சிப்பாய்கள் ஏராளமாக கொல்லப்பட்டு ரத்த வெள்ளம் ஓடலாயிற்று. கத்தி, ஈட்டி, உடைவாள், கட்டாரி ஆகிய பயங்கர கூரிய ஆயுதங்கள் உபயோகிக்கலாயின. இளவரசிகளின் ஆணைக்குக் கீழ்ப்பணிந்து, அனும் தேசப் படையினர் தங்கள் உயிரையும் ரத்தத்தையும் பலி கொடுத்து தங்கள் தாய்நாட்டின் பூமியை ஒவ்வோர் அங்குலமாகப் பாதுகாத்தனர். சீறிப் பாயும் அம்புகளுக்கும், ஈட்டிகளுக்கும் இடையே படைகளும் இளவரசிகளும் நின்று போர் செய்தார்கள். அவர்களைச் சுற்றிலும் அவர்கள் வாள்களின் உக்ர வீச்சுக்கு இலக்கான சீன சிப்பாய்களின் தலைகள், மரங்களினின்றும் விழும் சருகுகளைப் போன்றும், பழுத்தப் பழங்களைப் போன்றும் விழுந்து உருண்டோடிக் கொண்டிருந்தன. அவர்களது வீரத்திற்கும், தீரத்திற்கும் முன்னே மா-வியன் சக்தியற்று போனான். முடியாத நிலைமையில், ஆக்ரோஷத்தில் சிக்குண்ட சிங்கத்தைப்போன்று தவி தவித்தான். உடனே தன் தந்திரத்தை புது முறையில் மாற்ற நினைத்தான். அவர்களுடன் போரிட்டு வெல்வதற்குப் பதிலாக சன்-டே மாகாணத்தையும், அந்த இளவரசிகளையும் தீக்கிரையாக்கி விடுவதென்று திட்டமிட்டான். அந்நகரைச் சுற்றிலும் வைக்கோலையும், விறகுகளையும் ஏராளமாய் போட்டு, ஆயிரக்கணக்கான பீப்பாய் மண்ணெண்ணெயை ஊற்றி காற்றடிக்கும் ஓர் நள்ளிரவில் தீ மூட்டிவிட்டான். தீ பற்றிக்கொண்டது. காற்றும் ஓங்கி அடிக்கவே வீட்டுக்கு வீடு மூலைக்கு மூலை தீப் பரவி நகரெங்கும் தீப் பற்றி எரிந்தது. அத் தீயின் மத்தியில் மாட்டிக்கொண்ட அவ்விரு இளவரசிகளும் அவர்கள் படைகளும் எரிந்து பஸ்பமாகி யிருப்பர்; ஆனால் தெய்வ சக்தி அவர்களை கண்காணித்தது! ஆண்டவன் மழையை வர்ஜிக்க செய்தான்.



பெரும் மழை பெய்யவே, தீ யணைந்து போகலாயிற்று. இரு ராணிப் படைகளும் விரட்டப்பட்ட மந்தை மாடுகள்போன்று எதிரிகளை விரட்டலாயினர். சீனர்கள் மீண்டும் போரிட்டும், கைப்பற்றிய நகரங்களையும் விட்டுவிட்டு, தோல்வியுடன் ஓட வேண்டியவர்களானார்கள். மா-வியன் ரொம்பவும் ஆக்ரோஷமடைந்தான். சினக் கடல் பொங்கி எழுவதைப்போன்று அவனுக்கு ஆத்திரம் பொங்கி எழுந்தது. அவமானப் அடைந்த குரலில் கர்ஜனை செய்தான்.

"நான் மா-வியன் சேனையிலேயே புகழ்பெற்ற மாபெரும் தளகர்த்தன்; சிறந்த யுத்த வீரன். இச் சிறுமியருடன் நான் ஒருகாலும் தோல்வியுற சம்மதிக்க மாட்டேன்! நான் இறக்கத் தயார்! ஆயிரம் முறை இறக்கத் தயார்!"

அவன் மூன்று நாட்கள் ஒன்றுமே சாப்பிடவில்லை. அந்த மூன்று இரவுகளிலும் அவன் கொஞ்சம்கூட தூங்கவில்லை. இரவும் பகலும் சதா ஆழ்ந்த சிந்தனையிலேயே இருந்தான்.

மூன்றும் நாள் இரவு, மா-கியூவின் தூண்டுதலின்பேரில் தந்திரத்தால் வெல்வதென்ற ஒரே முடிவுக்கு வந்தான். இந்த இரு பெண்களின் வீர தீரங்களை அறிந்த அவன் போர் முறையில் நாட்டங் கொள்ளவில்லை. அவன் செய்ய வேண்டிய உபாயங்களை நெஞ்சத்தில் நிலை நிறுத்திக்கொண்டான். போர் முரசு கொட்ட, டமார சப்தமுடன் மணியோசையும் முழங்க சன்-டே பூமியெங்கும் ஒரே யுத்த களமாகியது. ராணிகளின் வீரர்கள் யானைகளின் மீது ஏறி, வீரச் சமர் புரிந்தார்கள். ராணிகளும் சும்மா இல்லை. வெற்றியிலும் வீரத்திலும் நம்பிக்கை கொண்ட அவ்விரு வீராங்கனைகளும், தங்கள் வெள்ளைக் குதிரைகளில் ஏறி, ஆயுதந் தாங்கி, படைகளுக்கு தலைமை வகுத்து, முன்னணியில் போரிட்டார்கள். "இந்த இரு அழகிய பெண்களையும் யார் ஒருவர் உயிருடன் பிடித்துக் கொண்டு வருகிறீர்களோ, அவனுக்கு அவர்கள் இருவரையும் கல்யாணம் செய்து தருகிறேன்" என அவன் சொன்னதுதான் தான் தாமதம். வெறி பிடித்த அந்தப் படையினர், கிராதக மொழிகளைச் சொல்லிக்கொண்டு வெறி பிடித்த நாய்களைப்

போன்றும் ஓநாய்களைப்போன்றும் அவர்களை நோக்கி ஓடலானார்கள்.

இந்தக் கொடிய காட்சியைக் கண்ட டிரங்க்-டிராக்கும், டிரங்க்-நிகியும் வெட்கமடைந்து கொடிகளால் தங்கள் முகத்தை மறைத்துக்கொண்டு ஓட தலைப்பட்டார்கள். அவர்கள் அழகிலும் எழில் வதனத்திலும் மயங்கிப்போன சீன சிப்பாய்கள் ஓநாய்களைப்போன்று அவர்களை விரட்டிச் சென்றனர். அந்த வீரமணிகள் தங்கள் வாள்களையும் ஈட்டிகளையும் கொண்டு அக் கிராதகக் கூட்டத்தை பிளந்து வழி செய்துகொண்டு செல்லலாயினர். இரு புறங்களிலும் சீனர் தலைகள் உருண்டோடின. உடனே சிப்பாய்கள் உடைகளைக் களைத்தெறிந்து விட்டு, வெட்டுக்கிளிகள் கூட்டத்தைப் போன்று அவர்களைப் பின்பற்றிச் சூழ்ந்து சென்றனர். வெட்கத்தாலும், கோபத்தாலும் முகம் சிவந்துபோய் டிரங்க்-டிராக்கும், டிரங்க்-நிகியும் ஓடலானார்கள். தன் மானங்கெட்ட ராக்ஷச செய்கைளில் வெற்றியைக் கண்ட மா-வியன் திமிர் தலைக்கேறிப்போய் அவனும் ஆடைகளை எறிந்துவிட்டு நிர்வானமாய் வரலானான். ரோமம் செறிந்த அவன் உடல் புயலிலடிபட்டு ஓய்ந்த சோளக் கொல்லையைப் போன்றிருந்தது. அவனைக் காட்டிலும் அவ்வளவு அருவருக்கத்தக்க கோர சொரூபம் வேறொன்றும் இருக்க முடியாது. அவனை ஓர் அரக்கன் என்றோ, வாலில்லாக் குரங்கென்றோ சொல்லி விடலாம். படைகளிடையே முன்னேறி, குதிரை மேலேறிக் கொண்டு, அவனும் அவ்விளவரசிகளை விரட்டலானான். திரும்பிப் பாராது, டிரங்க்-டிராக்கும், டிரங்க்-நிகியும் கற்பைக் காக்க ஓடலாயினர். படைகள் தோல்வியுறுவதைக் கண்ட அணுமிய சிப்பாய்கள் மனம் சோர்ந்து, பலஹீனமாகி பின் வாங்கத் தலைப்பட்டார்கள். இளவரசிகள் கடைசி முறையாக படைகளை ஒன்று திரட்டி எதிர்த்துப் போராட முயன்றனர். ஆனால் அந்தோ! அது நேரம் கடந்துவிட்டது!

சீனர்கள் அவர்களைச் சுற்றி வளைக்கலாயினர். நாற்புறமும் அவர்கள் சூழ்ந்துகொள்ளவே, அவ்விரு இளவரசிகளும்



இரு வீர சிங்கங்களைப்போன்று தங்களைப் பாதுகாப்பதில் முனையலானார்கள். அவர்கள் கரங்களில் ஏந்திய வீர வாட்கள் ஆயிரக்கணக்கிலே சீனர்களின் தலைகளை வெட்டி வீழ்த்தலாயின. கைகளிலும், கால்களிலும் காயம் ஏற்பட்டும்கூட சளையாது தொடர்ந்து அவர்கள் வீரச்சமர் நடத்தினார்கள்.

டே நதியை நெருங்கியதும் படைகளோ படைத் தலைவர்களோ இல்லாத தங்கள் நிராதரவான நிலைமையைக் கண்ட அவ்விரு இளவரசிகளும் தங்கள் கற்பைக் காக்க வீர கர்ஜனை புரிந்தார்கள்.

"மானமிழப்பதைவிட வீரச் சாவு மேல்!" டிரங்க்-டிராக் உரக்கச் சொன்னாள்.

"அவமானத்தைக் காட்டிலும் வீர மரணமே மேல்!" டிரங்க்-நிகியும் அப்படியே எதிரொலித்தாள்.

வெள்ளம் அவர்களை அடித்துக்கொண்டு சென்றது. மாவியன் தன் படைகளுடன் டே நதியை அடைந்தபொழுது, கரைகள் வெறுமையா யிருப்பதையும், மரங்கள் துக்கிப்பதையும் கண்டான். உடனே அந்தச் சீனத் தலைவன் தன் வேட்டைகளை விட்டு பூமியைத் தோண்டிப் பார்க்கச் சொன்னான். அணும் நாட்டின் அவ்விரு அழகிய வீரத் திலகங்களும் மண்ணிற்குள்ளா ஒளிவார்கள்!

மா-வியன் கட்டளைப்படி நூற்றுக்கணக்கான படகுகளும் தெப்பங்களும் விட்டு ஆற்றில் தேடச் செய்தார்கள். அந்தத் தைரியமுள்ள செம்படவர்களும், மற்றவர்களும் தண்ணீருள் மூழ்கி, அடி தரை வரையுங்கூட தேடிப் பார்த்தார்கள்; ஓர் நாள் பூராவும் தேடி, கடைசியாக இராஜ குமாரிகளின் அழகிய பிரேத உடல்களைக் கண்டுபிடித்தார்கள். தன் வஞ்சத்தைத் தீர்க்க எண்ணிய பாதகன் மா-வியன் அவ்விரு திலகங்களின் உடல்களைப் பிளந்து, அவர்கள் இருதயங்களைக் கொண்டு வருமாறு தன் ஆட்களுக்கு கட்டளையிட்டான்.

மேள வாத்தியங்கள் முழங்க, அந்த இரு இருதயங்களும் மா-வியன் சிம்மாசனத்தின் முன் கொண்டுபோய் வைக்கப்

பட்டன. அவற்றை அவன் தங்க கிண்ணங்களில் வைத்து அதில் நிறைய ஒயினை ஊற்றி சீன சக்கரவர்த்துக்குக் கொண்டுபோய் வெகுமதியாக அளித்தான். பின், அவ்விரு இளவரசிகளின் உடல்களையும் கண்டந் துண்டங்களாக வெட்டி, அவற்றை காக்கை கழுகுகளிடம் எறியும்படி தன் ஆட்களுக்கு உத்தரவிட்டான்.

சாங்-டே நதியின் இரு பச்சைக் கரைகளிலே அந்த இரு இளவரசிகளான டிரங்க்-டிராக்கும், டிரங்க்-நிகியும், அழகிய கோவில்களில் அனும் நாட்டின் வீரப் பெண் திலகங்களாக வைக்கப்பட்டிருப்பதை இன்றும் காணலாம். அந்தக் கோவில் களுக்கு "நாந்த்-தி" அல்லது "கற்பரசிகள் தகர்" என்றும், அவர்களுக்கு "நாம்-வியாட்டின் தெய்வங்கள்" என்றும் பெயரிட்டு பட்டம் சூட்டி, அந்த வீராங்கனைகளை வணங்கிவந்தான் அனுமிய சக்கரவர்த்தி.

